# முயற்சி திருவினையாக்கும்

எம். சரவணன்

வெளியிடுவோர்:
ஏவி.எம்.புரொடக்ஷன்ஸ்,
ஏவி.எம். ஸ்டுடியோ
சென்னை - 600 026.

| | | |
|---|---|---|
| முதற்பதிப்பு | : 19.04.1993 | - 3000 பிரதிகள் |
| இரண்டாம் பதிப்பு | : 19.05.1993 | - 3000 பிரதிகள் |
| மூன்றாம் பதிப்பு | : 30.06.1993 | - 3000 பிரதிகள் |
| நான்காம் பதிப்பு | : 11.09.1993 | - 3000 பிரதிகள் |
| ஐந்தாம் பதிப்பு | : 10.02.1994 | - 3000 பிரதிகள் |
| ஆறாம் பதிப்பு | : 11.10.1995 | - 2000 பிரதிகள் |
| ஏழாம் பதிப்பு | : 08.03.1997 | - 2000 பிரதிகள் |
| எட்டாம் பதிப்பு | : 18.03.2000 | - 3000 பிரதிகள் |

விலை ரூ. 30/-
– ஏ.வி.எம்.



விற்பனையாளர்:

வானதி பதிப்பகம்
13, தீனதயாளு தெரு,
தி.நகர், சென்னை - 600 017.

அச்சிட்டோர்: வடபழனி அச்சகம், சென்னை - 600 026.
புத்தக அமைப்பு: உகி.
ஒளி அச்சுக்கோர்வை: எழில் பிரிண்ட்ஸ்.

முன் அட்டை: வண்ணப்படம் ராஜீவ்மேனன்
பின் அட்டை: (Late) T.சங்கர் (ex-SCREEN)

# பொருளடக்கம்

# முன்னுரை



என் தந்தை திரு. ஏவி. மெய்யப்பன் அவர்களிடம் ஒரு மகனுக்கு இருக்கக்கூடிய அன்பு, பாசம் இவற்றோடு மிகுந்த மதிப்பும் மரியாதையும் எனக்கு எப்போதுமே உண்டு. அது அவர் எங்களை வளர்த்து வழி நடத்திச் சென்றதனால் மட்டுமல்லாமல், அவர் வாழ்ந்த சிறந்த வாழ்க்கை முறையைப் பார்த்து நான் கற்றதலாலும்தான்.

இப்படி நல்லவற்றைக் கற்றிருக்கிறேன் என்பதை நான் உணர்ந்து கொண்டதற்கு முக்கிய காரணங்கள், எனது பலவீனமாக இருந்த கோபத்தை விட்டொழித்ததும், என்னை நானே விமர்சித்துத் திருத்திக் கொள்ளப் பழகியதும்தான்.

ஆங்க்ரிமேன் (Angryman) - அதாவது: 'கோபக்காரன்' என்று தந்தையார் செல்லமாக அழைக்கும் அளவுக்கு என்னிடம் ஊறிப்போயிருந்த கோபத்தினால் எனக்குப் பலமுறை மனதுக்குள் உறுத்தல்கள் ஏற்பட்டிருக்கின்றன. 'என்ன இப்படிப் பேசிவிட்டோமே, ஏன் அப்படி நடந்து கொண்டோம்' என்று வேதனையோடு யோசித்த நாட்கள் பல இருந்திருக்கின்றன.

வெளிப்படையாக நம் பலவீனங்களையோ, கெட்ட குணங்களையோ, அழுக்கடைந்த எண்ணங்களையோ முழுமையாக ஒப்புக் கொள்வது எவருக்குமே இயலாது என்று நினைக்கிறேன். ஆனால் நம் மனதுக்குள் இவற்றைப் பற்றி யோசித்து, அலசிப் பார்ப்பதில் எந்தவித தயக்கமோ தடையோ இருக்கக் கூடாது. நம்மை நாமே ஒரு அணுகூட விடாமல் கூறு போட்டு ஆராய்ந்து நமக்குள் அறிவதை யார் தடுக்க முடியும்? இதைத்தான் நான் முயற்சித்தேன், இன்றும் முயற்சி செய்து வருகிறேன்.

இப்படி சுயமாக விமர்சனம் செய்வதோடு நிற்காமல், 'இனிமேல் இப்படிப் பேசக்கூடாது, கோபத்தை அடக்க வேண்டும்' என்று தீர்மானம் செய்து கொண்டு எனக்குள் நானே சின்னச் சின்ன மாற்றங்களைச் செய்ய முயற்சி செய்தேன். இவற்றால் பலன் உடனடியாகக் கிடைப்பதையும் கண்டு கொண்டேன்.

இப்படி நான் அறிந்து மாற்றிக் கொண்டவை, எனக்குள் மாறுதல் ஏற்படுத்தியவற்றைப் பற்றியெல்லாம் சிந்தித்துப் பார்க்கும்போது, இவை எந்த மனிதருக்கும் இருக்கக்கூடிய பொதுவான பலவீனங்களாகவே தோன்றின. அப்படியானால், முழுமையாக ஒழித்து விடவோ அல்லது ஓரளவுக்குக் குறைக்கவோ எனக்கு உபயோகமானவை மற்றவருக்கும் உபயோகப்படுமே என்கிற எண்ணமும் தோன்றிற்று.

'முயற்சி திருவினையாக்கும்' புத்தகம் பற்றிய என் சிந்தனை துவங்கியது இப்படித்தான்.

லயோலா கல்லூரியில் நடந்த ஒரு விழாவுக்குத் தலைமை தாங்கும்படி என்னைக் கேட்டிருந்தார்கள். அவர்கள் அழைப்பை ஏற்பதில் எனக்குத் தயக்கம் இருந்தது. காரணம், அதிகமாக மேடைகளில் பேசியோ, மாணவர்களிடையே உரையாற்றியோ பழக்கமில்லை என்பதோடு இன்னொரு காரணமும் உண்டு.

பொதுவாக, பள்ளிக்கூடங்களிலும் கல்லூரிகளிலும் விழாக்களுக்குத் தலைமையேற்று நடத்துபவர்கள், நன்கு படித்த அறிவாளிகளாகவும், மாணவர்களுக்கு ஒரு முன்னுதாரணமாகத் திகழும் அளவுக்கு சாதனையாளர்களாவும் இருக்க வேண்டும் என்பது என் அபிப்ராயம். நான் அதிகம் படிக்காதவன் என்பதால்தான் அங்கு செல்ல எனக்குச் தயக்கம். என்றாலும் அவர்களின் அன்பான வற்புறுத்தலின் பேரில் மறுக்க முடியவில்லை.



மேடையேறியதும், முதலில், ''உங்களைப்போல் நானும் ஒரு காலத்தில் மாணவன்ாக இருந்தவன்தான். எனவே, பிடிக்காத பேச்சைக் கேட்பது உங்களுக்கு போரடிக்கும் என்பதும் புரிகிறது. என் பேச்சும் அப்படி போரடித்தால் உடனே பலமாகக் கை தட்டுங்கள். நான் புரிந்து கொண்டு பேச்சை நிறுத்தி விடுகிறேன்'' என்றேன். மறு நிமிடம் மாணவர்களிடமிருந்து பலத்த கரவொலி எழுந்தது! நானும் ''நன்றி, வணக்கம்'' என்று கூறிவிட்டு உட்கார்ந்து விட்டேன்! ஆனால் மாணவர்கள் என்னை விடவில்லை. ''நாங்கள் சும்மா கை தட்டினோம், நீங்கள் தயவு செய்து பேசுங்கள்'' என்றார்கள்.

அந்த அனுமதிக்குப் பிறகு நான் பேசத் துவங்கினேன். நல்ல குணங்களாக என் மனதுக்குத் தோன்றிய பல விஷயங்களைப் பற்றியெல்லாம் சொன்னேன்.

ஆசிரியர்கள் ஏணி போன்றவர்கள், நம் வளர்ச்சிதான் அவர்களுக்கு சந்தோஷம் தரும், எனவே அவர்கள் ஆசீர்வாதங்களைப் பெற முயற்சியுங்கள், அவர்களைக் கிண்டலாகப் பட்டப் பெயர்களை வைத்து அழைக்காதீர்கள் என்றேன். மேலும், நட்பு என்பது மிக முக்கியம், எனவே நண்பர்களை மறந்து விடாமல் விலாசம் வாங்கி வைத்துக் கொண்டு வாழ்நாள் முழுவதும் தொடர்பைத் துண்டிக்காமல் நட்போடு இருக்க வேண்டும் என்றெல்லாம் எனக்குத் தெரிந்த முறையில் பேசினேன்.

ஆச்சர்யம் பாருங்கள்! துரும்பு விழுந்தால்கூட ஒலி கேட்கும் அளவுக்கு நிசப்தமாக இருந்து என் பேச்சைக் கேட்டார்கள் மாணவர்கள்!. அவர்கள் இப்படி அமைதியாக இருந்தது வியப்பான விஷயம் என்று கல்லூரி முதல்வர் கூட பின்னர் குறிப்பிட்டு என்னைப் பாராட்டினார்.

நம்மாலும் சில நல்ல செய்திகளைக் கூற முடியும், மற்றவருக்குப் பயன்படும் விதத்தில் அவற்றைத் தெளிவாக்க முடியும் என்று ஒரு தன்னம்பிக்கையும் ஆர்வமும் எனக்குள் உண்டாகி, நான் உணர்ந்தவைகளைப் புத்தகமாகக் கொண்டுவரும் முயற்சியில் இறங்க வைத்தன.

இந்த முயற்சியை மேலும் வலுப்படுத்தியது, ஒரு வானொலிப் பேட்டி. சென்னை வானொலியின் 'இளையபாரதம்' நிகழ்ச்சிக்காக அப்போது நிகழ்ச்சித் தயாரிப்பாளராகவும் இப்போது மதுரை வானொலி நிலையத்தின் இயக்குனராகவும் உள்ள குமாரி எஸ்.லீலா அவர்கள் என்னைப் பேட்டி கண்டார்கள். ''நீங்கள் இயல்பாகவே சிரித்த முகமாகத்தான் இருப்பீர்களா, அல்லது வேண்டுமென்று



கிரிதாரி பிரசாத்

இனிமையை முகத்தில் வரவழைத்துக் கொண்டீர்களா?'' என்று மிக எதார்த்தமாக ஒரு கேள்வி கேட்டார்.

''முன்பெல்லாம் நான் சுபாவத்தில் ரொம்ப கோபக்காரன் என்று பெயர் வாங்கியிருந்தேன், இப்போது அதை உணர்ந்து என்னை முயற்சி செய்து மாற்றிக் கொண்டு இனிமையாகத் தோற்றமளிக்கப் பழகி வருகிறேன். என் இயல்பை மாற்ற உதவிய சில விஷயங்களைப் பற்றி ஒரு புத்தகம் எழுதும் எண்ணம்கூட இருக்கிறது'' என்று பதில் சொன்னேன். அந்தப் பேட்டியைக் கேட்ட பலரிடமிருந்தும் எனக்குப் பாராட்டுக் கடிதங்கள் வந்தபோது, புத்தகம் எழுதுவது பற்றிய என் முயற்சி பலப்பட்டது.

இந்தப் புத்தகத்தில் அறிவுரையோ கட்டளையோ எதுவும் இல்லை. யாருக்கும் தெரியாத புதிய செய்தி ஏதும் கிடையாது. எவராலும் பின்பற்ற முடியாத கஷ்டமான வழிமுறைகளும் ஒன்றும் இல்லை.

மனதுக்குள் தோன்றிய கருத்துக்களை எழுத்தில் எழுதிப் படிப்பது, எனக்கே நான் மீண்டும் ஒருமுறை சொல்லிக் கொள்வதைப்போல் ஒரு சின்ன நினைவூட்டல்தான். இதுதான் படிப்பவர்களுக்குள்ளும் நிகழ வேண்டும் என்ற ஒரு ஆசையில் எழுதத் துவங்கினேன்.

எங்கோ கேட்ட நிகழ்ச்சியாகவோ, யாரோ சொன்ன கருத்தாகவோ கூட இவை காட்சியளிக்கலாம். ஆனால் இவற்றை நான் பார்க்கும், உணரும் விதமாகவே வெளிப்படுத்தியிருக்கிறேன்.

இதுபோல் வேறு சிலரும் தங்கள் எண்ணங்களைப் படிப்பவர்களுடன் பகிர்ந்து கொண்டிருக்கலாம். என்றாலும் நான் இதுவரை அப்படி எதையும் படித்ததில்லை. எனவே, எவருடைய எழுத்தின் பாதிப்பும் என்னிடமோ என் எழுத்திலோ இல்லை என்பதைக் கூற விரும்புகிறேன்

இலக்கிய ஆன்மிக உபன்யாசகர் திரு.கிரிதாரி பிரசாத் அவர்களை ஒருமுறை சந்தித்துப் பேசியபோது, நான் கடைப்பிடித்து வரும் வாழ்வியல் முறைகள் சரியானவையே என்கிற மாதிரி அவரது பேச்சு எனக்குள் ஒரு நெகிழ்வை உண்டாக்கியது. இந்த உணர்வை நண்பர்களுடன் பகிர்ந்து கொண்டபோதுதான், இதை மற்ற பலருக்கும் படிக்கும் அளவில் கொடுத்து சற்று உரக்க சிந்தித்தால் என்ன என்று ஏற்கனவே இருந்த எண்ணம் தீவிரமாக மாறி கட்டுரை எழுதும் முயற்சியை உறுதியாக்கியது.

தெரிந்த விஷயத்தையேகூட ஒரு முறைக்கு இரு முறையாகக் கூறினால், அது அதிக ஆழமாக பதியும்; நாம் செய்வதைப் போலவே இன்னொருவரும் செய்து வருகிறார் என்று தெரிந்தால் அதில் மேலும் பிடிப்பு ஏற்பட்டு தொடர்ந்து பின்பற்ற வைக்கும்.

இதுவே என் கருத்து; விருப்பம். கட்டுரைகளைப் படிப்பது எனக்கே ஒரு நினைவூட்டலாக இருக்கிற மாதிரி உங்களுக்கும் அமையும் என்று நம்பிக்கை; எதிர்பார்ப்பு.

என்னைச் சீர்படுத்த உதவிய சின்னச் சின்ன விஷயங்களை ''முயற்சி திருவினையாக்கும்' என்ற நம்பிக்கையோடு உங்கள் முன் வைக்கிறேன், இதோ-.





# 1. என் தந்தை

நல்ல பிள்ளையைப் பெற தவம் செய்திருக்க வேண்டும் என்று பெரியவர்கள் சொல்வார்கள்.

என் தந்தை திரு. ஏவி. மெய்யப்பன் அவர்களைப் பற்றி நான் நினைக்கும் போதெல்லாம் எனக்குத் தோன்றும், நல்ல தந்தைக்கு மகனாகப் பிறக்கவும் புண்ணியம் செய்திருக்க வேண்டும் என்று.

என் அன்புத் தந்தை கிடைத்தற்கரிய அருமை ஆசானாக, வலுவான பொருளாதாரச் சூழ்நிலையையும், கடமை உணர்வு மிக்க பணியாளர்களையும் தந்துவிட்டுப் போயிருக்கும் உயர்ந்த மனிதர் அவர் தனது சிறந்த பணிகளினால் எங்களுக்கு அளவற்ற புண்ணியத்தையும், சமூகத்தில் தலை நிமிர்ந்து கௌரவமாக நடக்கும் தனிப்பெருமையையும் அளித்துச் சென்ற மாமனிதர் அவர்.

உதட்டில் சிரிப்பும், உள்ளத்தில் வேறு விதமாகவும் இருக்கத் தெரியாதவர். பிடிக்காத விஷயங்களையும் பிடிக்கவில்லை என்றோ, பிடிக்காதவர்களைப் பிடிக்கவில்லை என்றோ சொல்லத் தயங்காதவர்.

நல்லவற்றைப் பாராட்டத் தெரிந்தவனால்தான் நல்லதைச் செய்ய முடியும் என்று உறுதியாக நம்பி, அதன்படி வாழ்ந்தும் காட்டியவர்.

தளராத உழைப்பும், இன்று செய்ய வேண்டியதை இன்றே செய்துவிட வேண்டும் என்ற துடிப்பும், எந்தத் தீர்மானத்தையும் தள்ளிப்போடாத பக்குவமும் கொண்ட வெற்றிகரமான மனிதர்.

எந்த விஷயத்தையும் அதன் நெளிவு. சுளிவுகளுடன் அறிந்து கொள்ளும் ஆவலும், நல்ல கருத்தை எவர் கூறினாலும் அதற்கு முக்கியத்துவம் கொடுத்து வரவேற்கும் முதிர்ச்சியும். வியாபாரத்தில் மிகுந்த அக்கறையும் கொண்ட உழைப்பாளி அவர்.



காமராஜ், ஏ.எல்.எஸ்ஸுடன் ஏவி.எம்.

எங்களுக்கெல்லாம் அன்பு காட்டி ஊக்குவித்த தந்தை; தொழில் கற்றுக் கொடுப்பதில் நல்ல குரு; பிரச்சனைகளைத் தீர்க்க ஆலோசனை கூறும் நல்ல நண்பர்; வாழ்க்கைப் பாதையில் நாங்கள் நடைபோட சிறந்த வழிகாட்டி.

இப்படிச் சொல்லிக்கொண்டே போனால் அவரைப் பற்றி மட்டுமே எழுத பல பக்கங்கள் கொண்ட நீண்ட சரித்திரமே தேவைப்படும்.

சாதனை படைத்த அந்த மேதையின் கல்வித் தகுதி, வெறும் ஒன்பதாம் வகுப்புதான். அதற்குப் பின் படிக்க முடியாத குடும்பச் சூழ்நிலை இருந்தாலும், பொது அறிவையும் வியாபார நுணுக்கங்களையும் அனுபவத்தோடு வளர்த்துக் கொண்டார்.

முறையான படிப்பு என்பதுதான் இல்லையே தவிர, தானே முயன்று அவர் வளர்த்துக் கொண்ட கல்வியறிவு எந்தப் பட்டப் படிப்புக்கும் குறைந்ததல்ல. 'ஹிண்டு' செய்தித்தாளை மிகக் கவனமாகப் படித்து அதில் தலையங்கமாக வெளியாகியிருப்பதைத் தமிழில் அன்றாடம் மொழிபெயர்ப்பார். புரியாத வார்த்தைகளையும் புதுச் சொற்களையும் ஆங்கில அகராதியின் துணையோடு மொழிபெயர்த்து, அவ்வப்போது இப்படிக் கற்கும் புதுப்புது வார்த்தைகளைத் தனது ஆங்கிலப் பேச்சில் புகுத்தி விடுவார்! அதனாலேயே மிகச் சரளமாக ஆங்கிலம் பேசும் அளவுக்கு அவரால் உயர முடிந்தது.

எந்தவொரு காரியத்தையும் பலமுறை தீவிரமாக அலசி ஆராய்ந்து திட்டம் போடுவது என் தந்தையின் சிறப்பான குணங்களில் ஒன்று. ஏன், தன் சொத்துக்களைக்கூட தான் நன்றாக வாழும்

காலத்திலேயே கச்சிதமாகப் பங்கு பிரித்து வகைப்படுத்தி வைத்து விட்டார் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

''கடைசி வரை நாம்தான் எல்லா பொறுப்புக்களையும் சுமந்து கொண்டு நிற்க வேண்டும் என்று இருக்கக்கூடாது. வயது ஏற ஏற பிள்ளைகளுக்கும் பொறுப்புகளைப் பிரித்துக் கொடுத்து சுமையைக் குறைக்க வேண்டும். அப்போதுதான் வாரிசுகளும் பொறுப்புணர்ந்து பரம்பரையைக் காப்பாற்ற முனைவார்கள்'' என்பது என் தந்தை அடிக்கடி சொல்லும் விஷயம். இதை வலியுறுத்த ஒரு உதாரணத்தையும் குறிப்பிடுவார்.

எங்களுக்கு நன்கு பழக்கமான ஒரு குடும்பம் அது. எக்கச்சக்கமான சொத்தும் நான்கு பிள்ளைகளும் இருந்தும்கூட, அந்தக் குடும்பத் தலைவர் அத்தனை பொறுப்புகளையும் தானேதான் கவனிப்பது வழக்கம். சொத்தைப் பிரித்துக் கொடுத்து விட்டால் தன் பங்கு குறைவாகத் தெரியுமே என்ற ஒரு வேண்டாத எண்ணம் அவருக்கு! மகன்களுக்குக்கூட அவர்கள் செய்யும் வேலைகளுக்கேற்ப மாதச் சம்பளம் மாதிரி ஏதோ கொஞ்சம் பணம் தரும் அவர் குணத்தைக் கண்டு வெறுத்துப்போன பிள்ளைகள், அப்பாவிடமிருந்து எப்படிப் பணத்தைக் கறக்கலாம் என்பதே சிந்தனையாகிப் போனார்கள். ஒரு பிள்ளை சற்று தீவிரமாக வெறுப்படைந்து, 'என் அப்பாவுக்குக் கருமாதி செய்யும் நேரம் என் ஜாதகத்தில் எப்போது வரும் என்று பார்த்துச் சொல்லுங்கள்!' என்று ஜோசியரிடம் கேட்கும் அளவுக்கு விவகாரம் மோசமாகிப் போனது!

**நேரு அளித்த விருந்தில் ஏவி.எம்.**





**இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டின் போது ஏவி.எம். ஸ்டுடியோவில் அளித்த விருந்தில் அறிஞர் அண்ணா, கலைஞர் கருணாநிதியுடன் ஏவி.எம்.**

இப்படி ஊர் உலகம் முழுவதும் குடும்ப விஷயம் தெரிந்துபோய் கேவலமாகப் பேசும் நிலைமை உருவாகக் கூடாது என்பார் என் தந்தை. எப்போது வாழ்வு முடிந்து இறந்தாலும் யாரும் மரியாதைக் குறைவாகப் பேசும்படி வாழக்கூடாது என்பார்.

எடுத்ததற்கெல்லாம் ராகு காலம், எமகண்டம் பார்ப்பதோ, ஜாதகம், ஜோசியம் என்று அலைவதோ அவருக்குப் பிடிக்காத விஷயங்கள். ரேஸ், லாட்டரி போன்ற பழக்கங்களில் ஈடுபாடும் கிடையாது, அனாவசிய செண்டிமெண்ட்ஸில் நம்பிக்கையும் கிடையாது. உழைப்பும் நாணயமுமே அவர் நம்பிய தொழில் மூலதனங்கள்.

எளிமையான கதராடைதான் அவர் எப்போதும் அணிந்து வந்தார். தேசத்துக்கு உழைத்தவர்களிடம் அவர் கொண்டிருந்த அபிமானத்துக்கு அளவே இல்லை.

காந்திஜியிடமும் நேருஜியிடமும் அபார பக்தி உண்டு. மகாத்மா தமிழ் நாட்டுக்குச் சுற்றுப்பயணம் மேற்கொண்டு காரைக்குடிக்கு வந்தபோது கம்பெனியில் இருந்த புதிய காரை அவர் உபயோகத்துக்குக் கொடுத்ததைப் பெருமையாகக் கருதினார்.

'ஹம் பஞ்சி ஏக் டால்கே' இந்திப்படம் தங்கப் பதக்கம் பரிசு பெற்றபோது, நேருஜியின் அழைப்பின்பேரில் அவரது மாளிகையில் அவருக்குப் பக்கத்தில் அமர்ந்து சிற்றுண்டி அருந்தியதைப் பெரும் பாக்கியமாக நினைத்தார்.

காமராஜரிடம் அளவற்ற விசுவாசமும் பாசமும் கொண்டிருந்தார். அறிஞர் அண்ணாவிடமும், கலைஞர் கருணாநிதியிடமும், புரட்சித் த்லைவர் எம்.ஜி.ஆரிடமும் நல்ல நட்பு இருந்தது அவருக்கு.

ஆனாலும், எந்தக் கட்சியிலும் தன்னை ஐக்கியப்படுத்திக் கொண்டது கிடையாது. 'என்னைப் போன்ற வியாபாரிகளுக்கு அரசியல் கூடாது' என்பார்.

பாரதியார் பாடல்களின் உரிமையைப் பத்தாயிரம் ரூபாய்க்கு வாங்கி வைத்திருந்தாலும், அப்போதைய தமிழக முதலமைச்சராக இருந்த ஓமந்தூர் ரெட்டியாரின் வேண்டுகோளை ஏற்று அப்பாடல்களை நாட்டுடமை ஆக்கினார் என் தந்தை. பாடல்களுக்குக் கொடுத்த விலையை அரசு தந்துவிடுவதாக முதலமைச்சர் கூறியும் அதை மறுத்து இலவசமாகவே தேச உடைமையாக்கினார்.

உழைக்காமல் வீணே நேரத்தைப் போக்குவது தந்தையாருக்குச் சற்றும் பிடிக்காத ஒன்று. 'ஆபீஸ் வேலை முடிந்துவிட்டால், வேறு பயனுள்ள சமூகப் பணிகளையாவது செய்யுங்கள்' என்றுதான் எங்களிடம் அடிக்கடி சொல்வார்.

ஒவ்வொரு நாளும் ஸ்டூடியோ முழுவதும் அதிகாலையிலும் மாலையிலும் சுற்றி வருவார். ஆங்காங்கு தென்படும் குறைகளையும், செய்ய வேண்டிய திருத்தங்களையும் பற்றிய தனது கருத்துக்களைத் தன் பாக்கெட் டேப் ரிகார்டரில் பதிவு செய்து, நேர்முக உதவியாளர் திரு. பாலு மூலம் சம்பந்தப்பட்டவர்களுக்கு டைப் செய்து அனுப்பி விடுவார். அதோடு நிற்காமல், தான் சொன்ன திருத்தங்கள் செய்யப்பட்டனவா என்று சரிபார்க்கவும் செய்வார்.

எந்தவொரு சின்ன விஷயத்தையும் அலட்சியமாகத் தள்ளி விடாமல் அதற்குரிய முக்கியத்துவத்தை அளித்துக் கவனிப்பார். ஒரு

**புரட்சித் தலைவர் எம்.ஜி.ஆருடன் ஏவி.எம், நாகிரெட்டியார்**





சிறு விஷயம் பாருங்கள் - ஸ்டுடியோவின் தச்சுப்பிரிவிலும் அதைச் சுற்றிய பல இடங்களிலும் சிறு சிறு ஆணிகள் கீழே கிடந்து, நடப்பவர்களுக்கும் வாகனங்களுக்கும் ஊறு விளைவிப்பதை தந்தை கவனித்திருக்கிறார். உடனே, காந்த சக்தியுள்ள இரும்பு உருளை ஒன்றைப் பாதையெங்கும் உருட்டி அந்த ஆணிகளை நீக்க வழி செய்து கொடுத்து விட்டார்! இப்போதும் தொடரும் அந்தப் பழக்கத்தினால் கார் டயர்கள் பஞ்சராவது நின்று போய்விட்டது. நம் கால்களும் தப்பிக்கின்றன! தந்தையாரின் நுண்ணிய பார்வைக்கு இது ஒரு எடுத்துக்காட்டுதான்.

வாழ்வில் நல்ல ரசனை கொண்டவர் என் தந்தையார். உணவு, வசதியான வீடு, வாழ்க்கைத்தரம் ஆகியவற்றில் மட்டுமல்லாமல் தான் எடுக்கும் படங்களில்கூட தனது ரசனைத்திறன் வெளிப்படும் விதமாகப் படம் எடுத்தார். படங்கள் ரசிகர்களைச் சென்றடைந்து அவர்களின் பாராட்டுக்களைப் பெறுவதற்கு முன், தயாரிப்பில் ஈடுபட்டுள்ள நமக்கு முழு திருப்தியை அளிக்க வேண்டும் என்று மிக நேர்த்தியாக ஒவ்வொன்றிலும் கவனம் செலுத்துவது அவரது தனிச்சிறப்பு.

இசையில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர். காரைக்குடி சாம்பசிவ ஐயரின் வீணை இசை, அரியக்குடி ராமானுஜ ஐயங்கார், சீர்காழி கோவிந்தராஜன் ஆகியவர்களின் பாட்டு, துவாரம் வேங்கடசாமி நாயுடுவின் வயலின் இசை என்றால் அவருக்கு உயிர். காருகுறிச்சி அருணாசலம் நாதஸ்வரம், குன்னக்குடி வைத்தியநாதன் வயலின்,

சிட்டிபாபு வீணை, பர்வீன் சுல்தானா பாட்டு இவற்றை மிக விரும்பிக் கேட்பார். வானொலியில் ஒலிபரப்பான பல இசை நிகழ்ச்சிகளைப் பதிவு செய்து அவர் வைத்திருந்த ஒலி நாடாக்கள் இன்னமும் எங்களிடம் இருக்கின்றன!

தான் அதிகம் படிக்க முடியவில்லையே என்கிற ஏக்கத்தினாலோ என்னவோ, பள்ளி மாணவர்கள், கல்லூரி மாணவர்கள் மற்றும் கல்வி நிறுவனங்களுக்கு ஏராளமான நன்கொடை அளித்திருக்கிறார்.

அவர் கொடுத்த கடைசி நன்கொடை கூட ஒரு மாணவிக்குத்தான். கண் பார்வையற்ற ஒரு மாணவி கல்லூரியில் பி.ஏ.படித்துக் கொண்டிருந்தார். அவருக்குத் தேவைப்பட்டது ஒரு டேப் ரிகார்டர். தன்னிடமிருந்த ஒரு டேப் ரிக்கார்டரை, எப்படி இயக்க வேண்டும் என்று ஒரு கேஸட்டில் பதிவு செய்து அதை ரிகார்டருடன் வைத்து அந்த மாணவிக்குக் கொடுத்தார்!

நன்கொடை கொடுப்பதும்கூட தேவையறிந்து, நாசூக்கான ஒன்றாக இருக்க வேண்டும் என்று பண்புடன் செயல்பட்டவர் அப்பச்சி. அதே சமயம், எதையும் வீணாக்குவதில் அவருக்குக் கொஞ்சமும் உடன்பாடு இல்லை. இறுதி நாட்களில் உடல்நலமின்றி படுத்திருந்தபோதுகூட, ''ஏன் லைட் வீணாக எரிகிறது? அதை அணையுங்கள்'' என்று சிக்கனத்தைத்தான் வலியுறுத்தினார். மறைந்து போவதற்கு முன் அவர் தானாகப் பேசிய இறுதி வார்த்தைகள் இவைதான்!

மனிதாபிமானம்மிக்க இந்தச் சிறந்த மனிதருக்கு மகனாகப் பிறந்ததில் எனக்கு அளவற்ற பெருமையும் மகிழ்ச்சியும் உண்டு.

என் மகிழ்ச்சியை இந்த 'முயற்சி திருவினையாக்கும்' கட்டுரைகளில் பல இடங்களில் வெளிப்படுத்தியிருக்கிறேன்.

இன்று, நிறைவான மனதுடன் நான் வேண்டுவதெல்லாம் ஒன்றுதான்: ''இறைவா! எனக்கு மறுபிறவி என்று ஒன்று இருக்குமானால், தயவு செய்து என் தந்தை எங்கு பிறந்தாலும் அவருக்கு மைந்தனாகவே பிறக்க வை'' என்பதுதான் அது.

# 2. அந்த நாள் ஞாபகம்



என தநதையாரின வாழ்க்கையும், அவர் எங்களை விட்டுப் பிரியும்வரை எங்களுக்கு அமைந்த வாழ்வும் எனக்குக் கற்றுத் தந்த பாடங்கள் ஏராளம்.

நானே அறிந்து கொண்டவை சில; அவரின் செயல்கள் உணர்த்தியவை சில; அவரே எனக்கு உரைத்தவை மற்றும் பல.

ஒருமுறை காரில் போய்க் கொண்டிருந்தோம். நான் ஓட்டிக்கொண்டு வர அவர் என் அருகில் வழக்கம்போல் முன்சீட்டில் அமர்ந்திருந்தார்.

எப்போதுமே அவர் முன்சீட்டில்தான் உட்காருவார். பின்சீட்டில் உட்காரப் பிரியப்பட மாட்டார். என் அம்மா திருமதி ராஜேஸ்வரியுடன் வெளியே செல்லும் போதுதான் பின்சீட்டில் உட்காருவார். முன்னால் செல்லும் வாகனங்கள் எதுவும் அவருடைய பார்வையை மறைத்தால் அந்த வண்டியை மெதுவாகத் தாண்டிப்போகச் சொல்வார். ஓவர்டேக் செய்வதில்கூட ஒரு நயத்தோடு செய்யச் சொல்வார்!

எதேச்சையாக அன்று அவர் கூறிய கருத்துக்கள் நட்பு பற்றிய ஒரு விரிவான கண்ணோட்டத்தை எனக்குள் ஏற்படுத்தின.

''வாழ்க்கையில் வேலை செய்ய வேண்டும், ஆனால் வாழ்க்கை பூராவும் வேலை செய்யக்கூடாது. துணிச்சலாக ரிஸ்க் எடுப்பது வாழ்க்கையில் அவ்வப்போது நடக்கலாம். ஆனால் அப்படி ரிஸ்க் எடுப்பதே வாழ்க்கையாகி விடுவதோ, வாழ்வு முழுவதையுமே சூதாடுவதோ கூடாது. எந்த அளவுக்குத் தேவையோ அந்த அளவுக்குத்தான் ரிஸ்க் எடுக்கலாம்....''

இப்படித்தான் துவங்கினார். தொடர்ந்து வந்த ஒரு அரிய வாழ்க்கைப் பாடம். ''.......ஒரு அளவுக்கு மேல் வேலையிலே

நேரத்தை செலவழிக்கக் கூடாது. தனக்கென்று, தன் வீட்டுக்கென்று, குழந்தைக்கென்று, நண்பருக்கென்று நேரத்தைப் பிரிக்க வேண்டும். நட்பில்லாத வாழ்க்கை சூன்ய வாழ்க்கைக்குச் சமம். நீ உன் மகனை நண்பனாகக் கருதலாம், மனைவியைத் தோழியாக நினைக்கலாம், ஆனால் அவர்கள் உண்மையில் நண்பனாக ஆக முடியாது. நட்புக்கு நிஜமான அர்த்தமுள்ள நண்பர்கள் இருக்க வேண்டும். அவர்கள் உன் வயதினராக இருக்க வேண்டிய கட்டாயம் இல்லை. அவர்களுடன் இருக்கும் எந்தப் பரிமாறலும், அது ஒரு எண்ணமோ, திட்டமோ சந்தோஷமோ, மனத்தாங்கலோ, நெகிழ்வோ - எதுவானாலும் கலந்து ஆலோசிக்கக்கூடிய நண்பராக இருக்க வேண்டும். வியாபாரத்தின் மூலம் மட்டும்தான் நண்பர்கள் கிடைக்கிறார்கள் என்றால் அது வெறும் வியாபார நட்பாகத்தான் இருக்கும். ஒருவேளை உனக்கும் அவர்களுக்கும் வியாபாரத் தொடர்பாக சிறு மனத்தாங்கலோ, மாறுபட்ட கருத்தோ, நஷ்டமோ ஏற்பட்டால் அந்த நட்பு பாதிக்கப்படும். இது முழுமையான நட்பல்ல. ஆனால் காரண காரியங்கள் இல்லாமல் நல்ல நண்பர்கள் அமைவதே சிறந்தது. என் வாழ்வில் இந்த நட்பு என்ற பகுதி மிகக் குறைவு. என்னுடைய கடைசி நண்பராக இருந்தவர் டாக்டர் சிதம்பரம். அவர் இருதய நோயால் பாதிக்கப்பட்டு மரணம் அடைந்தார். அதற்குப் பிறகு நான் மனம் விட்டுப் பேசிய நண்பர்களின் எண்ணிக்கை மிகச் சொற்பம். சொல்லப்போனால் இப்போது உன்னிடம் பேசுவது போல் மனம்விட்டுப் பேசுவதற்கு அதிக நண்பர்கள் இல்லை'' என்றார்.

என் தந்தையின் கடைசி காலத்தில் அவருக்கு நண்பர்களாக இருந்தவர்களில் மிகக் குறுகிய காலத்தில் மிக நெருங்கிய நண்பராக இருந்தவர் நீதிபதி திரு.மு.மு. இஸ்மாயீல் அவர்கள். அவரிடம் மனம் விட்டுப் பேசிப் பழகுவார். வேறு யாரிடமும் அந்த அளவுக்கு சுதந்திரமாகப் பேசியதாக எனக்கு நினைவில்லை.

**நீதிபதி மு.மு.இஸ்மாயீல், ஏவி.எம். டாக்டர் சிதம்பரம்**





R.வெங்கட்ராமன் (ராஜா) K.L.இராமனாதன் டாக்டர் சிவகடாச்சம்

அன்று தந்தை தொடர்ந்து பேசும்போது எங்கள் குடும்பத்தில் ஒருவரைக் குறிப்பிட்டுச் சொன்னார். ''அவருக்கு நண்பர்களே இல்லாமல் போனதால்தான் அவரது வாழ்க்கையில் ஒரு பெரும் பகுதியை இழந்து விட்டார். அவருக்கு மிகப் பெரிய நஷ்டம் நேர்ந்ததும் அதனால்தான். உண்மையான நண்பர்கள் மட்டும் இருந்திருந்தால் சொல்ல வேண்டியதைச் சொல்ல வேண்டிய நேரத்தில் சொல்லி இருப்பார்கள். அவர் வாழ்வே திசை திரும்பி நல்ல முறையில் நிகழ்ந்திருக்கும். மனைவியிடம் பேச முடியாததைக்கூட தோழனிடம் பேச முடியும்; இன்பமோ, துன்பமோ எந்தவொரு அனுபவத்தையும் பேசிப் பகிர்ந்து கொள்ள முடியும். ஆனால் நண்பர்களின் தகுதியை அறியாமல் நட்பை வளர்த்துக் கொள்வது மிக ஆபத்தில்தான் முடியும்.''

என் நெருங்கிய நண்பனான ராஜா என்கிற வெங்கட்ராமனின் பெயரைக் குறிப்பிட்டு, ''இவனைப் போன்ற நண்பர்களின் நட்பை வளர்த்துக் கொள். வாழ்வில் குழந்தைகளுக்கும் நண்பர்களுக்கும் நேரத்தை ஒதுக்க வேண்டும். பணம் சம்பாதிப்பது மட்டுமல்ல, வாழ்க்கையில் நிம்மதியைச் சம்பாதிக்க வேண்டும்'' என்றார்.

ராஜா, கூத்த நயினார், கே.எல்.ராமநாதன், நாகராஜன் ராஜா, வள்ளியப்பன் போன்ற அருமை நண்பர்களுடன் நான் செலவிடும் ஒவ்வொரு கணத்திலும் என் தந்தையின் இந்த வார்த்தைகள் நினைவுக்கு வராத நேரமே இல்லை.

நான் பழகும் நண்பர்களில் அத்தனை பேரும் சினிமா சம்பந்தப்பட்டவர்கள் இல்லை. முன்பு ஒரு நாளிதழில் என்னைப் பற்றிக் கூறும்போதுகூட, ''எனக்குத் தெரிந்த அனைவரும் என் நண்பர்களே!'' என்று சொல்லியிருந்தேன்!

சின்ன வயதிலிருந்து ஒன்றாகப் படித்துப் பழகி வளர்ந்த நண்பர்கள் முதல் இன்றைய தேதி வரை நான் பார்க்க நேரிட்டு, பழக்கம்

உண்டானவர்கள் பலரும் என் இனிய சினேகிதர்கள்தான்.

சிறு வயது நண்பர்கள் இதுநாள் வரை நீடித்து நிலைக்கிறார்கள் என்றால், எங்களுக்குள் மனவேறுபாடுகளே வந்ததில்லை என்று பொருளல்ல. அபிப்ராய பேதங்களும், சொந்த விருப்பு வெறுப்புகளும் தலைகாட்டாத உறவே உலகத்தில் கிடையாது. பெற்றவர்கள் - குழந்தைகள், சகோதர - சகோதரி, கணவன் - மனைவி, மாமியார் - மருமகள், எஜமான் - தொழிலாளி என்று எந்த உறவிலும் சாதாரணமாக இப்படிப்பட்ட பேதங்கள் தலைகாட்டும்போது, நட்பு என்ற உறவு மட்டும் விதிவிலக்கா என்ன!

ஆனால், எந்த பேதத்தையும் நாங்கள் நேருக்கு நேர் பேசித் தீர்த்துக் கொள்வதோடு, குறிப்பிட்ட விஷயத்தில் வந்த கருத்து மாறுபாடு எங்கள் நட்புக்குப் பெரிய பாதகம் ஏற்படுத்தி விடாமல் பார்த்துக் கொள்கிறோம்.

ஒரு நண்பரைப் பற்றி ஏதாவது குறை இருந்தால், அதைப் பற்றி அந்த நண்பரிடமே பேசிவிடுகிறேன்; அல்லது, மற்றொரு நண்பரிடம் மனம் விட்டுப் பேசிச் சரி செய்யப் பார்க்கிறேன். ஆனால் எந்தக் காரணத்தைக் கொண்டும், நண்பனோடு உண்டான பிரச்சனை பற்றி நண்பன் அல்லாத மற்றவரிடம் சொல்வதில்லை.

உள்ளூர் நண்பர்களை அடிக்கடி பார்த்து விடுவேன் என்றாலும், வெளியூர் நண்பர்கள் சென்னை வரும்போது அவர்களை பஸ் நிலையத்திலிருந்து அழைத்து வந்து மறுபடி கொண்டு விடுவதில் என்னோடு என் மனைவியும் உடன் நிற்பாள். ஆண்களுக்குள் மட்டுமல்ல, பெண்களுக்குள்ளும் நன்றாக ஒத்துப் போனதனாலேயே எனது பல நட்புகள் இன்னமும் தொடருகின்றன.

'மெஸானிக் லாட்ஜ்' என்ற அமைப்பின் உறுப்பினராக நான் ஆனதும்தான் வெளியுலகத் தொடர்பு விரிவாகி பல நண்பர்கள் கிடைத்தார்கள். அங்கு எல்லாரும் 'ப்ரதர்' என்று ஒருவரை ஒருவர்

S.R.S.கூத்தநாயினார்



S.V.வள்ளியப்பன்



K.S.நாகராஜன் ராஜா



அழைத்துக் கொள்வார்கள். எனக்கு யாரைச் சந்தித்தாலும் அவர்கள் முகம் நினைவில் நிற்கிற மாதிரி பெயர் நினைவிருக்காது. எனவே, இப்படி 'ப்ரதர்' என்று அழைப்பது வசதியாக இருந்ததால் அதுவே பழகிப்போய், இப்போதும் எல்லா நண்பர்களையும் 'ப்ரதர்' என்றே அழைக்கிறேன்!

டாக்டர். சிவகடாட்சம் தன்னம்பிக்கைகொடுக்கக்கூடிய ஒரு எளிமை யானவர். என் இனிய நண்டபர்களில் ஓருவர் தன்னிடம் வருபவர்க ளுக்கு டாக்டராக மட்டும் செயல்படாமல் அவர்களிடம் அன்பாகவும் இனிமையாகவும் பேசி ஒரு நண்பராக செயல்படுவது இவரது தனித் தன்மை.

தற்போது 'ரோட்டரி' சங்க உறுப்பினர் என்ற முறையிலும் பல்வேறு வகையான நட்பு கிடைத்திருக்கிறது. 'ஹாம்' (HAM) என்ற அமெச்சூர் ரேடியோ சங்கத்திலும் நான் உறுப்பினராக உள்ளதால் என் நண்பர்களின் எண்ணிக்கை அதிகரித்திருக்கிறது.

முன்பெல்லாம் முகங்கள் ஞாபகத்தில் இருக்கும்; பெயர்கள் மறந்துவிடும். இப்போது, 'ஹாம்' அமைப்பினால் முகம் தெரியாத பலர் தங்கள் பெயர்களை மட்டுமே அறிமுகப்படுத்திக் கொண்டு நண்பர்களாக இருக்கிறார்கள் என்பது வேடிக்கையான விஷயம்!

எனது நட்பு வட்டம் மிகப் பெரியது. என்னைத் தொடர்பு கொள்வது அவர்களுக்கு எளிதாக இருக்க வேண்டும், ஒரு அவசரம் என்றால் எந்த நேரத்திலும் நான் அவர்களுக்குத் துணை நிற்க வேண்டும் என்பதனாலேயே நடு இரவிலும் தொலைபேசியில் அணுகும் அளவு அருகில் இருக்க முயற்சிக்கிறேன்.

நட்புக்கு இப்படிப்பட்ட நல்ல பொருளை எனக்கு உணர்த்திய அந்தக் கார் பிரயாணமும் தந்தையார் பேசிய பேச்சும் நான் என்றுமே மறக்க முடியாதவை.

**'ஹாம்ஸ்' விழிப்புணர்வு கண்காட்சியில் எம். கோபாலகிருஷ்ணன், 'ராம்ஸ்' ரவி, போலீஸ் கமிஷனர் S. ராஜகோபாலனுடன்**



# 3. இடிதாங்கிகள்



எங்கள் கலைக்கூடத்தில் 47 ஆண்டுகளாகப் பணியாற்றிவரும் ஸ்டுடியோ நிர்வாகி R. ரங்கசாமி ஐயங்கார்

இரண்டு நண்பர்களுக்குள் திடீரென்று மனஸ்தாபம் ஏற்பட்டு விட்டது. கோபத்தில் வசவு வார்த்தைகள் தாராளமாக வந்து விழுகின்றன.

இருவருக்கும் இடையில் பொதுவான நண்பர் ஒருவர் சமரசம் செய்யப் புறப்படுகிறார். ஒருத்தரிடம் போய், ''அவன் உன்னைப் பித்தலாட்டக்காரன் என்று திட்டுகிறானே! போய் மன்னிப்புக் கேட்டு சமாதானமாக ஆகிவிடு!'' என்றும், மற்றொருவரிடம், ''நீ அதிகப் பிரசங்கி என்கிறானே அவன்! அவனிடம் சொல்லாமல் நீயாகவே எதையாவது செய்து விட்டாயா? போய் உன் தவறை ஒப்புக் கொண்டு விடு'' என்றும் சொல்கிறார்.

முடிவு என்னவாக இருக்கும்? சண்டை தீர்ந்து சமாதானம் ஆகுமா அல்லது மேலும் முற்றிப்போய் தீராப்பகையாகிப் போகுமா?

இரண்டாவதுதான் நடந்தது. காரணம் அந்த மத்தியஸ்த நண்பர்தான்.

ஆத்திரத்தில் பேசும் வார்த்தைகளை ஆத்திரத்தோடு கேட்டால் தவறாகவே தெரியும். கோபத்தில் பயன்படுத்தும் வார்த்தைகளை மற்றவரும் கோபமாகக் கேட்டால் அது விவகாரத்தை அதிகப்படுத்தும். விளைவை உண்டு பண்ணும் சொற்களை மத்தியஸ்தம் செய்பவர்கள் உபயோகிக்காமல் இருக்க வேண்டும். இரண்டு பேருக்குள் கருத்து வேறுபாடு இருக்கிறது என்றால் அதைக் களையப் போகும்போது அவர்கள் சொன்ன சொற்களை அப்படியே

சொல்லாமல் அவற்றில் இருக்கும் கருத்துக்களை மட்டும் மனதைப் புண்படுத்தாமல் சொல்வது அவசியம்.

அது குடும்பத்திற்குள்ளாகட்டும், குழந்தைகளுக்குள்ளாகட்டும், நண்பர்களுக்குள் ஆகட்டும், முதலாளி தொழிலாளி இடையேயாகட்டும் - தூது போகிறவர்கள், எடுத்துச் சொல்பவர்கள் மிக மிக ஜாக்கிரதையாக செயல்பட வேண்டும். எதைச் சொன்னால் நன்மை விளையும் என்பதை யோசித்துச் சொல்ல வேண்டும். பிரச்னையை உடனடியாகத் தீர்த்துவிட வேண்டும் என்ற வேகத்தில், தன்னை அறியாமல் தவறான வார்த்தைகளை உபயோகித்து விடுவது எவருக்கும் இயல்பு. வேண்டுமென்று செய்யவில்லை, வாய் தவறி வந்துவிட்டது என்று சமாதானம் சொல்வதனால் எந்தப் பயனும் இல்லை. எனவே, இப்படியிப்படி பேசலாம், இந்தக் கருத்தைத் தவிர்த்துவிட்டு அதைப் பற்றி மட்டும் அழுத்திச் சொல்ல வேண்டும் என்கிற விதத்தில் கொஞ்சம் 'ஹோம் ஒர்க்', அதாவது வீட்டில் ஒருமுறை ஒத்திகை பார்த்துக் கொண்டு போவது அவசியம். அதோடு, இது மாதிரி மிக ஜாக்கிரதையாகக் கையாள வேண்டிய சந்தர்ப்பங்களில், விஷயத்தைச் சற்றே ஆறப்போட்டு விட்டு இரண்டு மூன்று நாள் கழித்து நிதானமாக யோசித்துச் செயல்படுவது எதிர்மறையான விளைவுகளைத் தவிர்க்க உதவும் என்பதை நான் என் அனுபவத்திலிருந்து புரிந்து கொண்டிருக்கிறேன்.

யாரையாவது திட்டி கடிதம் எழுத வேண்டுமென்றால்கூட, எழுதி வைத்து உடனடியாக போஸ்ட் செய்யாமல் மறுநாள் எடுத்துப் படித்துப் பார்த்தால், நாம் உபயோகித்த சொற்கள் காட்டமாக இருக்கின்றனவோ என்று நமக்கே சந்தேகம் வந்துவிடும். இதைவிட இன்னமும் கொஞ்சம் பண்புடன், நாசூக்காகச் சொல்லி இருக்கலாமே என்றும் தோன்றுவதைப் பலரும் உணர்ந்திருக்கலாம்! சமரசம் பேசும்போதுகூட இப்படி ஒத்திப்போட்டு விடுவது சரியான வார்த்தைகளைத் தேடி யோசித்துச் செய்ய உதவும்.

சில சொற்களின் வலிமையைக் குறைத்தும், சில இடங்களில் உறுதியைக் கூட்டியும் சொல்வதில் தவறில்லை. ஆனால் இவை நன்மையைக் கருதி செய்யப்பட வேண்டும்.

எங்கள் நிறுவனத்தில் ரங்கசாமி ஐயங்கார் என்று ஒரு தயாரிப்பு நிர்வாகி. சமரசம் செய்து பிரச்னையைத் தவிர்த்து, மனஸ்தாபங்களை விரட்டுவதில் மிகுந்த சாமர்த்தியசாலி.

இயக்குனர்கள் கிருஷ்ணன் - பஞ்சு அவர்கள் எங்கள் தயாரிப்பில் பல படங்களை இயக்கியிருக்கிறார்கள். படத் தயாரிப்பின்



இயக்குனர்கள் கிருஷ்ணன் பஞ்சு.

இடையிடையே அதுவரை எடுக்கப்பட்ட காட்சிகளை என் தந்தையார் அவ்வப்போது பார்த்துக் கருத்து தெரிவிப்பது வழக்கம். காட்சிகள் தனக்குப் பிடித்த விதத்தில் அமையவில்லை என்றால் அப்பட்டமாகத் தன் கருத்தைத் தெரிவித்துவிட்டு மாற்றச் சொல்லி விடுவார். இந்தச் செய்தி பஞ்சு அவர்களின் காதுக்குப் போகும்போது அவருக்குக் கோபம் ஏற்பட்டு சரமாரியாகத் திட்டுக்கள் வெளிவந்துவிடும்!

இருவருக்குமிடையே பாலமாக இருப்பவர் இந்த ரங்கசாமி ஐயங்கார்தான். பஞ்சு அவர்களிடம் எதேச்சையாகப் பேசுகிற மாதிரி பேசி, ''செட்டியார் கொஞ்சம் கோபமாக இருக்கிற மாதிரி தெரிகிறது. அவரைச் சற்று 'கன்வின்ஸ்' செய்தால் நல்லது'' என்று மேலோட்டமாகத் தெரிவிப்பார்.

அதேபோல் தந்தையிடம் வந்து, ''பஞ்சு சாருக்குச் சொல்லாமல் இந்த சீனை மாற்றச் சொன்னதில் அவருக்குச் கொஞ்சம் வருத்தம் இருக்கும் போலத் தோன்றுகிறது. நீங்களே நேரில் கூப்பிட்டு அவருக்குத் தெளிவாகச் சொல்லி விட்டால் பரவாயில்லை.'' என்பார் மெல்ல.

ஒருவரிடம் பேசியதைப் பற்றி மற்றவரிடம் வாய் திறக்கவும் மாட்டார். அதே வார்த்தைகளை உபயோகித்து ஆத்திரத்தை அதிகமாக்கவும் செய்ய மாட்டார். இருவருமே தங்கள் பேரில்தான் தவறோ என்ற எண்ணத்தில் உடனடியாகக் கீழிறங்கி வந்து நேரடியாக கருத்துக்களைப் பேசித் தீர்த்துக் கொள்வார்கள்.

தந்தையார் சொன்ன வார்த்தைகளை அப்படியே பஞ்சு அவர்களிடமோ அல்லது பஞ்சு அவர்கள் திட்டிய திட்டுக்களை தந்தையாரிடமோ வந்து ஒப்பித்து இருந்தால் இப்படி ஒரு சமரசம் ஏற்பட்டிருக்குமா?

இது ஒரு முறை அல்ல, பலமுறைகள் நடந்த விஷயம். ஒவ்வொரு தரமும் ரங்கசாமி ஐயங்கார் அவர்களின் பண்பான அணுகுமுறைதான்

பிரச்னைகளைத் தீர்க்க உதவியிருக்கிறது. அவர் இப்படி இருவரிடமும் இடிதாங்கியாக இருந்து அவர்கள் கோபத்தைத் தாங்கி, அதன் சாராம்சத்தை மட்டுமே வெளிப்படுத்தியிருக்காவிட்டால், எங்கள் நிறுவனமும் இயக்குனர்கள் கிருஷ்ணன் - பஞ்சு அவர்களும் இணைந்து 'அன்னை', 'குலதெய்வம்', 'பராசக்தி' போன்ற 13 படங்களைத் தந்திருக்க முடியுமா?

மத்தியஸ்தம் செய்யப் போகிறவர் மட்டும் என்றில்லை, மற்ற எல்லாருமே கூட ஒருவரிடம் கேட்டதை இன்னொருவரிடம் சொல்லும்போது அதிக கவனமாகப் பேச வேண்டும். 'அவுட் ஆஃப் கான்டெக்ஸ்ட்' (Out of Context) என்று சொல்வார்களே, அப்படி சந்தர்ப்ப சூழ்நிலையை விவரிக்காமல் ஒரு வார்த்தையை மட்டும் அரைகுறையாகக் காதில் வாங்கிக் கொண்டு வந்து குறிப்பிட்டுவிடக் கூடாது.

சிலருக்கு 'எமகாதகன்' 'எமன்' 'ராட்சஸன்' 'சூர்ப்பனகை' என்ற சொற்களைப் பாராட்டுவதற்காக உபயோகிப்பதில் ஒரு விருப்பம் உண்டு. 'அஹா, என்ன அற்புதமாக எழுதியிருக்கிறான், பிரமாதம்! சரியான எமன்டா அவன்!' என்று ஒருவர் பாராட்டினால், அதிலிருந்து 'எமன்' என்ற வார்த்தையை மட்டும் பிய்த்தெடுத்து, ''உன்னை எமன் என்று திட்டினதை என் காதால் கேட்டேன்'' என்று யாராவது சொன்னால் அதில் பாராட்டு தொனிக்குமா? வசவு அர்த்தம் தொனிக்குமா?

சம்பந்தப்பட்ட இருவருக்கும் இடையில் அனாவசியமாய் ஒரு இடைவெளி அல்லவா விழுந்துவிடும்!

சமாதானத் தூது போகிறவர்கள் முதலில் பிரச்னை என்ன, அதில் சம்பந்தப்பட்டவர்களின் பங்கு என்ன என்பதைப் பற்றியெல்லாம் துல்லியமாகத் தெரிந்து கொண்டு போக வேண்டும். ஒரு உதாரணம் பாருங்கள்.

எனக்குத் தெரிந்த ஒருவர், தான் வகித்து வரும் பதவியிலிருந்து தன்னை விலக்கி விடப் போகிறார்கள் என்று தானே தவறாகக் கற்பனை செய்துகொண்டு விட்டார். தன் பயம் நியாயம் தானா என்று உறுதிப் படுத்திக் கொள்ள அவர் முனையவில்லை. மாறாக, ஒரு நண்பரை சந்தித்து, ''என்னை பதவியிலிருந்து நீக்கிவிடப் போகிறார்கள். நான் என்ன செய்வது?'' என்று கேட்டிருக்கிறார். அந்த நண்பரும், இவரது பயத்தில் உண்மை இருக்கிறதா என்று கொஞ்சம்கூட ஆராயாமல், குறிப்பிட்ட மனிதர்களிடம் விவரம் கேட்டுத் தெளிவுபடுத்திக் கொள்ளாமல், ''பயப்படாதீர்கள், உங்களை நீக்கி விட்டால் சும்மா

இருக்க வேண்டாம். கோர்ட் வரை சென்று ஒரு கை பார்த்து விடுவோம்!'' என்று சமாதானப்படுத்தியிருக்கிறார்.

அது சமாதானமா அல்லது சண்டையை மேலும் வளர்க்கும் வழியா?

பதவி நீக்கம் உண்மைதானா என்று கேட்டறிந்து, உண்மையானால் காரணத்தையும் விளக்கத்தையும் அறியவும், மனஸ்தாபத்தைத் தீர்த்து வைக்கவும், பகையைத் தவிர்த்து உறவை வளர்க்கவும் அந்த நண்பர் உதவியிருக்க வேண்டுமே தவிர எடுத்த எடுப்பில் ''கோர்ட் வரை பார்த்துவிடுவோம்'' என்பது சமரச முயற்சிக்கு எதிர்மறையான செயல். இத்தனைக்கும் இரு பக்க மனிதர்களுமே அவருக்கு மிக வேண்டியவர்கள், அவரிடம் மதிப்பும் மரியாதையும் கொண்டவர்கள்தான்.

சமரசம் என்பது சண்டை அல்லது கருத்து வேறுபாடு ஏற்படும்போது மட்டும் செய்யப்படுவதல்ல. இவை ஏற்பட்டு விடாமல் தடுப்பதிலும்கூட இந்த சமரச சாத்வீக குணம் உதவுகிறது. இப்படிப்பட்ட ஒரு குணத்தை இயக்குனர் திரு.எஸ்.பி.முத்துராமன் அவர்களிடம் நான் கண்டிருக்கிறேன்.

''மனிதன்'' படத்தில் கிளைமாக்ஸ் காட்சி எடுக்கப்பட்ட பிறகு எனக்கு ஏனோ அந்தக் கடைசி காட்சியில் சற்று திருப்தி ஏற்படவில்லை. எங்கள் நிறுவனமே தயாரித்த மற்றொரு படத்தில் இறுதிக் காட்சியைப் பற்றி குறிப்பிட்டு, ''அந்தக் காட்சி மிக நன்றாக அமைந்திருந்தது. அது வெளியாகி சில காலம் கழித்து இப்போது 'மனிதன்' வெளியாகும்போது இதன் கிளைமாக்ஸ் காட்சி அதைவிட

'மனிதன்' வெள்ளி விழாவில் S.P.முத்துராமன், T.T.வாசு, ரஜினிகாந்த்துடன்



சிறப்பாக இருக்கலாம் என்று தோன்றுகிறது. இது என் அபிப்ராயம்தான், ஏற்பது உங்கள் இஷ்டம்'' என்று இயக்குனரிடம் சொல்லி வந்து விட்டேன். ஏதோ ஒரு ஆர்வத்தில் அப்படிச் சொல்லிவிட்டு வந்தாலும், பிறகு ரொம்பு வருத்தப்பட்டேன். சொல்லியிருக்க வேண்டாமே என்று தோன்றியது.

சில நாட்கள் கழித்து திரு.முத்துராமன் அவர்கள் மறுபடி 'மனிதன்' படக் காட்சியைப் பார்க்க அழைத்தார். சென்றேன். கிளைமாக்ஸ் காட்சி மாற்றப்பட்டு சிறப்பாக வந்திருந்தது.

எனக்கு ஒரே ஆச்சர்யம்! எப்போது திரு.ரஜினிகாந்த் கால்ஷீட் கொடுத்தார், எப்போது படப்பிடிப்பை நடத்தினார்கள் - ஒன்றும் புரியவில்லை.

பிறகு விசாரித்தபோது தெரிந்தது - ஒரு ஞாயிற்றுக்கிழமை அன்று காலை வேறு படப்பிடிப்பிலிருந்த ரஜினிகாந்த் அவர்கள் பெங்களூரிலிருந்து விமானத்தில் வந்து, காட்சியில் நடித்துக் கொடுத்து, மாலை விமானத்தில் பெங்களூர் திரும்பி விட்டார் என்று.

நடிகரின் மற்ற அலுவல்களுக்கு இடையூறு வராமல் ஞாயிறு அன்று அவரை வரவழைத்தது; அவர் வரும் நாளில் அத்தனையும் முடித்துவிட வேண்டும் என்று மிகச் சரியாகத் திட்டமிட்டு வைத்திருந்தது; முக்கியமாய், யாருக்கும் மனவேதனை ஏற்படாமல் பணிவாய் வேண்டுகோள் விடுத்து, தயாரிப்பாளர் வரை பிரச்னை வராமல் காரியத்தை முடித்தது;

இவை அத்தனையும் எஸ்.பி.முத்துராமன் என்ற நல்ல மனிதரின் சாந்தமான சமரச மனப்பாங்கினால்தான் சாத்தியமாகியது என்றால் மிகையாகாது.

ஒரு திரைப்படம் தயாரிப்பது என்பது எளிதான விஷயமல்ல. ஒவ்வொரு கட்டத்திலும் விரிசல்களுக்கும் பிளவுகளுக்கும் நீர்வார்க்கும் தூண்டுதல்கள் ஏராளம் உண்டு. இவற்றைக் கட்டுப்படுத்தி கைக்குள் அடக்கி, வெளியே சலனமே கேட்காமல் வைத்திருப்பதற்கு ஒரு தனித்திறமை வேண்டும்.

எங்கள் நிறுவனத் தயாரிப்பில் பல படங்களை திரு.எஸ்.பி.முத்துராமன் இயக்கியிருப்பது, அவரிடம் இந்தத் திறமை இருப்பதற்குச் சான்று.

சொல்லப்போனால், இப்போதெல்லாம் அவரைச் சற்று திட்டக்கூட செய்கிறேன் - ''ஏன் இப்படி ஒரு அற்புதமான திட்டமிடுதலையும், நேர்மையையும், கட்டுக்கோப்பையும் காண்பித்து எங்களையெல்லாம் கெடுத்து விட்டிருக்கிறீர்கள். உங்களுடைய

பிரமாதமான திறமையினால் பிரச்னையே இல்லாமல் படமெடுக்க எங்களையும் பழக்கிவிட்டு மற்றவர்களிடமும் இதே மாதிரி எதிர்பார்க்க வைத்து விட்டீர்களே, இது நியாயமா? உங்களிடம் பொறுப்பை ஒப்படைத்துவிட்டு நாங்கள் ரிலாக்ஸாக இருக்கிற மாதிரி மற்றவர்களிடம் இருக்க முடியவில்லையே!'' என்று பார்க்கும் போதெல்லாம் ஆதங்கப்படுகிறேன், ஒருவிதப் பெருமிதத்துடன்.

சமரசத்தைப் பற்றிப் பேசும்போது எங்கள் குடும்ப வழக்கறிஞர் திரு.ஆர்.நாராயணன் அவர்களைப் பற்றி குறிப்பிடாமல் இருக்க முடியாது. பொதுவாக ''ஊர் இரண்டுபட்டால் கூத்தாடிக்குக் கொண்டாட்டம்'' என்கிற பழமொழி வழக்கறிஞர்களுக்குப் பொருத்தமானது என்று சொல்வார்கள். இதை நான் தவறாகக் குறிப்பிடவில்லை. அவர்களின் தொழில்முறையினால் சாதாரணமாக இப்படிச் சொல்லி நான் கேட்டிருக்கிறேன். ஆனால் திரு.நாராயணன் இந்த வார்த்தைகளுக்குப் பொருத்தமில்லாதவர்.

வழக்கு என்று யார் அவரிடம் சென்றாலும், சம்பந்தப்பட்டவர்களை நேரில் அழைத்து பிரச்னையைப் பற்றி தீர விசாரித்து, வழக்கு கோர்ட் வரை செல்லாமலேயே விவகாரத்தை முடித்து விடுவார். நீதிமன்றத்துக்கு வெளியிலேயே பல வழக்குகள் இவரால் தீர்க்கப்பட்டு விடும். சரி, பிரச்னைதான் தீர்ந்து போய் விட்டதே, தனக்குரிய ஃபீஸ் பணத்தையாவது வாங்கிக் கொள்வாரா என்றால், அதுவுமில்லை. நீதிமன்றத்துக்குச் சென்று வழக்காடி ஜெயித்த பிரச்னைகள், வெளியில் சமரசம் செய்து விவகாரத்தை முடித்த பிரச்னைகள் - எதுவானாலும் கறாராகப் பணம் வசூலிப்பது இவர் வழக்கமல்ல. ''எப்படியோ பிரச்னை தீர்ந்து அவர்கள் சுமுகமாக இருந்தால் சரி'' என்பார்.

எப்படியாவது கேஸ் கிடைக்காதா என்று காத்திருக்கும் வக்கீல்கள் மத்தியில் இப்படியொரு நல்ல மனிதர் எங்களுக்கு சட்ட ஆலோசனைகள் கூறி வருவது மகிழ்ச்சியைத் தரும் விஷயம்.

அட்வகேட் நாராயணன், ஆடிட்டர் ஸ்ரீதர்



# 4. வழி சொன்னால் வசவு



பல வருஷங்களுக்கு முன் நடந்தது இது.

என் நண்பனும் நானும் மயிலை பி.எஸ்.உயர்நிலைப்பள்ளி அருகே ஒரு முச்சந்தியில் நின்று பேசிக் கொண்டிருந்தோம். வயதான மூதாட்டி ஒருவர் அருகில் வந்தார். ''கபாலி கோவிலுக்கு எந்தப் பக்கம் போகணும்பா?'' என்று கேட்டார். நான் விபரமாக வழி சொன்னதும் என்னை நன்றியோடு வாழ்த்திவிட்டு நடக்க ஆரம்பித்தார்.

அருகிலிருந்த நண்பன் சும்மா இருக்காமல் அந்த மூதாட்டியைத் திரும்பக் கூப்பிட்டான். ''பாட்டி, இவன் சொன்ன வழி சரியில்லை. கபாலி கோவிலுக்கு இந்தப் பக்கம் போகக் கூடாது, அந்தப் பக்கமா போ'' என்று நேர் எதிரான பாதையை விளக்க ஆரம்பித்தான். எனக்கு சங்கடமாக இருந்தது.

இப்போது அவனை வாழ்த்தின மூதாட்டி என்னைப் பார்த்து ஏதோ வருத்தமாகச் சொல்லிவிட்டுப் போனார்.

''எதற்காக தப்பு வழி காட்டினாய்?'' என்று நண்பனிடம் கேட்டேன்.

''நீ சரியான வழி காட்டியும் உனக்கு வசவுதான் கிடைத்தது, எனக்கு வாழ்த்து கிடைத்ததே!'' என்று சிரித்தான். ''எவ்வளவு நேரம் இந்த வாழ்த்து நிற்கும்? கொஞ்ச தூரம் போனதும் வழி தப்பு என்று நிச்சயம் புரிந்துவிடும், அப்போது திரும்பி வந்து திட்டுவாரே!'' என்று நான் சொன்னதும் நண்பன் மறுபடி சிரித்தான்.

''கிழவி வருகிற வரை நாம் இங்கே நின்றிருந்தால்தானே!'' என்றபடி நடக்கத் துவங்கிவிட்டான்.

வசதியான வீட்டுப் பிள்ளையான இந்த நண்பன் பெயரில் பல லாரிகள் ஓடிக் கொண்டிருந்தன. நல்ல வருமானம். ஆனால் பல வருஷங்களுக்குப் பின் அவனை சந்தித்தபோது அதிர்ச்சியாக இருந்தது.

முன்பிருந்த உடல் வலிமையோ செழுமையோ இல்லை. மிகுந்த சிரமத்தில் இருக்கிறான் என்பது உடனேயே தெரிந்தது. சொத்து முழுவதும் கரைந்து போய் விட்டதாம். ''உடனே நீ வேலை கொடுக்கவில்லை என்றால் சாப்பாட்டுக்கே வழியில்லை'' என்றான் என்னிடம். எனக்கு திடுக்கென்றது. கூடவே, கபாலி கோவிலுக்குப் போக வழி கேட்ட மூதாட்டியின் நினைவுதான் வந்தது.

தப்பான வழியில் சிரமப்பட்டு நடந்துபோன அவர் எவ்வளவு தூரம் நடந்தபின் உண்மையைக் கண்டுபிடித்தாரோ! உடனே என்ன செய்திருப்பார்? ''என்னை சிரமப்படுத்தி விட்டாயே பாவி, நீ நன்றாக இருப்பாயா?'' என்று வயிற்றிலிருந்து சாபம் கொடுத்திருப்பார்.

இதோ, அந்த சாபம் பலித்திருக்கிறது. எத்தனை பயங்கரமாகப் பலித்திருக்கிறது! இது ஒன்று மட்டுமா? இன்னும் எத்தனை பேரின் மனவருத்தத்தை சம்பாதித்திருக்கிறான் என்பதை நினைக்கும்போது அவனது கஷ்டகாலத்துக்கான காரணம் புரிகிறது.

கார் பிரயாணத்தின்போது தப்பித் தவறி நாய் ஏதாவது அடிபட்டு விட்டால் நமக்கெல்லாம் வேதனையாக இருக்கும். ஆனால், ''இன்று நான்கு நாய் அவுட்'' என்று பெருமை பேசும் ஒருவனுக்கு மனம் எவ்வளவு வக்கிரமாக இருக்க வேண்டும்?

தெரிந்த கம்பெனி ஒன்றில் நண்பனுக்கு வேலை வாங்கிக் கொடுத்தேன் என்றாலும் அவன் நிலைக்காக அதிகமாகப் பரிதாபப்பட என்னால் முடியவில்லை.

கல்லடி பட்டாலும் கண்ணடி படக்கூடாது என்று பெரியவர்கள் சொல்வார்கள். அதைவிட அதிகமாக நான் நம்புவது - மற்றவர்களின் வயிற்றெரிச்சலை, முக்கியமாக பெரியவர்களின் வயிற்றெரிச்சலை சம்பாதிக்கக்கூடாது என்பதுதான்.

மற்றவர்களுடைய வயிற்றெரிச்சலைக் கிளப்பி விடாமல் இருக்க நாம் மிக ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். நம்முடைய வளர்ச்சியிலோ, நல்வாழ்விலோ பொறாமை கொண்டு காழ்ப்புணர்ச்சியோடு வயிறெரிபவர்களை நாம் ஒன்றும் செய்ய முடியாது. அவர்கள் சாபம் கொடுக்கும்பேது அதில் நியாயம் இருக்காது என்பதால் பலித்துவிடுமோ என்கிற பயமே தேவையில்லை. இப்படி, பொறாமையால் வரும் வயிற்றெரிச்சலைத்

தடுக்க முடியாதெனினும் நம்மால் பாதிக்கப்பட்டவர்கள் உண்மையாக வயிறெரிந்தால் அது நமக்கு பாதிப்பைத்தான் ஏற்படுத்தும் என்று நான் உறுதியாக நம்புகிறேன்.

சில சமயம் பெற்றோரே தங்கள் குழந்தைகளை சாபமிடுகிற மாதிரி திட்டுவதைப் பார்க்கிறோம். அதை 'சாபம்' என்று நினைப்பது தவறு. 'நீ உருப்பட மாட்டாய்' என்று திட்டுவது தங்கள் குழந்தைகள் நன்றாக இருக்க வேண்டுமே என்கிற ஆதங்கத்தில் எழும் ஒரு கோபச் சொல்தானே தவிர, உண்மையில் அப்படி நினைத்து சொல்லப்படுவதல்ல. குழந்தைகளிடையே ஏற்படும் மோதல்களின்போதும், அழும் குழந்தையை சமாதானப்படுத்த மற்றொரு பிள்ளையைத் திட்டுவது பெற்றோரின் வழக்கம். இதுவும் அன்பின் காரணமாக உண்டாகும் உரிமைதான். கோழி மிதித்து குஞ்சு முடமாகி விடுவதில்லை.!

சொல், செயல் அல்லது நடத்தை - எதுவானாலும் அதில் கவனம் வேண்டும். அதிலும் பெரியவர்களின் மனவருத்தத்தையோ கருத்து வேறுபாடுகளையோ தூண்டாமல் இருப்பது மிக முக்கியம். இதனை எனக்குப் புரிய வைத்தவர் புரட்சித் தலைவர் எம்.ஜி.ஆர். அவர்கள்.

எங்கள் 'அன்பே வா' படத்தில் அவர் நடித்துக் கொண்டிருந்த நேரம். எனக்கு எப்போதுமே எம்.ஜி.ஆர். அவர்கள் மீது தனி அன்பும் அபிமானமும் உண்டு என்பதால் பல சமயங்களில் அவரை சும்மா பார்த்துக் கொண்டிருப்பதுகூட எனக்கு சந்தோஷமான விஷயமாக இருக்கும். அதனால் செட்டில் அவர் நடிக்கும்போது அடிக்கடி சென்று பார்ப்பேன். எங்கள் பட ஷூட்டிங் என்றில்லை., அப்போது அவர் நடித்துக் கொண்டிருந்த அமரர் சின்னப்பா தேவரின் படத்தின் படப்பிடிப்புக்கும் சென்று பார்த்துவிட்டு வருவேன். நான் செட்டுக்கு வருவதை கவனித்த புரட்சித்தலைவர் என்னை அழைத்தார்.

**சிம்லாவில் 'அன்பே வா' படப்பிடிப்பில் எம்.ஜி.ஆருடன் (1966)**



''என்னைப் பார்க்க வேண்டுமானால் போன் செய்துவிட்டு வீட்டுக்கு வந்து பாருங்கள். இல்லாவிட்டால் நான் உங்களை வந்து பார்க்கிறேன்; பேசுகிறேன். இங்கே ஸ்டூடியோவில் நான் நடிப்பதை வந்து பார்ப்பது தவறு என்று சொல்லவில்லை. ஆனால், நீங்கள் இப்போது நண்பர் மட்டுமில்லை, ஒரு தயாரிப்பாளரும்கூட. அதனால், அடுத்தவர் படத்தின் ஷூட்டிங்குக்கு அடிக்கடி வந்தால், நான் ஏதோ உங்களை கால்ஷீட்டுக்காக அலையவிடுவதாக பார்க்கிறவர்கள் நினைத்து விடுவார்கள்.'' என்றார்.

தயாரிப்பாளரை அலையவிடக்கூடாது என்பதோடு, அலைய விடுவதாகத் தவறாகக்கூட யாரும் நினைத்துவிடக்கூடாது என்பதில் மிகுந்த கவனம் கொண்டு அவர் சொன்ன வார்த்தைகள் எனக்குள் ஒரு புதிய கண்ணோட்டத்தையே ஏற்படுத்தின. இன்று பல துறைகளிலும் இப்படி 'அலையவிடுபவர்கள்' இருப்பதைப் பார்க்கும்போது புரட்சித் தலைவரின் கரிசனம்தான் நினைவுக்கு வருகிறது.

எந்த விஷயத்தையும் முடிந்தால் செய்து கொடுத்துவிட வேண்டும், முடியாது என்றால் அதை வெளிப்படையாகத் தெளிவுபடுத்திவிட வேண்டும். எதையும் பளிச்சென்று கூறாமல், 'இன்று வா' 'நாளை வா' என்று வீணாக அலையவிடுவது தேவையற்ற கசப்பைத்தான் உண்டாக்கும். வெகு காலம் இப்படி வீணாக அலைந்த பிறகும் காரியம் ஆகாமல் போகும்போது ஏற்படக்கூடிய ஆத்திரமும் வயிற்றெரிச்சலும் நம்மை நிச்சயம் பாதிக்கும்.

திருமணத்துக்குப் பெண்பார்க்கப் போகும்போது இப்படிப்பட்ட 'இழுத்தடிப்புகள்' மிக சகஜமாக நடைபெறுகின்றன. தேவையான அத்தனை விபரங்களையும் விசாரித்துத் தெரிந்துகொண்டு, பிறகுதான் பெண்பார்க்கவே பலரும் வருகிறார்கள். அதுவும், மணமகனோடு அவனுக்கு வேண்டிய மனிதர்களும் உடன் வந்திருப்பார்கள். அப்படியும், பெண்ணைப் பார்த்த பிறகு உடனே ஒரு தெளிவான பதிலைச் சொல்லாமல், 'ஊருக்குப் போய் லெட்டர் எழுதறோம்' என்பார்கள். இதுகூட பரவாயில்லை, அவர்களுக்குள் கலந்தாலோசித்து முடிவெடுக்கக் கொஞ்சம் அவகாசம் தேவைப்படுகிறது என்று ஒரு நியாயம் கற்பித்துக் கொள்ளலாம். ஆனால், லெட்டர் போடுகிறோம் என்று சொல்லிப் போகிறவர்களில் பெரும்பாலானவர்கள் பதிலே போடுவதில்லை! ஒரு வாரம், ஒரு மாதம் என்று நாட்கள் ஓடியபின், பெண்ணைப் பெற்றவர்களே பொறுக்க முடியாமல் எழுதிக் கேட்டால், அதற்கும் சரியான பதில் கிடைப்பதில்லை. ஒருவேளை வேறு நல்ல வரன்களே கிடைக்கவில்லை என்றால், இதையே போனால் போகிறது என்று

முடிக்கலாம் என்றும்கூட சிலர் நினைப்பதுண்டு! இதெல்லாம் எதற்காக! பெண்ணைப் பெற்றவர்களை இப்படி அலையவிடுவதை, என்னைப் பொறுத்தவரை, ஒரு பெரிய குற்றமாகவே நினைக்கிறேன்.

தீர்மானமாக ஒரு முடிவைக் கூறாமல் மனிதர்களை இழுத்தடிப்பதால் தற்காலிகமாக ஒரு வெற்றி கிடைப்பதாகத் தோன்றும் சிலருக்கு. ஆனால், நம்மைத் தேடி அலையும் மனிதர்கள் அலுத்து சலித்து அலைவதை நிறுத்தியதும் அவர்களின் வயிற்றெரிச்சல் நம் பின்னால் அலையும் என்பது நினைவில் கொள்ள வேண்டிய விஷயம்.

மாறாக, பெரியவர்கள் ஆசீர்வாதத்தைப் பெறும்படி நம் நடத்தை அமைந்தால் அதைவிட பெரிய வரப்பிரசாதம் வேறில்லை. நாம் நன்றாக இருக்க வேண்டும் என்று அவர்கள் மனமார வாழ்த்தினால், அந்த வாழ்த்துக்கு இருக்கும் சக்தி அளவிட முடியாதது.

பெரியவர்கள், ஆசிரியர்கள், தாய், தந்தை இவர்கள் வாழ்த்தும் ஆசீர்வாதமும் யாருக்குக் கிடைக்கிறதோ அவர் வாழ்க்கை கண்டிப்பாக நல்ல முறையில் செல்வதை நான் கண்கூடாகக் கண்டிருக்கிறேன்.

ஆண்டவனின் ஆசீர்வாதத்துக்கு முயற்சி செய்வதைப் போலவே பெரியவர்களின் ஆசீரவாதமும் தேவை என்று உணருவது அவசியம். ஆயிரக்கணக்கான நல்ல மனிதர்களின் வாழ்த்துக்களும் வேண்டுதல்களும் நடிகர் அமிதாப் பச்சன் விபத்திலிருந்து உயிர் பெற்று வர உதவியது எல்லோரும் அறிந்த ஒன்று.

மறைந்த முதல்வர் திரு. எம்.ஜிஆர். அவர்களின் தர்மமும், பலரின் வாழ்த்துக்களும், பிரார்த்தனைகளும் அவரது உடல்நிலையில் முன்னேற்றம் ஏற்படுத்தியதை மறுக்க முடியுமா?

என் மகன் M.S.குகன், எம்.ஜி.ஆருடன்





(குமுதம் ஆசிரியர்) S.A.P.அண்ணாமலை, கிருபானந்த வாரியார்

என் தந்தைகூட, ஒருமுறை எங்கள் நிறுவன குடும்பத்தில் நெருக்கடியான நிலைமை ஏற்பட்டபோது, தான் மிகுந்த மதிப்பு வைத்திருந்த குமுதம்' ஆசிரியர் திரு. எஸ்.ஏ.பி. அண்ணாமலை அவர்களுக்கும், திருமுருக கிருபானந்தவாரியார் அவர்களுக்கும் கடிதம் எழுதி, ''என் மன நிம்மதிக்காக நீங்கள் பிரார்த்தனை செய்ய வேண்டிக் கொள்கிறேன்'' என்று எழுதியிருந்தார்.

அவர்களிடமிருந்து வந்த பதில் தனக்கு மிகவும் ஆறுதலைத் தந்தது என்றும், சோர்வில்லாமல் செயல்பட தன்னைத் தூண்டிவிடும் உந்துதலாக இருந்தது என்றும் தந்தையார் கூற கேட்டிருக்கிறேன்.

பெரியவர்களின் வாழ்த்தும் ஆசியும் நமக்கு எத்தனை நிம்மதி தரும், எப்படி நம்மை நல்வழிப்படுத்தும் என்பதை நான் மேலும் அழுத்தமாகத் தந்தையிடமிருந்து உணர்ந்தேன்.

# 5. மிக்க நன்றி!



மனித வாழ்க்கையில் யாராவது ஒருவரையேனும் நம்பித்தான் நாம் வாழ்கிறோம். இமயமலையில் இருக்கும் சந்நியாசிக்கு வேண்டுமானால் யார் உதவியும் தேவையில்லாமல் வாழ முடியும். ஆனால் நம்மைப் போன்ற சாதாரண மனிதர்கள்?

சிலர் கூறுவார்கள், ''எனக்கு யார் தயவும் தேவையில்லை, யாரையும் நம்பி நான் இல்லை'' என்று.

இது அகந்தையின் அடையாளம் என்றால் மிகையில்லை. எனக்குத் தெரிந்தவரை யாரும் இப்படி வாழ முடியாது. அது சிறியவரோ, பெரியவரோ, பணக்காரரோ, ஏழையோ - எவர் உதவியாவது கட்டாயம் நமக்குத் தேவை. நம் உதவியும் அவர்களில் ஒருவருக்காவது அவசியம். இது ஒரு சங்கிலித்தொடர்.

நமக்கு உதவி செய்பவருக்கு நன்றி கூறவேண்டியது மனித இயல்பாக இருக்க வேண்டும். சொல்ல வேண்டிய இடத்தில் சரியான சந்தர்ப்பத்தில் அவரது உதவியை அங்கீகரித்து அதற்குரிய நன்றியை செலுத்துவது ஒரு முக்கிய கடமையுமாகும்.

ஆனால் பல சந்தர்ப்பங்களில் இந்தக் கடமையை மறந்து விடுகிறோம். ஒரு பணி நிறைவடையும்போது, அதை வெற்றிகரமாக முடித்து விட்டோம் என்ற சந்தோஷம் ஏற்படுவது இயற்கை. ஆனால், இதை முடித்து வைக்க நமக்கு உதவியர்கள் யார் யார் என்று நினைத்துப் பார்த்து, அவர்களுக்குரிய நன்றியைத் தெரிவித்தோமா என்று யோசித்துப் பார்க்க வேண்டும்.

நன்றி சொல்லத் தவறிவிடும்போது, அதை எதிர்பார்த்துக் காத்திருப்பவர்களுக்கு ஏமாற்றமே ஏற்படும். இதைத் தவிர்க்க, உடனுக்குடன் நன்றியைத் தெரிவித்துவிடுவது அவர்களை மகிழ்வித்து உற்சாகப்படுத்துமே!

யாராவது நமக்கு நன்றி சொல்லாமல் விட்டு விட்டால், ''ச்சே! இவ்வளவு செய்திருக்கிறோம், ஒரு தேங்க்ஸ் கூட சொல்ல வில்லையே'' என்று ஒரு கணமாவது வருத்தம் தோன்றுவது எல்லாருக்கும் இயற்கையே. இப்படிப்பட்ட மனத்தாங்கல் எழும்போது, ''இவரைக் குறை சொல்கிறேனே. நான் யார் யாருக்கு நன்றி சொல்லாமல் விட்டேனோ'' என்று கொஞ்சம் யோசித்துப் பார்க்கும் பக்குவமும் உடன் ஏற்பட்டால் நல்லது.

தினந்தோறும் யோசித்துப் பார்க்க வேண்டிய ஒரு முக்கியமான விஷயம் இது. காசு பணம் செலவழித்துத்தான் நமது மகிழ்வைத் தெரிவிக்க வேண்டும் என்பதில்லை. வாய் வார்த்தையாய் சரியான சந்தர்ப்பத்தில் நம் உள்ளத்திலிருந்து வெளிவரும் ஒரு சொல் மிகுந்த மதிப்பு வாய்ந்தது.

நேரிலோ, கடிதம் மூலமோ தொலைபேசியிலோ - எப்படி வேண்டுமானாலும் நமது நன்றி அவர்களைச் சென்றடைவது மிகவும் அவசியம்.

நன்றி பாராட்டுதல் என்பது இதோடு முடிந்துவிடும் விஷயமல்ல.

உதவியைப் பெறுபவருக்கும் செய்பவருக்கும் மட்டுமே தெரிந்த ஒரு செய்தியாக இது இருக்க வேண்டும் என்பது, உதவி செய்பவரது நோக்கில் சரியான வாதம். ஆனால், உதவி அடைந்தவர் அதை அப்படி விட்டுவிடலாமா?

மதிப்புக்குரிய அமைச்சர் திரு. ஆர்.எம்.வீரப்பன் அவர்களிடம் நான் பல சமயங்களில் பார்த்த ஒரு நல்ல பழக்கம் உண்டு. தனக்குக் கிடைத்த உதவியைப் பிறரிடம் சொல்லிக் கொள்ள அவர் தயங்கியதேயில்லை. ஒரு காலத்தில் அவருக்கு என் தந்தையார் படம் எடுக்க உதவியிருக்கிறார். இதைப் பல காலம் குறிப்பிட்டு அவர் நன்றியோடு பேசியதை நானே கேட்டிருக்கிறேன்.

**ராஜேஸ்வரி திருமண மண்டபத்தில் நடந்த ஏவி.எம். அறக்கட்டளையின் முதற் சொற்பொழிவில் ராஜேஸ்வரி மெய்யப்பன், அ.ச.ஞானசம்பந்தன், RM. வீரப்பன்.**





தனக்கு உதவிய வேறு சிலரைப் பற்றியும்கூட, ''இவரால்தான் நான் இதை அடைந்தேன், அவரால்தான் நான் இதைச் செய்ய முடிந்தது, இவர்கள்தான் என்னை வாழ வைத்தவர்கள்'' என்று பொது இடங்களில்கூட சொல்ல அவர் தவறியதேயில்லை.

''இப்படி நன்றியை மறக்காமல் பாராட்டுவதால் நம் மதிப்பும் மரியாதையும்தான் அதிகரிக்கிறதே தவிர நாம் எந்த விதத்திலும் குறைந்து போவதில்லை'' என்று அவர் சொல்லும்போது அவர் மீது நான் கொண்டுள்ள மரியாதை பல மடங்கு விஸ்வரூபம் எடுத்து விடுகிறது.

வாழ்க்கையில் பலரிடமிருந்து உயர்ந்த பல குணங்களை நாம் கற்றுக் கொள்கிறோம். யாரிடமிருந்து எந்த நல்ல குணத்தை எடுத்துக் கொண்டாலும், ''அவரிடமிருந்து இந்தப் பண்பைக் கற்றேன்'' என்று சொல்லும் மனப்பான்மையும் வளர வேண்டும்.

நன்றியைப் பற்றிப் பேசும்போது என் தந்தை சம்பந்தப்பட்ட விஷயம் ஒன்று நினைவுக்கு வருகிறது. ஒவ்வொரு வருடமும் ஆகஸ்டு மாதத்தில் மூன்று நாட்கள் 'கம்பன் விழா' நிகழ்ச்சிகள் எங்கள் ஏ.வி.எம். ராஜேஸ்வரி திருமண மண்டபத்தில் நடைபெறுவது வழக்கம். இதற்காகக் கட்டணம் ஏதும் பெறாமல் மண்டபத்தை இலசமாக உபயோகித்துக் கொள்ள என் தந்தை அனுமதி

அளித்தபோது, விழா அமைப்பாளர் அவருக்கு மகிழ்ச்சியோடு தங்கள் நன்றியைத் தெரிவித்தார்கள். அந்த நன்றிக்கு என் தந்தை கூறிய பதில் என்ன தெரியுமா?

''எனக்கெதற்கு நன்றி? இப்படிப்பட்ட உயர்ந்த இலக்கிய விழாவை நடத்த எங்கள் மண்டபத்தைத் தேர்ந்தெடுத்திருப்பது எங்களுக்குப் பெரிய கௌரவமாகும். இதற்காக நான் அல்லவா உங்களுக்கு நன்றி சொல்ல வேண்டும்!''

கடந்த பதினேழு வருடங்களாக எங்கள் கல்யாண மண்டபத்தில் இவ்விழா துவங்கும் முதல் நாளில் நீதிபதி திரு.மு.மு. இஸ்மாயில் அவர்கள் என் தந்தையாரின் இந்த நன்றி பாராட்டுதலைப் பற்றிக் குறிப்பிட்டுப் பூரித்துப் போகாத வருடமே இல்லை!

நன்றி தெரிவிப்பதில் ஒருவரையொருவர் மிஞ்சுவத்தை தெளிவாக்க வேறென்ன சிறந்த உதாரணம் இருக்க முடியும்?

மற்றவர் நமக்கு உதவும்போது மறக்காமல் நன்றி சொல்லிவிட வேண்டும் என்று நாம் உறுதியாகக் கடைப்பிடிக்கலாமே தவிர, நம்மிடமிருந்து உதவி பெற்றவர் இதேபோல் நன்றி தெரிவிக்க வேண்டும் என்று உத்தரவு போடுவது சாத்தியமா? அது நல்ல பண்புதானா?

என் கருத்தை அடுத்த அத்தியாயத்தில் சொல்கிறேன்

**ஏவி.எம். அறக்கட்டளைச் சொற்பொழிவில் நீதிபதி மு.மு. இஸ்மாயீல்**



# 6. போதுமென்ற மனமே...



உதவி செய்வது என்பதே ஒரு கலை. மிக நாசூக்காக, பெறுபவரின் தேவை அறிந்து செய்யப்பட வேண்டிய விஷயம்.

விளம்பரம் கிடைக்கும் என்பதற்காகவோ அல்லது அவர்கள் நம்மிடம் நன்றியுடன் இருக்க வேண்டும் என்பதற்காகவோ உதவி செய்யப்போனால் பிரச்னைதான் வரும்.

நாம் உதவி கேட்கும் நிலை வராமல் நம்மால் மற்றவருக்கு உதவ முடிகிறதே, இது ஆண்டவன் நமக்குக் கொடுத்திருக்கும் அரிய சந்தர்ப்பம் என்ற நோக்கில் நமது உதவி அமைய வேண்டும்.

இதைப் பற்றிச் சொல்லும்போது மீண்டும் என் தந்தை ஞாபகம் வருகிறது. அவர் ஒருமுறை சொன்னார், ''பள்ளிக்கூடம், கல்லூரி போன்றவற்றுக்கு பண உதவி செய்தால், பதிலுக்கு 'வருஷத்துக்கு ஒரு சீட் கொடுக்க வேண்டும்' என்று கேட்பது தர்மமல்ல. கேட்டால், இதுவும் ஒரு வகை லஞ்சம்தான். பிரதிபலனை எதிர்பார்த்துச் செய்தால் அது மனக்கசப்பில்தான் முடியும். நாம் கொடுக்கும்போது வாங்கிக் கொள்பவர்கள் அடையும் மகிழ்ச்சியை விட, நம்மால் கொடுக்க முடிகிறதே என்று நம் மனதில் தோன்றும் மகிழ்ச்சி அதிகம். இந்த மகிழ்ச்சிக்கு ஈடு வேறு எதுவும் இல்லை. உண்மைதான். இந்த சந்தோஷம்கூட மனசுக்குள்ளேயே இருக்க வேண்டுமே தவிர, அதைப் பெருமையாகப் பிறரிடம் வெளிப்படுத்துவதும் தேவையில்லை. உதவி செய்தேன் என்று சொல்லி நம்மைப் பெருமைப்படுத்திக் கொள்வது, நம்மிடம் உதவி பெற்றுக் கொள்பவரை இழிவு படுத்துவதாக ஆகாதா?

செய்த உதவிக்காக அவர் நன்றியோடு இருக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பதும் கூடாதுதான். இது தவறா சரியா என்கிற வாதத்தைவிட, அப்படி அவர் நன்றியோடு இல்லையென்றால் ஏமாற்றம்தான் நமக்கு மிஞ்சும் என்ற நோக்கிலாவது இந்த எதிர்பார்ப்பைத் தவிர்க்க வேண்டும்!

பல நேரங்களில் பல இடங்களில் நம்மை அறியாது நமக்கு உதவி செய்தவர்க்கு நன்றி சொல்ல மறந்து விடுகிறோம்; அல்லது சொல்ல வேண்டிய அளவுக்குச் சொல்ல வேண்டிய முறையில் சொல்லாமல் இருந்திருப்போம் என்பதைப் பற்றி போன அத்தியாத்தில் சொன்னேன்.

நம்மைப்போல் பிறரும் மறந்திருக்கலாம் என்பதை நினைவில் வைத்துக் கொண்டால் ஏமாற்றங்களைத் தவிர்க்கலாம்.

அதோடு, 'இது பெரிய உதவி, இதற்கு இவர் நம்மிடம் ஆயுளுக்கும் கடமைப் பட்டுக் கிடக்க வேண்டும்' என்ற நோக்கில் செய்வதை 'உதவி' என்று கூற முடியாது. இது அதிகார தோரணையால் நம் அந்தஸ்தைக் காட்டிக் கொள்ளும் நாகரிகமில்லாத செயல்!

கூடியவரை மறைமுகமாக, உதவி பெறுபவருக்கே நாம் உதவி செய்வது தெரியாமல் உதவ முடிந்தால் அதைவிடச் சிறந்த உதவி இருக்க முடியாது என்று நான் எண்ணுகிறேன்.

ஒரு தொழிலாளிக்குக் கூலி கொடுப்பதுகூட, அவன் தேவைக்குக் கொடுக்காமல் உழைப்புக்கேற்ப அளிப்பதே நல்லது. அதிலும் அதிகப் பிரச்சினை இல்லாத அளவில் செயல்படுத்துவது அவசியம்.

இதை ஏன் சொல்கிறேன் என்றால் 'மனத்திருப்தி' என்னும் வார்த்தையே வினோதமானது; வேடிக்கையானது! ஒரு உதாரணம் சொல்கிறேன், கேளுங்கள்.

எங்களது அச்சகப் பிரிவில் வேலை செய்து கொண்டிருந்த ஒருவர் என்னிடம் வந்து, ''இந்த ஆண்டு எவ்வளவு ஊதிய உயர்வு கொடுக்கப் போகிறீர்கள்?'' என்று கேட்டார்.

வெகு நாட்களாகத் திருப்தியே இல்லாமல் இருந்த அவரை இந்த முறை எப்படியாவது திருப்திப்படுத்திவிட வேண்டும் என்று ஒரு ஆசை எனக்கு ஏற்பட்டு விட்டது பணம் அதிகமானாலும் பரவாயில்லை என்கிற எண்ணத்தில், ''எவ்வளவு கொடுத்தால் நீங்கள் திருப்தி அடைவீர்கள்?'' என்றேன்.

இப்படியெல்லாம் நான் கேட்பேன் என்று எதிர்பாராமல் அவர் வேறு ஏதோ திட்டத்தில் வந்திருந்தார் போலிருக்கிறது. அளவை நான் சொன்னால், 'போதாது' என்று மறுத்துவிட நினைத்திருந்தாரோ என்னவோ!

''நூறு ரூபாய் கொடுத்தால் சந்தோஷப்படுவேன்'' என்றார்.

சாதாரணமாக 35 முதல் 50 ரூபாய் வரை உயர்வு பெற வேண்டிய நிலையில்தான் அவர் இருந்தார். இருந்தாலும், சரி, இந்த மாதம் முதல் நூறு ரூபாய் அதிகமாக்கி இருக்கிறேன், சந்தோஷம்தானே?'' என்று கேட்டேன்.

அவருக்கு மகிழ்ச்சி தாங்கவில்லை. ''ரொம்ப சந்தோஷம் சார், இதை நான் எதிர்பார்க்கவேயில்லை! இனிமேல் பாருங்கள் நான் எப்படி வேலை செய்கிறேன் என்று!' என்று சொல்லிவிட்டுப் போனார்.

சில நாட்கள் கழித்து அவர் வேலை செய்யும் பிரிவுக்குப் போனபோது அவர் பழையபடியே மந்தமாகப் பணிபுரிவதைப்பார்க்க நேர்ந்தது.

''நீங்கள் கேட்ட உயர்வைத்தான் கொடுத்து விட்டேனே, பிறகும் இப்படியே இருந்தால் எப்படி?'' என்று கேட்டேன்.

'எனக்கு மட்டுமா கொடுத்தீர்கள்? என்னைப் போல இருக்கும் மற்றொரு நபருக்கும் கொடுத்திருக்கிறீர்களே!''

''நீங்கள் இந்தப் பிரிவுக்குப் பொறுப்பு, அதேபோல் அடுத்த பிரிவுக்கு அவர் பொறுப்பு. இதில் உங்களுக்குக் கொடுத்ததால் அவருக்கும் கொடுப்பதுதானே நியாயம்?'' என்று நான் சொன்னதும் அவர் கூறிய பதிலைப் பாருங்கள்.,

''எனக்கு மட்டும் கொடுத்திருந்தால் சந்தோஷப்பட்டிருப்பேன். அவருக்கும் அதேபோல் கொடுத்தால் இதிலென்ன சந்தோஷம்!''

தனக்குக் கிடைத்தது அடுத்தவருக்குக் கிடைத்துவிடக் கூடாது என்பதில்தான் இவரைப் போன்றவர்களுக்கு எவ்வளவு அக்கறை! இப்படிப்பட்டவர்களின் திருப்தியை எப்படித்தான் கணிப்பது?

# 7. பாராட்டிப் பாருங்கள்!



எனக்கு மிகவும் பரிச்சயமான ஒரு நடிகர்.

அவரைப் பற்றி ஒரு பத்திரிக்கையில் கட்டுரை எழுத வேண்டியிருந்தது. மூன்று பக்கத்துக்கு அவரது சிறந்த குணங்களை விவரித்து எழுதினேன். நான் மிகவும் நேசிப்பவரான அவரிடம் ஒரே ஒரு குறை மட்டும் இருப்பதாக எனக்குப் பட்டது. அதையும் மாற்றிக் கொண்டு விட்டால் எவ்வளவு சிறந்த மனிதராக மாறிவிடுவார் என்று ஒரு எண்ணம். எனவே கடைசி பக்கத்தில் அந்தக் குறையைச் சுட்டிக் காட்டி எழுதினேன்.

கட்டுரை வெளியானது. நடிகரின் ரியாக்ஷன் என்ன தெரியுமா?

நான் சூட்டிய புகழ்மாலைகளையும் மீறி நான் சுட்டிக் காட்டிய குறைதான் பெரிதாகத் தெரிந்திருக்கிறது! எனக்கும் அவருக்கும் நடுவில் பெரிய இடைவெளியையே உண்டாக்கி விட்டது கட்டுரை!

தவறு அவர்மேல் இல்லை. குறை சுட்டிக்காட்டப்படும் போது மனம் புண்பட்டுப் போவது எவருக்கும் இயல்புதானே! இப்போது நிதானமாக எண்ணிப் பார்க்கும்போது அந்தக் குறையைப் பற்றி குறிப்பிடாமலே விட்டிருக்கலாமே, அப்படியே சொல்ல விரும்பியிருந்தாலும் தனிமையில் சொல்லியிருக்கலாம். பத்திரிகையில் பகிரங்கமாகக் கூறியிருக்க வேண்டாமே என்று தோன்றுகிறது. எனவே, தவறு என்மீது தான்.

பொதுவாகவே எல்லாரும் தங்களைப் பற்றிய நல்ல செய்திகளைத்தான் கேட்க விரும்புகிறார்கள். குறைகள் இருப்பதைப் பற்றிக் கேட்க யாரும் விரும்புகிறதில்லை. மனிதர்கள் என்றாலே குறைகளும் உண்டு. நிறைகளும் உண்டு. குறைகளைப் பெரிது படுத்தாமல் நிறைகளை விரிவுபடுத்திச் சொல்லத் துவங்கினால் போதும், நம்மை விரும்பத் தொடங்கி விடுவார்கள்.

பிறர் நம்மைப் புகழ வேண்டும் என்று சளைக்காமல் எதிர்பார்க்கிறோம். ஆனால் மற்றவர்களைப் பற்றிப் பேசும்போது மட்டும் நிறைவான விஷயங்களை மறந்து விடுகிறோம். ஒருவேளை மறக்காமல் இருந்தாலும், பாராட்டுவதில் ஏனோ ஒரு கஞ்சத்தனம் வந்து விடுகிறது!

அன்றாட வாழ்விலேயே காலை எழுந்தது முதல் நாம் பாராட்டக்கூடிய நல்ல நிகழ்ச்சிகள் எத்தனை உண்டு தெரியுமா?

ஒரு சமையல்காரர் நல்ல சமையல் செய்துவிட்டு கதவுக்குப் பின்னால் நின்று கொண்டிருப்பார். சமையலைப் பற்றி நம் வாயிலிருந்து என்ன அபிப்ராயம் வருகிறது என்று எதிர்பார்த்துக் கொண்டு! ஏதேனும் ஒரு பலகாரம் ருசியாக இருந்தால்கூட சமையல்காரரை அழைத்துப் பாராட்டினால் அவருக்கு ஏற்படும் மகிழ்ச்சியே தனிதான்! இதையும்விட நாளைக்கு எல்லாப் பலகார்ங்களையுமே நன்றாக சமைக்க வேண்டும் என்று உறுதி எடுத்துக் கொள்வார்.

என் தந்தையார் எந்த விருந்துக்குச் சாப்பிடச் சென்றாலும் அங்குள்ள சமையல்காரர்கள் அவருக்கு உற்சாகமாகப் பறிமாறுவார்கள். பாயஸமாக இருந்தாலும், சாதாரண பொறியலாக இருந்தாலும் ''ரொம்ப நன்றாக இருக்கிறது, இன்னும் கொஞ்சம் போடுங்கள்'' என்று கேட்டு வாங்கி சாப்பிடுவார்.

ஒரு நாடகம் பார்த்துவிட்டு வந்ததும் அது நன்றாக இருந்ததாக அவருக்குத் தோன்றினால் தவறாமல் ஒரு பாராட்டுக் கடிதம் எழுதி விடுவார். ஒரு வார இதழில் சிறுகதைப் போட்டியில் பரிசு பெற்ற கதை வெளியானதும் அக்கதையைப் பாராட்டி கடிதம் எழுதிப் போட்டதோடு நிற்காமல் தன் பாராட்டைத் தெரிவிக்கும் விதமாக கதையின் ஆசிரியருக்குத் தனது சன்மானமாக ஒரு தொகையையும் அனுப்பி வைத்திருக்கிறார்!

மற்றவர்களைப் பாராட்ட வாய்ப்பு கிடைக்கும்போதெல்லாம் தவறாமல் பாராட்டிவிடும் என் தந்தையாரின் குணத்தைப் பின்பற்றவே

நான் விரும்புகிறேன். தயாரிக்கும் படத்தில் ஒரு சீன் நன்றாக இருக்கிறது என்று யாராவது பாராட்டினால் அது யாருடைய கற்பனையில் உதித்தது என்பதை மறக்காமல், 'இன்னார்தான் இந்தக் காட்சிகான யோசனை கூறியவர், எனவே அவருக்குத்தான் இந்தப் பாராட்டுச் சேர வேண்டும்' என்று சொல்வதன் மூலம் மகிழ்ச்சியும் கௌரவமும் உயருவதாகத்தான் எனக்குப் படுகிறது.

சாதாரண தொழிலாளி தன் கடமையைச் செய்யும்போது கூட பொருத்தமான சந்தர்ப்பத்தில் பாராட்டுக்களைத் தெரிவிப்பது அவர் மேலும் சுறுசுறுப்பாக உற்சாகமாகப் பணிபுரிய வைப்பதாக ஆகும். ஆபீஸ் பையன் ரயில்வே ஸ்டேஷனுக்குச் சென்று நமக்காக டிக்கெட் எடுத்து வந்திருப்பான். அது அவன் பணிதான் என்றாலும் வெயிலில் கியூ வரிசையில் நின்று வாங்கி வந்து கொடுத்து சோர்வுடன் நிற்பவனிடம், ''வெரிகுட், இவ்வளவு சீக்கிரமாக வாங்கி வந்து விட்டாயே!'' என்று நம் சந்தோஷத்தை வெளிப்படுத்தி ஒரு சின்ன பாராட்டு கொடுத்தால், அது அவனைத் தட்டிக் கொடுக்கும் ஒரு இதம் அல்லவா!

இந்தப் 'பாராட்டு' என்ற வார்த்தை வெளியில் மட்டுமல்ல, நம் வீட்டிலும் வர்ணஜாலத்தை உண்டாக்கும் வலிமை படைத்தது. ஒரு மனைவி அழகாக உடை உடுத்தினால், தன் உடையைப் பற்றி கணவனிடமிருந்து பாராட்டை எதிர்பார்ப்பது இயற்கை. அதேபோல் மனைவி மல்லிகைப்பூ சூடினால் அதன் அழகிலும் மணத்திலும் மனதைப் பறி கொடுக்காதவர் யார்! ஆனால் உண்மையாக மனதுக்குள் எழும் அந்தப் பாராட்டு உணர்வை உடனடியாக வெளிப்படுத்தும் பழக்கம் பலருக்கும் இருப்பதில்லை.

''இந்தப் புடவை உனக்கு நன்றாக இருக்கிறது'' என்றோ, ''இன்றைக்கு நீ பூ வைத்திருப்பது அழகாக இருக்கிறது'' என்றோ பாராட்டும் போது மனைவியின் முகத்தில் உருவாகும் மகிழ்ச்சி பிரதிபலிப்பது நம்மிடம்தானே!

'ஆனால் இப்படிச் சொல்வது வெறும் புகழ்ச்சியாக ஆகாதா?' என்று தோன்றுகிறதா? உங்கள் கேள்வியில் தவறில்லை.

மிகவும் நெருக்கமானவர்களாக இருந்தால், குறைகளைக் கோடி காட்டுவது அவர்களை நெறிப்படுத்த உதவும் என்று தோன்றினால் மட்டும் குறையைப் பற்றிப் பேசலாம். ஆனால் அதுவும் நான்கு பேருக்கு முன்னால் வைத்துப் பேசக்கூடாது. தனியாக இருக்கும்போது, இதமான வார்த்தைகளால், அவர்கள் மனம்

புண்படாமல் கூறலாம். கூடவே, அவரிடம் இருக்கும் பாராட்டக்கூடிய நல்ல அம்சத்தைப் பற்றியும் உடனே பாராட்டி விடுவது மிக மிக நல்லது!

'பாராட்டக்கூடிய நல்ல அம்சம்' என்று ஏன் குறிப்பிடுகிறேன் தெரியுமா? எந்தெந்த விஷயங்களுக்காகப் பாராட்டலாம் என்பதிலும்கூட ஒரு அளவு அல்லது கட்டுப்பாடு இருப்பது நல்லது. பாராட்டின் பயனாக சந்தோஷம், உற்சாகம், தன்னம்பிக்கை போன்றவை ஏற்பட்டு மனித வளர்ச்சிக்கு உதவ முடியுமானால் அந்தப் பாராட்டு நிச்சயம் ஆக்கபூர்வமான ஒன்றுதான். ஆனால், அதுவே ஒருவரைத் தவறான பாதைக்கு அழைத்துப் போனால், இப்படிப்பட்ட பாராட்டு மொழிகள் தேவையே இல்லை.

எனக்குத் தெரிந்த நண்பர் ஒருவர். இவர் சிறுவனாக இருந்தபோது, பக்கத்து வீட்டுப் பையனின் ஒண்ணரைக் கண்ணை கேலி செய்வதற்காக தானும் கண்களை உருட்டி பழித்துப் பேசுவாராம். இதைப் பெரியவர்கள் கண்டிக்காமல், 'ஆகா, பையன் என்ன பிரமாதமாக நடித்துக் காட்டுகிறான்!' என்று பாராட்டிப் பேசினார்களாம். இந்தப் பாராட்டை அடிக்கடி பெற கண்களை எப்போதும் அப்படியே வைத்து வைத்து, கடைசியில் நண்பருக்கே ஒண்ணரைக்கண் போல ஆகிவிட்டது! ''என்னை அப்போதே கண்டித்திருந்தால் இப்படி ஆகியிருக்காது. வீணாகப் பாராட்டி ஊக்கம் கொடுத்ததால்தான் இன்று நான் இந்த மாதிரி இருக்கிறேன்'' என்று நண்பரே வருத்தப்பட்டுக் கொண்டார்.

பிறரின் சோகத்திலும் சந்தோஷத்திலும் நமக்கு நிச்சயம் பங்குண்டு. சொல்லாலும் செயலாலும் அடுத்தவரை மகிழ்விப்பது எளிதான விஷயமாக இருக்கும் போது அதைச் செய்யாமல் விடுவது, நமக்கே மகிழ்ச்சி தேவையில்லை என்று ஒதுக்குவதாக ஆகாதா?

வள்ளுவர் சொன்னது நினைவுக்கு வருகிறதா? குறை என்ற காயை விட்டுவிட்டு பாராட்டு என்ற பழத்தைப் பறிப்பது மேல் அல்லவா?

# 8. நேர்மை மட்டும் போதாது!




முன்னாள் பிரதமர் லால் பகதூர் சாஸ்திரி, துணைவி லலிதா சாஸ்திரி, என் சகோதரி மீனா வீரப்பன், ஏவி.எம்.

நான் கூறப்போவது ஒரு கட்டிடக் கலைஞரைப் பற்றி.

பொதுவாகக் கட்டிடக் கலைஞர்களைப் பற்றி ஒன்று சொல்வதுண்டு, கட்டிடம் கட்டுவதற்காக வாங்கும் பொருள்களில் இவர்களுக்குக் கணிசமான கமிஷன் கிடைப்பது உண்டு என்று.

ஆனால் நான் குறிப்பிடும் நபர் இப்பபடிப்பட்டவர் அல்ல. எந்தப் பொருளுக்காகவும் யாரிடமும் ஒரு பைசா கூட கமிஷன் வாங்காத நாணயமான மனிதர் இவர். மிகவும் நேர்மையோடு பணியாற்றுபவர்.

இவ்வளவு நேர்மையான, நாணயமான ஒருவர் பேரும் புகழுமாக நல்ல மதிப்புடன் வாழ்வார் என்றுதானே நினைக்கிறீர்கள்? அதுதான் இல்லை. தொழில் நன்றாக நடந்தாலும், அனைவரிடத்திலும் இவருக்குக் கெட்ட பெயர்தான்.

காரணம்? ரொம்ப சிம்பிள். தான் நேர்மையானவன், நாணயஸ்தன் என்பதில் அவருக்கு அளவுக்கதிமான கர்வம் உண்டு. அவர் பேச்சும் தோரணையும் மற்றவர்களை துச்சமாக நினைப்பதாகவே இருக்கும். எனவே, கண்டிப்பான, நேர்மையான, யோக்கியமான நல்ல மனிதர் என்ற பெயருக்கு பதில் கர்வம் பிடித்தவர், திமிர் பிடித்தவர் என்ற பெயர்கள் ஏற்பட்டு விட்டன!

கட்டிடக் கட்டுமானப் பணியில் சிறிய தவறு ஏற்பட்டு விட்டால்கூட முறைப்படி தெரிவிக்க மாட்டார். ''இதுகூட தெரியாதா?'' என்று ஏளனமாக ரொம்பவும் சாடுவார். நாம் பயன்படுத்திய பொருள் ஏதாவது அவருக்குத் திருப்தியாக இல்லையென்றால், ''இது என்ன கண்றாவி, ரொம்ப மட்டமான பொருள்!'' என்று இழிவாக குறிப்பிடுவார்.

இப்படி ஒவ்வொரு இடத்திலும் அவரது சிடுமூஞ்சித்தனத்தைக் காட்டிக்கொண்டே இருந்ததால், அவரது நேர்மைக்குப் பரிசு கிடைப்பதற்குப் பதில் 'திமிர் பிடித்தவர்' என்ற பட்டப் பெயர்தான் கிடைத்தது.

தனக்கு வேலை கொடுக்கும் மனிதர்களிடமும் இப்படியே நடந்து கொண்டால் நல்ல பெயர் எப்படிக் கிடைக்கும்? மதிப்பும் மரியாதையும் எங்கிருந்து வரும்?

நேர்மை முக்கியம், இல்லையென்று சொல்லவில்லை. அதற்காக அடிப்படை பண்பை இழந்து விடலாமா?

சில அரசாங்க அதிகாரிகளைப் பார்த்திருக்கிறேன், எப்போதும் கடுகடுமுகத்துடனே காட்சியளிப்பார்கள். தங்கள் நாணயத்தினால் ஒரு அகம்பாவம் கொண்டு, எப்போதும் எடுத்தெறிகிற மாதிரி பேசுவார்கள். இதில் யாருக்கு லாபம்? இவர்களுக்கு மட்டுமல்லாமல் இவர்களிடம் பேசுபவர்களின் உற்சாகமும் மறைந்து, முன்னேற்றமே தடைபட்டு விடுமே!

எல்லா அதிகாரிகளும் இப்படித்தான் என்று சொல்ல மாட்டேன். நேர்மை, கண்டிப்பு, இவற்றோடு கனிவும் பண்பும் கெண்டு என்னைக் கவர்ந்த திரு. வி.டி.ஜார்ஜ் என்பவர் தொலைபேசியில் முக்கிய அதிகாரியாகப் பணியாற்றி வந்தார்.

ஒருமுறை எங்கள் அலுவலகத் தொலைபேசி இணைப்பில் ஒரு சிறிய தவறு நடந்து விட்டது. உடனே திரு. ஜார்ஜ் என்னைத் தேடி வந்தார்.

''உங்கள் நிர்வாகத்தில் இப்படி ஒரு தவறு நடந்து விட்டதே! இதுபோன்ற ஒரு இணைப்பு சாதனம் உங்கள் அலுவலகத்துக்கு மிகவும் தேவையான ஒன்றுதான், ஆனால், அந்தத் தேவையை என்போன்ற அதிகாரிகளிடம் முறைப்படி சொல்லியிருந்தால் நாங்களே இதை டிபார்ட்மெண்ட் மூலம் சுலபமாகச் செய்து கொடுத்திருப்போம். அப்படிச் செய்யாமல், எங்கள் அனுமதி இல்லாமல் நீங்கள் இச்சாதனத்தைப் பெற்றிருப்பது உங்களுக்குக் குந்தகமான

சூழ்நிலையை உருவாக்கிவிட்டது பாருங்கள்! உங்களுக்கு உதவிய அந்த தொலைபேசி ஊழியருக்கு வேலையே போகப் போகிறது!'' என்றார்.

எனக்கு வேதனையாக இருந்தது.

''நாங்கள் ஆபீஸர்கள். உங்கள் விரோதிகள் அல்ல. அரசாங்கம் எங்களுக்கு சம்பளம் தந்தாலும், அரசாங்கத்துக்குப் பணம் உங்களிடமிருந்துதான் வருகிறது. ஆக, உங்களுக்குப் பணி செய்வதற்காகத்தான் நாங்கள் இருக்கிறோம். அந்த ஊழியருக்குக் கொஞ்சம் நன்மை ஏற்படுகிறது என்பதற்காக நீங்கள் முறைகேடாக செய்துள்ள இச்செயலால் அவருக்குப் பணிநீக்கம்தான் ஏற்படும்''.

இப்படி எங்கள் தவற்றையும் சுட்டிக் காட்டி அதே சமயம் பண்பும் மனிதத்தன்மையும் மாறாமல் தன் கடமையைச் செய்யும் இவர் போன்ற இன்னும் பலரை நான் சந்தித்திருக்கிறேன், இப்பேதும் சந்தித்து வருகிறேன். இவர்களையெல்லாம் உதாரண புருஷர்களாகவே கருதுகிறேன்.

நேர்மையும் பண்பும் சேர்ந்த அழகான கலவைக்கு மற்றொரு உதாரணம் சொல்கிறேன்.

முன்னாள் பிரதமர் லால் பகதூர் சாஸ்திரி அவர்களின் மனைவி ஒரு சிறந்த கவிஞர். இவர் இயற்றிய இந்தி பக்திப் பாடல்களை மியூசிக் டைரக்டர் சித்ரகுப்தா இசையமைத்து லதா மங்கேஷ்கர் அவர்கள் பாடி, எங்கள் சரஸ்வதி ஸ்டோர்ஸ் பாடல் நிறுவனம் கொலம்பியா இசைத்தட்டாக வெளியிட்டது.

என் தந்தையாரும் சகோதரி மீனா வீரப்பனும் டெல்லிக்குச் சென்று திருமதி சாஸ்திரியிடம் ஒரு தட்டில் வெற்றிலை பாக்குப் பழங்களுடன் இசைத்தட்டையும் ஒரு பட்டுப்புடவையையும் வைத்துக் கொடுத்தார்கள். அவரும் பெற்றுக் கொண்டார்.

தந்தையும் சகோதரியும் நாங்கள் தங்கியிருந்த ஹோட்டலுக்கு வந்து சேர்ந்ததும், திருமதி சாஸ்திரியின் உதவியாளர் வந்து அந்தப் புடவையைத் திருப்பிக் கொடுத்தார். ''நீங்கள்கொடுத்தபோதே மறுத்தால் உங்கள் மனம் கஷ்டப்படும். உடனே மறுப்பது மரியாதையும் இல்லை என்பதால்தான் இதைப் பெற்றுக் கொண்டேன். கணவர் பிரதமராக இருப்பதால் இதைப் பெற்றுக் கொள்வது சரியில்லை'' என்று விளக்கம் கொடுத்திருந்தார் திருமதி சாஸ்திரி.

திருமதி சாஸ்திரியையும் அவரது கணவரையும் அவர்களது நேர்மையையும் அதை அவர்கள் வெளிப்படுத்திய விதத்தையும் பாராட்டாமல் இருக்க முடியவில்லை!

கனிவும், பண்பும், இன்முகமும், மாறாத புன்சிரிப்பும் நமக்கு எத்தனை தேவை என்பதைப் பற்றி நம்மைவிட, நம்மோடு பழகுகிறவர்களைக் கேட்டால்தான் தெரியும்.

முகமலர்ச்சி என்பது ஏதோ மகிழ்ச்சியான விஷயம் நடைபெறும்போது மட்டும்தான் நம் முகத்தில் தோன்றும் என்று யாரும் நினைத்து விடக்கூடாது. தினசரி நம் வாழ்வில் சந்தோஷம், துக்கம், சங்கடம், சமாதானம், கோபம், ஆத்திரம், பொறாமை, நட்புணர்வு என்று பல்வேறு விதமான உணர்வுகளை அனுபவித்துக் கொண்டுதான் இருக்கிறோம். குதூகலம் தரக்கூடிய சம்பவங்களும் நடப்பதுண்டு. இக்கட்டான நிலமைகளும் ஏற்படுவதுண்டு. எந்த நிலையிலும் மாறாத ஒரு சாந்தமான முகபாவனையை வெளிப்படுத்த முதலில் நம் மனம் மிகுந்த தெளிவுடன் இருக்க வேண்டும். இப்படி ஒரு முகத்தை லயோலா கல்லூரி முதல்வர் ஃபாதர் குரியகோஸ் அவர்களிடம் எந்த நேரத்திலும் கண்டு வருவதை இங்கு குறிப்பிட்டேயாக வேண்டும்.

கல்லூரியில் சீட் கேட்டு வரும் மனிதர்களால் அவருக்கு ஏற்படும் தொந்தரவுகளுக்கு அளவே கிடையாது. அத்தனை பேருக்குமா இடம் கொடுத்துவிட முடிகிறது! கொடுத்தது போக மற்றவர்களுக்கு 'சீட் இல்லை' என்று மறுத்துத்தான் ஆக வேண்டும். அந்த மறுப்பைக்கூட அவர் வெளியிடும் விதத்தைப் பார்த்து நான் எப்போதும் வியப்பதுண்டு.

தலையைமெதுவாக அசைத்து, தாடியைத் தடவியபடி மிக மென்மையான குரலில், ''ஸாரி, சீட் நிச்சயமாக இல்லை. கொடுக்க முடிந்திருந்தால் கட்டாயம் கொடுத்திருப்பேன், மன்னித்து விடுங்கள், என்னால் எதுவும் செய்ய முடியவில்லை. ஸாரி...'' என்று கொஞ்சமும் கோபமின்றி கூறுவார். சென்ற முறைகூட ஒரு சீட்டுக்காக அவரிடம் நான் மிகத் தாமதமாகப் போய் நின்றபோது இதே மாதிரிதான் பேசினார். எப்படியாவது சீட் கிடைக்க வேண்டுமே என்கிற ஆர்வத்தில் நான் விடாமல் கேட்டுக் கொண்டேயிருக்க அவரும் ஆத்திரமே படாமல், முகத்துப் புன்சிரிப்பு மாறாமல் மறுத்துக் கொண்டே இருந்தார்.

அவர் நிலை புரிந்தும்கூட நச்சரிக்கிறோமே என்று எனக்கே என்மேல் கோபம் வந்தது, ஆனால், அவருக்கு வரவேயில்லை!



லயோலா கல்லூரி ஃபாதர் குரியகோஸ்

'காளை மாடு என்றாலும் கால் படி பாலாவது கொடுங்க' என்று ஒரு வசனம் உண்டு கேள்விப்பட்டிருக்கிறீர்களா? இது காளை மாடு, பால் கறக்காது என்று சொல்லியும்கூட விடாமல் கால் படி பாலாவது கொடுங்கள் என்று வீம்புடன் கெஞ்சினாராம் ஒருவர்! அந்த மாதிரிதான் நானும் நிறுத்தாமல் ஃபாதர் குரியகோஸ் அவர்களைக் கெஞ்சினேன். அவர் இடத்தில் நான் இருந்திருந்தால், பொறுமையை இழந்து ஆத்திரப்பட்டு 'அதுதான் சீட் இல்லை என்ற சொல்கிறேனே, புரியவில்லையா? எழுந்து வெளியேபோங்கள்!' என்றுகூட கத்தியிருப்பேனா என்னவோ! இன்முகத்தின் அவசியத்தைக் கற்றுக்கொள்ள பாதர் குரியகோஸ் அவர்கள் எனக்கு ஒரு தூண்டுதலாக இருக்கிறார்கள்.

சமீபத்தில் எனது நண்பரும் அரசு செய்தித்துறையில் டெபுடி டைரக்டராகப் பணியாற்றியவருமான திரு. நடராஜனுடன் உரையாடிக் கொண்டிருந்தேன். அப்போது அவர் சொன்னார், ''நான் ஒரு காய்கறிக் கடையில் வழக்கமாகக் காய் வாங்கிக் கொண்டிருந்தேன். கடந்த ஒரு மாதமாக அங்கு போவதையே நிறுத்தி விட்டேன்.''

ஏன்? அதிக விலை சொல்கிறாரா? தரமான காயாகக் கொடுக்கவில்லையா? உங்களிடம் மரியாதைக் குறைவாக நடக்கிறாரா?'' என்று என் சந்தேகங்களை அவரிடம் வெளிப்படுத்தினேன்.

''அதெல்லாம் இல்லை. கடைக்காரர் தன்கீழ் வேலை செய்பவனைத் திட்டும் விதம் எனக்கு வருத்தத்தைக் கொடுக்கிறது. ஒவ்வொரு நாளும் அந்தத் தொழிலாளியை இவர் திட்டுவதும், எரிந்து விழுவதும் தொடர்கதையாக இருக்கிறது. காய் வாங்கப் போய் இதை வேறு காதில்வாங்கி வர வேண்டுமா? அதனால்தன் போவதையே நிறுத்தி விட்டேன்'' என்றார்.



K.நடராஜன்

இனிமையாகப் பழகாததின் காரணமாக மற்றவர்களுக்கு ஏற்படும் பாதிப்புடன் நமக்கும் பாதிப்பு ஏற்படும் என்பதற்கு இது ஒரு உதாரணம்.

கடைகளுக்கு பொருள்கள் வாங்கப் போகும்போது, நான் கேட்கும் பொருள் இல்லாவிட்டாலும் கூட சில சமயங்களில் வேறு எதையாவது வாங்காமல் வருவதில்லை. அங்குள்ள சேல்ஸ்மேனின் பணிவும் பக்குவமும், கடை வாடிக்கையாளர்களிடம் நடந்து கொள்ளும் முறையும், ஒன்றுமே வாங்காமல் போவது அழகல்ல என்கிற எண்ணத்தை எனக்கு தோற்றுவிக்கிறது, அங்கு போனதற்கு ஏதாவது ஒரு பொருளை வாங்கும்படி தூண்டி விடுகின்றன!

சென்னை 'பொப்பட் ஜமால்' கடையில் நடந்த ஒரு சம்பவம் இது. கடைக்கு வந்த ஒரு பெண்மணிக்கு அங்கிருந்த கலைப்பொருள் ஒன்றை மிகவும் பிடித்துவிட்டது. அதே மாதிரி இன்னொன்று கிடைத்தால் இரண்டாக சேர்த்து வாங்கி தன் வீட்டு வரவேற்பு அறையில் வைக்கலாம் என்று விரும்பி கடைக்காரரிடம் கேட்டார். கடையில் அந்தப் பொருள் ஒன்றுதான் இருந்ததால், வேறு ஏதேதோ கடைகளுக்கு போன் செய்து உடனே வரவழைத்துக் கொடுத்தார் கடைக்காரர். ஆனால் அந்தப் பெண்மணி, ''எனக்காக சிரமப்பட்டு வரவழைத்துக் கொடுத்ததற்கு நன்றி. என்றாலும், ஒன்று வாங்குவதற்குத்தான் என்னிடம் இப்போது பணமிருக்கிறது. தனித்தனியாக வாங்குவதற்கு பதில் பிறகு ஒருநாள் வந்து இரண்டையும் சேர்த்து பணம் கொடுத்து வாங்கிக் கொள்ளுகிறேன்'' என்றார். கடைக்காரர், ''அதனால் பரவாயில்லை. இருக்கும்

பணத்தைக் கொடுங்கள், மீதியைப் பிறகு கொடுக்கலாம். உங்கள்மீது எனக்கு நம்பிக்கையிருக்கிறது'' என்று சொல்லி, பொருள்களை 'பாக்' செய்து ஆள் மூலம் காரில் கொண்டு வைக்கவும் வைத்து விட்டார். அந்தப் பெண்மணி அடுத்த நாள் மீதிப்பணத்துடன், கடைக்காரரின் இனிமையான விற்பனைத்திறனையும் பாராட்டிக் கடிதம் எழுதி அனுப்பியபோதுதான் தெரிந்தது, அவர் ஒரு அரச குடும்பத்தைச் சேர்ந்த ராணி என்பது! யார், எவர் என்ற விவரம்கூட தெரியாமல் அன்று புன்னகை முகத்துடன் விற்பனை செய்தவர் திரு. முகமது அலி ஜமால் அவர்கள்.

இதற்கு நேர் மாறான அனுபவங்கள் இரண்டு எனக்கு ஏற்பட்டிருக்கின்றன.

'நானும் ஒரு பெண்' படத்தின் வங்காளி 'மூலக்கதையை வாங்குவதற்காகக் கல்கத்தாவுக்கு இயக்குனர் திரு. ஏ.சி.திருலோக்சந்தர் அவர்களுடன் சென்றிருந்தபோது ஒரு துணிக்கடைக்குப் போனோம். அங்கு இருந்த சட்டை ஒன்று எனக்கு மிகவும் பிடித்துப்போனதால் அதன் விலையைக் கேட்டேன். அலட்சியமாகப் பார்த்த கடைக்காரர், ''இது ரொம்ப விலை உயர்ந்தது, நீங்கள் வாங்க மாட்டீர்கள்'' என்று விலை கூற மறுத்தார். எத்தனை முறை கேட்டும், ''உங்களால் வாங்க முடியாது'' என்றே சொல்லிக் கொண்டிருந்தார். கடைசியில், ''விலைதானே ஐநூறு ரூபாய், போதுமா! நீங்கள் என்ன வாங்கவா போகிறீர்கள்!'' என்றார். எனக்குக் கோபமான கோபம்! திருலோகச்சந்தர் கூட சொன்னார், ''இத்தனை தூரம் விலை கேட்டுவிட்டு வாங்காமல் போனால் நன்றாக இருக்காது'' என்று. ஆனால், எனக்கு விருப்பமில்லை. ''இந்த சர்ட் எனக்கு ரொம்பப் பிடித்திருக்கிறது, என்னால் இவ்வளவு ரூபாய் கொடுத்து வாங்கவும்

இயக்குனர் A.C திருலோக சந்தருடன்





மனைவி முத்துலட்சுமியுடன்

முடியும். இருந்தும், நீங்கள் இப்படி எடுத்தெறிந்து பேசியது எனக்குப் பிடிக்கவில்லை. அதனால் உங்கள் விற்பனைதான் பாதிக்கப்படுகிறது'' என்று சொல்லி, பணத்தைக் கண்ணில் காட்டிவிட்டு சட்டையை வாங்காமல் வந்தேன்!

இன்னொரு முறை என் மனைவியுடன் சென்னையில் ஒரு துணிக்கடைக்குப் போனேன். விற்பனைப்பிரிவில் இருந்த ஒரு வயதான பெண்ணிடம் என் மனைவி தமிழில் விலை விபரம் கேட்க, அந்தப் பெண் வெற்றிலைச்சாறு வழியும் வாயுடன் தவறான ஆங்கிலத்தில் என்னைப் பார்த்து பதில் சொன்னார். எதன் விலையைக் கேட்டாலும் இப்படியே ஒரு நாகரிகமில்லாத பதில் வந்து கொண்டிருந்ததால், உடை வாங்கும் எண்ணத்தையே கைவிட்டு வெளியேறினோம்!

தேவையான பொருள்களை வாங்கத்தான் கடைகளுக்கே போகிறோம், அப்படியிருக்க இம்மாதிரி எரிச்சலூட்டும் கடைக்காரர்களைப் பார்க்கும்போது வாங்கும் எண்ணமே போய்விடுகிறது. நாமும் மனிதர்கள்தானே, ஒருமுறை வேண்டுமானால் பொறுக்கலாம். தொடர்ந்து இப்படியே பேசிக்கொண்டிருந்தால் நமக்கும் பொறுமை மறைந்து கடையை விட்டே வெளியேறி விடுகிறோம். இதனால் தங்கள் வியாபாரம்தான் பாதிக்கப்படுகிறது என்பதைக் கடைக்காரர்கள் புரிந்து கொண்டால் நல்லது.

என்னைப் பொறுத்தவரை, அடிப்படை மனிதாபிமானமும், எப்போதும் முகத்தில் இருக்க வேண்டிய புன்சிரிப்பும் நாம் கட்டாயம் அணிய வேண்டிய அணிகலன்கள்.

என் மனைவி லட்சுமியைப்போலவே என் மகள் உஷாவும் எப்போதும் எல்லாரிடமும் இனிமையாகப் பழகும் குணம்

கொண்டவள். மனிதர்களிடம் தேவையில்லாத தராதரம் பார்ப்பதோ, சிடுசிடுப்பதோ அவளிடம் இல்லாத குணங்கள். அவளது பள்ளிக்கூட முதல்வர் திருமதி.ராதாராவ் என்னிடம் ஒருமுறை சொன்னார், ''உஷா மீது எனக்கு ரொம்ப அபிமானம் உண்டு. அவளது இனிமையான சுபாவம் என்னை ஆச்சர்யப்பட வைக்கிறது. வசதியான குடும்பத்தில் பிறந்தவளாக இருந்தும், ஏழை பணக்காரர் என்ற வித்தியாசம் பார்க்காமல் அவள் எல்லாருடனும் நட்போடு இருப்பதைப் பார்த்து பெருமிதப்படுகிறேன்.''

என் மருமகள் நித்யா குறித்த நேரத்தில் செய்ய வேண்டியவற்றை பொறுமையாக, சிறப்பாக செய்பவள். தன் இரட்டை குழந்தைகள் அருணா, அபர்ணா இருவரையும் பராமரிப்பதில் மிகவும் கவனமும், குழந்தைகளுக்கு எந்தெந்த நேரத்தில் எதைக் கொடுக்கவேண்டுமென்று தெரிந்தும் செயல்படுகிறாள். எங்கள் ஏவி. மெய்யப்பன் மெட்ரிகுலேஷன் பள்ளிக்கூடத்தின் நிர்வாகியாகவும், 'ஹலோ மெட்ராஸ்' பத்திரிகையின் இணையாசிரியராகவும் பணிபுரிந்து வருகிறாள்.

மற்றவர்களிடம் இனிமையாகப் பேச வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்ட சில நாட்களிலேயே, நமக்குள் ஒரு மகிழ்ச்சி தானாக ஊற்றெடுப்பதையும், பிறருக்கு சந்தோஷம் ஏற்படும் வகையில் நாம் நடந்து கொள்ளும்போது இந்த மகிழ்ச்சி இரட்டிப்பாக ஆவதையும் நம்மால் புரிந்து கொள்ள முடியும்.

இளைய சகோதரர் M.பாலசுப்பிரமணியன்



என் தம்பி பாலுவுக்கு நகைச்சுவையாகப் பேசும் பழக்கம் உண்டு. எவர் மனமும் புண்படாமல், தவறான வார்த்தை ஒன்றுகூட இல்லாமல் மிகவும் நகைச்சுவையாகப் பேசுவதால், அவனோடு பேசுவதை பெரும்பாலும் அனைவருமே விரும்புவார்கள். அவனைப் பார்க்கும்போதே நமக்கும் 'ஜோக்' அடிக்கும் 'மூட்' வந்துவிடுவதை நான் பலமுறை உணர்ந்திருக்கிறேன்!

இப்படி நம் இயல்பு மற்றவர்களுக்கும் தொற்றிக் கொள்ளும்போது நல்ல பழக்க வழக்கங்களை அவர்களும் பின்பற்றக்கூடிய வகையில் பேசிக் காண்பிக்க வேண்டும். காலை முதல் நாம் சந்திக்கும் எல்லாருக்கும் 'குட்மார்னிங்' அல்லது 'வணக்கம்' சொல்வது நல்ல பழக்கம்தானே! சின்னக் குழந்தைகள், வேலையாட்கள் என்று எல்லா தரப்பினரும் நமது வட்டத்துக்குள் அடங்குவதால், இந்தப் பழக்கத்தை அத்தனை பேரிடமும் வளர்க்க முயற்சிக்கலாம்.

சிரிப்பையும் சந்தோஷத்தையும், கொடுக்கக் கொடுக்கக் குறையாமல் அதிகமாகும் கல்விக்கு ஒப்பிடலாமா? அப்படியானால் குறைவற்ற செல்வம் அல்லவா அது!



டாக்டர் விஜயகுமார், மகள் உஷா விஜயகுமார், மருமகள் நித்யா குகன், குகன், ஏவி.எம். குடும்பத்தின் முதல், இரட்டைக் குழந்தைகளான அபர்ணா குகன், அருணா குகன், முத்துலட்சுமி சரவணன், M சரவணன்,பேரன் சித்தார்த், ராஜேஸ்வரி மெய்யப்பன்.

# 9. விசாரிப்பில் ஒரு மந்திரம்



திரைப்பட நடிகை நளினியுடைய சகோதரி லட்சுமி சுப்பையா வின் திருமணம் சென்னை உட்லண்ட்ஸ் ஹோட்டலில் நடைபெற்றது.

அப்போது திரு. எம்.ஜி.ஆர். அவர்கள் தமிழக முதல்வராக இருந்த நேரம். அவரால் எனக்கு சென்னை நகர ஷெரீஃப் பதவி தரப்பட்டிருந்தது.

திருமண விழாவில் கலந்து கொண்டபோது ஒரு முக்கிய பிரமுகர் வருவதைப் பார்த்தேன். அவரிடம் சென்று பேச வேண்டும் என்று தோன்றினாலும்.நானாக வலியச் சென்று பேசுவதை அவர் விரும்புவாரோ மாட்டாரோ என்று ஒரு தாழ்வு மனப்பான்மை என்னுள் எழுந்தது.

இதைப்பற்றி நான் சிந்தித்துக் கொண்டிருந்தபோது அந்தப் பிரமுகரே என்னைப் பார்த்துவிட்டார். என்னை நோக்கி இரண்டடி எடுத்தும் வைத்துவிட்டார். உடனே நான் விரைவாக அவரிடம் சென்றேன். ''வணக்கம்'' என்றேன். துளிக்கூட தயங்காமல் அவர் என்னிடம் ''கங்ராஜுலேஷன்ஸ்'' என்றார்.

எனக்கும் அவருக்கும் அப்போது அவ்வளவாகப் பழக்கம் இல்லாதிருந்தபோதும் அவர் பெருந்தன்மையுடன் வாழ்த்தியது என்னைப் பூரிக்கச் செய்தது. நான் ஷெரீஃப் ஆக நியமிக்கப்பட்டதற்காகப் பாராட்டி, என்னிடம் இருந்த சிறு தயக்கத்தை அவரால் ஒரு நொடியில் போக்கிவிட முடிந்தது எப்படி?

பலர் நம்மிடம் பேசக் கூச்சப்பட்டுக்கொண்டு இருக்கக்கூடும், தயங்கித் தயங்கிப் பின்னடையக்கூடும். நாம் முன்னால் சென்று அவர்களை வாழ்த்தினாலோ வணங்கினாலோ அவர்களது தயக்கம் நீங்கும் என்ற முக்கியமான பாடத்தை அன்று அந்தப் பிரமுகர் எனக்குப் புரிய வைத்தார்.

அவர் - முன்னாள் முதல்வர் கலைஞர் கருணாநிதி அவர்கள்!

இதேபோல் இன்னொரு நிகழ்ச்சியும் ஞாபகத்துக்கு வருகிறது.

'சம்சாரம் அது மின்சாரம்' படத்துக்கு ஜனாதிபதி விருது கிடைத்தது. இதை நம் குடியரசுத் தலைவர் திரு. ஆர்.வெங்கட்ராமன் அவர்களிடமிருந்து பெற்றுக்கொள்ள நான் டெல்லி போயிருந்தேன்.

குடியரசுத் தலைவரை சந்திக்கும்போது கை குலுக்கக்கூடாது என்று தெரிவித்தார்கள். அது சம்பிரதாயம். இதை நினைவில் வைத்து நானும் மிக கவனமாக விருது வாங்கப் போனேன்.

ஆனால் நடந்தது நேர் எதிர். குடியரசுத் தலைவரே என் கையைப் பிடித்துக் குலுக்கிப் பாராட்டினார்!

''இந்தப் பரிசு கிடைத்த சமயம் உங்கள் தந்தை இருந்திருந்தால் மிகவும் சந்தோஷப்பட்டிருப்பார். நான் உங்கள் தந்தை ஸ்தானத்திலிருந்து வாழ்த்துகிறேன். நீங்கள் இதுபோல் இன்னும் பல பரிசுகளைப் பெற வேண்டும்'' என்று மனமார வாழ்த்தினார்.

எவ்வளவு உயர்ந்த மனப்பான்மை! எப்படிப்பட்ட சகஜமான ஒரு பழகும் தன்மை!

'சம்சாரம் அது மின்சாரம்' படத்தின் மூலமாக தமிழ்ப்படத்திற்கான முதல் தங்கப் பதக்கத்தை ஜனாதிபதி திரு. R.வெங்கட்ராமனிடமிருந்து பெறுகிறேன்.



இந்த நிகழ்ச்சிகள் எனக்கு உணர்த்தியது - ஒதுங்கி நிற்பவர்களைப் பார்த்தால் நாமே முன்சென்று பேசி அவர்களது தயக்கத்தைப் போக்கிவிட வேண்டும் என்பதுதான்.

ஒரு சிலரைப் பார்க்கும்போது, அவர்களை எங்கோ பார்த்திருக்கிறோம் என்றுதான் நினைவுக்கு வருமே தவிர அவர்கள் பெயரே மறந்து போயிருக்கும். இந்த மாதிரி சந்தர்ப்பங்களில், ''உங்கள் முகம் ரொம்பப் பழக்கமாக இருக்கிறது. ஆனால் பெயர் நினைவில்லை, ஸாரி, மன்னித்துக் கொள்ளுங்கள்'' என்று வெளிப்படையாக கேட்டு விடவும் செய்கிறேன். காரணம், எனக்கு மறதி மிக அதிகம்! பெயர் நினைவில்லை என்பதற்காக கண்டும் காணாமலும் போவது தவறு இல்லையா!

இந்த மறதியைக் கிண்டல் செய்யும் விதமாக, ''நான் யார் என்று கண்டுபிடியுங்கள் பார்க்கலாம்!'' என்று சிலர் நம்மை பரீட்சை செய்து பார்ப்பது உண்டு. இது தேவையில்லை என்பதே என் அபிப்ராயம். பலர் முன்பு இப்படி ஒரு தர்மசங்கடம் நமக்கு நேர்வதில் அவர்களுக்கு என்ன லாபம்! நேரில் கேட்பதுகூட பரவாயில்லை, முகத்தை வைத்து எப்படியாவது அடையாளம் காண முயலலாம். ஆனால், இதேபோல் டெலிபோனில் சிலர் கேட்பார்கள் பாருங்கள், அதுதான் மிக அநாகரிகமான செயல்! எங்கோ எப்போதோ கேட்ட ஒரு குரலைக் கொண்டு இப்போது யார், எவர் என்று எப்படி புரிந்து கொள்வது?

இப்படிப்பட்ட விசாரணைகளைத் தவிர்ப்பது நல்லது.

விசாரிப்பின் இன்னொரு பரிமாணத்தை நான் புரிந்து கொண்டது திரு. மன்றாடியார் அவர்களிடமிருந்து. அவர் எப்போது எங்கள் வீட்டுக்கு வந்தாலும், முதல் வேலையாய் சமையலறைக்குச் சென்று அங்கிருக்கும் சமையல்காரர், வேலையாட்கள் முதலியவர்களை அன்புடன் விசாரிப்பார். ''என்ன சுப்பையா, எப்படி இருக்கீங்க?'' என்று பெயரைக்கூட மறக்காமல் குறிப்பிடும் அவரது பிரத்யேக விசாரிப்பைக் கேட்டதும் வீட்டுப் பணியாளர்கள் அடையும் சந்தோஷத்துக்கு அளவே இல்லை!

நான் சென்னை நகர 'அண்டர் ஷெரீஃப்' ஆனபோது, பேப்பரில் செய்தி வந்த அன்று காலையே என்னைப் பார்த்து வாழ்த்த வந்து விட்டார். நான் மாடியிலிருந்து இறங்கி வந்து அவர் வாழ்த்துக்கு நன்றி சொல்லிவிட்டு, ''காபி சாப்பிடுகிறீர்களா?'' என்றதும் அவர் சொன்னார், ''நான் வந்த உடனேயே உள்ளே போய் உனக்கும் சேர்த்து சொல்லி விட்டேன் சமையல்காரரிடம்'' என்றார்! இந்த உரிமையும் அன்பும் எப்போதுமே மனிதர்களை மகிழ்ச்சியடைய வைக்கும்



'குழந்தையும் தெய்வமும்' படத்தின் 100-வது நாள் விழாவில் ஏவி.எம். முன்னிலையில் நல்ல சேனாபதி சர்க்கரை மன்றாடியார் அவர்கள் எனக்கு கேடயம் வழங்குகிறார். அருகில் வெலிங்டன் டாக்கீஸ் பங்குதாரர் பிரேம்ஜி (1965)

என்பதை, பணியாளர்கள் திரு. மன்றாடியாரை வரவேற்கும் பாங்கிலிருந்து புரிந்து கொள்ளலாம்!

சிலருக்கு ஒரு விசித்திர குணம் உண்டு. தனிமையில் நம்மிடம் சகஜமாகப் பழகுவார்கள். ஆனால் வெளியிடங்களில் பலருக்கு நடுவில் பார்த்தால், அதுவும் அவர்கள் வி.ஐ.பிக்களாக இருந்து விட்டால் கேட்கவே வேண்டாம், நம்மைப் பார்த்ததாகவே காட்டிக் கொள்ள மாட்டார்கள்!

மதிப்புக்குரிய திரு. கருப்பையா மூப்பனார், திரு. க.இராசாராம், திரு. எஸ்.டி.சோமசுந்தரம், திரு. எம்.வி.அருணாசலம், திரு. ப.சிதம்பரம் போன்றவர்கள் இந்தப் பிரிவில் சேராதவர்கள். எங்கே, எப்போது, யாருடன் இருக்கும்போது நம்மைப் பார்த்தாலும் ஒரு நிமிடம் பேச்சை நிறுத்திவிட்டு, நம்மைப் பெயர் சொல்லி அழைத்து, ''சௌக்கியமா?'' என்று நிச்சயம் விசாரிப்பார்கள் அதோடு நிற்காமல், அருகிலிருக்கும் மற்றவர்களிடம் நம்மை அறிமுகப்படுத்த வேறு செய்வார்கள். எத்தனை நல்ல பண்பு!

விழாக்களிலோ அல்லது மற்ற பொது இடங்களிலோ பேச ஆள் இல்லாமல் இருப்பவர், நண்பர்கள் இருந்தும் தயக்கத்தோடு தனித்து நிற்பவர் ஆகியவர்களிடம் நாமே வலியப்போய் பேசினால் அது அவர்களை நிச்சயம் தைரியத்துடன் பேச வைக்கும். இம்மாதிரி சூழ் நிலையில் நமது பழகும் தன்மையினால் அவர்களையும் நம்மோடு கலக்க வைத்து மற்றவர்களோடு இணைத்து விடுவது நல்லதுதானே!

சில நேரங்களில் அப்படித் தனியாக இருக்கும்போது நமக்குத் தெரிந்த மனிதர்களைக்கூட நாம் கண்டும் காணாமல் போய் விடுகிறோம். இது மிகவும் தவறானது. இதே மாதிரி மற்றவர்கள் நம்மிடம் நடந்து கொள்ளும்போதுதான் அந்த அலட்சியம் உண்டாக்கும் பாதிப்பைப் புரிந்து கொள்ள முடியும். எனவேதான், எவரை எங்கே பார்த்தாலும் அவர்கள் பேசும்வரை காத்திருக்காமல் நானே முதலில் போய் என் விசாரிப்பைத் துவங்கி விடுகிறேன்; வணக்கத்தைத் தெரிவித்து விடுகிறேன்.

இங்கே இன்னொரு விஷயத்தையும் சொல்லியாக வேண்டும்.

நாணயத்துக்கு இரு பக்கம் இருப்பது போல எந்த விஷயத்துக்குமே ஒன்றல்ல, பலப்பல கோணங்கள் இருக்கின்றன. ஒரு கூட்டத்தில் நம்மைப் பார்த்தும் பேசாமல் ஒரு தெரிந்த நபர் போகிறார் என்றால் அதை 'அலட்சியம்' என்று பொதுவாகக் கூறிவிட முடியாது.

அவர் பேசாமல் போனதற்குப் பல காரணங்கள் இருக்கலாம். நாம் அவர் பார்வையில் விழாமல் இருந்திருக்கலாம்; விழுந்திருந்தாலும், அவரது கவனம் வேறு எதிலாவது பதிந்து இருந்திருக்கலாம்; ஏதேனும் பிரச்னை அவரை வாட்டிக் கொண்டு இருக்கலாம்; பேசப்பிடிக்காமல் போயிருக்கலாம்; இவை தவிர வேறு காரணங்களாகவும் இருக்கலாம்.

என்ன காரணம் என்பதைத் தீர்மானிப்பது நம் கையிலா இருக்கிறது? இல்லை. ஆனால் இவ்வளவும் யோசிப்பதற்கு முன் நம் மனதில் பல எண்ணங்கள் வந்து விடுகின்றன!

'நம்மைத் தெரிந்ததாகக் காட்டிக் கொள்ள அவர் விரும்பவில்லை போலிருக்கிறது; இவருக்குத் திமிர் அதிகம், அதனால்தான் நம்மை

G.K.மூப்பனார், Skin Specialist டாக்டர் M.நடராஜனுடன்.





அலட்சியப் படுத்திவிட்டார்; ஒருவேளை நாம்தான் சரியாகக் கவனிக்கவில்லையோ?'

இப்படி ஆயிரம் எண்ணங்கள். நம் எண்ண ஓட்டத்துக்கு எல்லை ஏது!

திமிர் பிடித்தவர்கள், திமிர் இல்லாதவர்கள் - இரு சாராரும் கூட்டத்தில் இருந்திருக்கலாம். ஆனால், யார் எப்படி நடந்து கொண்டாலும் நம் கருத்தில் மறக்காமல் கொள்ள வேண்டிய விஷயங்கள் சில உண்டு.

பொது இடத்தில் நாம் காண நேரும் அத்தனை பேரிடமும் எப்போதும் ஒரே மாதிரி பேசுவது சாத்தியமில்லை. பேசக்கூடிய நிலையில் இல்லாமல் நம் கவனம் எங்காவது திசை மாறியிருக்கும். ''ஹலோ...'' என்று யாராவது சொன்னால் பதிலுக்கு ''ஹலோ'' சொல்லாமல் விட்டுவிடும் சந்தர்ப்பங்களும் ஏற்படுவதுண்டு.

உடனுக்குடன் இது நினைவுக்கு வரவில்லையானாலும் பிறகு தோன்றும், பதில் கூறாமல் இருந்து விட்டோமே என்று. முதலில் விட்டு விட்டாலும்கூட, பின்னர் ஞாபகம் வரும்போதாவது, ''ஸாரி, ஏதோ நினைப்பில் இருந்து விட்டேன், மனிதிலே வைத்துக் கொள்ளாதீர்கள்'' என்றால் விஷயம் அதோடு தீர்ந்தது!

சில சமயம் நமக்கே ஒரு காம்ப்ளக்ஸ் - அவர் பெரியவர், நம்மை இந்த இடத்தில் கண்டு கொள்ளமாட்டார் என்று.

வேடிக்கை என்னவென்றால், அவருக்கும் நம்மைப் பற்றி இதே மாதிரி அபிப்ராயம்தான் இருக்கும்!

அனாவசியமாக ஒரு இடைவெளி விழுந்து அந்த இடைவெளிக்கு நாமே காவல்காரர்களாகவும் நின்று விடுகிறோம்!

இதை உடைத்து, எதிர்தரப்பிலிருந்து முதல் வார்த்தை வரும்வரை காத்திராமல் நாமே முந்திக் கொண்டு விட்டால், இந்தத் தடுப்பு மறைந்து அவர் நம்மிடம் பேச்சைத் தொடர்வார்.

வெறும் தயக்கம் மட்டுமல்லாமல் அவருக்கு நம்மிடம் ஏதாவது பழைய வருத்தம் அல்லது மனக்குறை இருந்திருக்கலாம். இதுகூட நம் அன்பான விசாரிப்பில், இருந்த இடம் தெரியாமல் ஓடிப்போய் விடுமே!

இந்தச் சின்னத் தடையைத் தாண்டிவிட்டால் அதற்குப் பிறகு, 'நாம் நினைத்ததைவிட இவர் நல்லவர்' என்ற நினைப்பும் அவருக்குள் எழும்!

பொது இடத்தில் பார்க்கும்போது மட்டுமல்ல, நம்மைத் தேடி எவராவது வரும்போதும் இப்படிப்பட்ட ஒரு நல்ல குணம் தேவை. பல தரப்பட்ட மக்களும் நம்மைப் பார்க்க அன்றாடம் வருகிறார்கள். நெருங்கின உறவினர்கள், நன்கு பழகிய சினேகிதர்கள் வந்து பார்த்து பேசிவிட்டுப் போகும்போது, பெரும்பாலும் எந்த இடத்தில் இருக்கிறோமோ அங்கிருந்தே அவர்களுக்கு விடை கொடுத்து அனுப்பி விடுகிறோம். இவர்களோடு நமக்கு ஒரு சகஜத்தன்மை வந்துவிடுவதால் இதில் தவறான அபிப்ராயங்களுக்கோ மனவேதனைகளுக்கோ இடமில்லை.

ஆனால், புதியவர்களும், நம்மிடம் ஏதோ ஒருவித தாழ்வு அல்லது உயர்வு மனப்பான்மையுடன் பழகும் மனிதர்களும் நம்மைப் பார்க்க வந்துவிட்டுத் திரும்பிப் போகும்போது அவர்களை வாசல்வரை வந்து வழியனுப்புவது அவசியம். அவர்களை அலட்சியப்படுத்தி விட்டோம் என்கிற எண்ணம் ஏற்படாமல், மரியாதையுடன்தான் நடத்தியிருக்கிறோம் என்கிற சமாதானம் அவர்களுக்கு உண்டாகும். இப்படி ஏற்படுவதால் பெரிய நெருக்கம் நிகழ்ந்து விடும் என்றோ, ஏதாவது ஆதாயம் கிடைக்கும் என்றோ நான் கூற வரவில்லை. தேவையற்ற தப்பு அபிப்ராயங்களைத் தவிர்க்கலாமே என்பதுதான் என் வாதம்.

எனவேதான், முடிந்தவரை இவற்றை முக்கியமாகக் கொண்டு எந்த கருத்து வேறுபாட்டையும் தவிர்த்துவிடப் பார்க்கிறேன்; மீறி வேறுபாடு ஏற்பட்டு விட்டால் அதைக் கூச்சமோ தயக்கமோ இன்றி தகர்த்து விடவும் நான் தயங்குவதில்லை!

# 10. பதறாத காரியம் சிதறாது



நண்பர் ராஜாவின் திருமணத்தில் பெற்றோருடன

என் நெருங்கிய நண்பன் ராஜா என்கிற வெங்கட்ராமனின் தாய் - தந்தை ஒரு அற்புதமான தம்பதி. அன்யோன்யமான நிறைவான வாழ்வு அவர்களுடையது.

திடீரென்று ராஜாவின் தந்தை மரணமடைந்தார். இந்த இழப்பை ராஜாவின் தாய் எப்படித் தாங்குவாரோ என்று நான் பயந்தேன். அப்படியே இடிந்துபோய் விடுவார் என்று எண்ணினேன். ஆனால், அவரின் நிதானமும் பதட்டமில்லாத செயலும் என்னைத் திகைக்க வைத்து விட்டன.

மனதுக்குள் எவ்வளவு துக்கம் இருந்தாலும் அதை வெளியே பதட்டத்துடன் வெளிப்படுத்தாத அளவுக்கு அவர் பக்குவப்பட்டிருந்தார்.

வாழ்க்கையின் எந்த நேரத்திலும் நிதானத்தைத் தவற விடாமல் இருந்தால் எந்தப் பிரச்சனைக்கும் தீர்வு காண்பது எளிது என்பதை அன்று நான் உணர்ந்து கொண்டேன்.

பதட்டங்கள் நம் வாழ்வையே பாதிக்கும் என்பதால்தான் பெரியவர்கள் 'பதறாத காரியம் சிதறாது' என்று சொல்லி வைத்தார்கள்.

படபடவென்று பேசாமல் நிதானமாகச் சொல்லி விளங்க வைப்பதில் சமர்த்தர் பொள்ளாச்சி திரு.நா.மகாலிங்கம் அவர்கள்.

எவ்வளவு பெரிய விஷயத்தையும், நிதானமாகவும், படபடப்பு இல்லாமலும் பேசுவதில் திறமை வாய்ந்தவர். அவரது பேச்சில் உள்ள நிதானம் என்னை எப்போதும் கவர்ந்த ஒரு விஷயம்.

இதேபோல் மற்றொருவரும் உண்டு. அவர்தான் திரு.டி.ராமானுஜம் அவர்கள். என் தந்தைக்கு இனிய நண்பர், எனக்கும் இனிய நண்பர். என் மகனுக்கும் ஒரு இனிய நண்பராக மட்டுமல்லாமல் நல்ல ஆலோசகராக விளங்குபவர்.

நம் பிரச்னையை அவரிடம் சொன்னால் போதும், உடனே அதைத் தன் பிரச்னைபோல் எடுத்துக்கொண்டு, ''அதை இப்படிச் செய்யலாம், அல்லது அப்படியும் செய்யலாம். இரண்டு வழிகளுக்கும் விளைவுகள் இவையிவை, அதனால் இது நல்லதாக எனக்குப் படுகிறது'' என்று நன்றாக அலசி தீர்வுக்கு வழி காட்டுவார்.

சாதாரணமாக, பிரச்னை இல்லாதவர் இல்லை. அவரவர் தன் பிரச்னைக்கு முதல் முக்கியத்துவம் கொடுத்து தீர்த்துவிட்டுப் பிறகுதான் மற்றவர்களின் விஷயத்துக்கு வருவார்கள்.

ஆனால், எந்த நேரத்தில் யாருக்கு என்ன பிரச்னை நேர்ந்தாலும் அதைத் தன் பிரச்னையாகக் கொண்டு நிதானமாக செயல்படும் ஒரு நல்ல பண்பு இந்த மனிதரிடம் உண்டு. இதற்காக அவர் யாரிடமும் பலாபலன்களை எதிர்பார்ப்பவர் அல்ல.

எந்த நிலையிலும் அசையாத நிதானம்தான் அவருக்கு அடுத்தவர்களைப் பற்றி சிந்திக்க உதவுகிறது.

இந்தப் பண்பு நமக்கும் வரவேண்டும் என்று எனக்குத் தோன்றும். அவர் மாதிரி என்னால் இயங்க முடியவில்லையே என்ற எண்ணமும் எனக்குள் உள்ளூர உண்டு!

இதை எழுதும்போது மற்றுமொரு நிகழ்ச்சி நினைவுக்கு வராமல் இல்லை. 31.10.84 அன்று அன்னை இந்திரா காந்தி சுடப்பட்டு இறந்த சமயம் அது. ஓரிரு நாட்கள் கழித்து அவரது ஈமச்சடங்குகள் நடை பெறுவதைத் தொலைக்காட்சியில் நேரடியாக ஒளிபரப்பினார்கள்.



D. ராமானுஜத்துடன்

5

உடல் பீரங்கி வண்டியில் ஏற்றப்பட்டு ஊர்வலமாகச் செல்லும் தருணம். கடைசிக் கட்டமாக ஒவ்வொருவராக மரியாதை செலுத்திவிட்டுப் போகிறார்கள். வந்தவர்கள் எல்லோரும் கண் கலங்கி நிற்க, அந்த நேரத்தில் ஒரே ஒருவரைப் பார்க்க எனக்கு ஆச்சர்யம் ஏற்பட்டது.

அவர் கண்கள் கலங்கவில்லை, மாறாக, கண்களில் ஒரு கனிவும், அதே நேரத்தில் ஒரு கம்பீரமும் பிரதிபலித்தன. கலக்கமில்லாமல், அல்லது அதை வெளியில் காட்டிக் கொள்ளாமல் நின்றிருந்தவர் அன்னையின் புதல்வர் திரு.ராஜிவ் காந்திதான்!

நம்மைப் போன்றவர்களின் துக்கத்தைவிட அவருக்குத்தானே துக்கத்தின் தாக்குதல் அதிகமாக இருந்திருக்கும்? அதையும் மீறி தன் பொறுப்பை உணந்து அவர் கம்பீரமாக நின்றபோது எனக்குத் தோன்றியது, இப்படிப்பட்ட நிதானம் உள்ளவருக்குத் தலைவராகும் தகுதி நிச்சயம் இருக்கிறது என்று!

அதே குடும்பத்தில் மற்றுமொரு இடி 21.5.91 அன்று திரு. ராஜீவ் காந்தி கொடியவர்களின் சதிக்குப் பலியான சமயம் விழுந்தது. அவரது இறுதி யாத்திரையையும் தொலைக்காட்சியில் நேரடியாக ஒளிபரப்பினார்கள்.

ரோஜாப்பூ போன்ற உருவம் சிதைந்து மிகவும் பரிதாபமான நிலையில் உயிர் நீத்த அந்தத் தலைவரின் இறுதிச் சடங்குகள், உலகின் பல நாடுகளிலிருந்தும் பல தலைவர்களும் கலந்துகொள்ள நடைபெற்றன.

ராஜீவ் அவர்களின் துணைவியார் திருமதி சோனியா காந்தி பெருமளவுக்கு துக்கத்தைக் கட்டுப்படுத்தியும், ஓரிரு சந்தர்ப்பங்களில்





M.S குகனுடன்

தன்னை மீறி உடைந்துபோயும் நின்ற சமயம் அவரது இரு குழந்தைகளும் இரு தூண்களாக இருந்து அவரை அரவணைத்த நிதானத்தை எப்படி வர்ணிப்பது!

குறிப்பாக, திரு.ராஜீவ் காந்தியின் மகள் பிரியங்கா சற்றும் நிலை குலையாமல் உறுதியாகத் தாயைத் தேற்றி அணைத்துக் கொண்டதைப் பார்த்தபோது, அந்தச் சின்ன வயதிலேயே அவரிடம் வெளிப்பட்ட நிதானத்தைக் கண்டபோது, ஒரு மகளே தாயாக மாறி தன் அன்னையைத் தாங்கியது போல் எனக்குத் தோன்றியது.

இந்த நிதானம் நமது அன்றாட வாழ்க்கையிலும்கூட பெரிதும் தேவைப்படும் ஒன்று. காரில் சென்று கொண்டிருக்கும்போது, நம்மை யாராவது ஓவர்டேக் செய்து தாண்டிப் போனால்கூட ஆத்திரம் வந்துவிடும் அவசர காலம் இது. ஆத்திரத்தில் நம் பங்குக்கு அவனைத் தாண்டிப்போக முயற்சி செய்யும்போது நிதானம் நம்மைக் கைவிட்டு விடுகிறது!

''போனால் போகிறான், பைத்தியக்காரன்!'' என்று விட்டுவிடும் மனப்பான்மை ஒன்றுதான் இதுபோன்ற சந்தர்ப்பங்களில் நமக்கு உதவக்கூடும்.

யாரும் போட்டிக்கு இல்லாமலே கூட, பதட்டப்பட்டு அவசர மாகக் கார் ஓட்டிப்போவது நம்மில் பலருக்கும் சகஜமானது. சாலை விதிகளை ஞாபகத்தில் கொள்ளாமல், தெருவில் போகும் மற்ற வாகனங்களையும் மனிதர்களையும்.பயமுறுத்தும் அளவுக்கு வேகமாகப் போவதால் என்ன நன்மை கிடைத்துவிடப் போகிறது?

இரண்டு அல்லது ஐந்து நிமிடங்கள் நேரத்தில் மிச்சப்படுமா? ஆனால் அதற்கு விலையாக நாம் கொடுப்பது - நமது நிதானம்; பதட்டத்தால் ஏறிப் போகும் இரத்த அழுத்தம்; பரபரப்பின் காரணமாய் கெட்டுப்போகும் அன்றைய தினத்தின் வேலைகள் - தேவைதானா?

என் மகன் குகன் பதட்டப்படாமல் கார் ஓட்டும் வழக்கமுடையவன். ஒரு 'த்ரில்'லுக்காக என்று சொல்லிக்கொண்டு காரை விமான மாகப் பாவித்துத் தெருவில் விரட்டும் குணமெல்லாம் அவனிடம் கிடையாது. மிக நிதானமாக, ஒரே சீராக ஓட்டுவான். வழியில் எங்காவது கார் நின்றுவிட்டால்கூட, பதறிவிட மாட்டான். எப்போதும் வண்டியில் உடன் எடுத்துப்போகும் உபகரணப் பையிலிருந்து பொருத்தமான ஸ்பானர் முதலியவற்றை எடுத்து எந்தெந்த ஆயுதத்தை உபயோகிக்க வேண்டுமோ அதைத்தான் பயன்படுத்துவானே தவிர, மாற்றிப் போட்டுவிட மாட்டான்!

எப்போதும் நிதானமாக, தெருவில் கவனம் பதித்து ஓட்டுவதாலோ என்னவோ, ஒருமுறை சென்ற வழியை அவன் மறப்பதேயில்லை. இங்கு சென்னையில் வழி தவறாமல் ஓட்டுவதுகூட பெரிதில்லை. வெளிநாடுகளுக்கு - அது லண்டனோ, சிங்கப்பூரோ, - எங்கு போனாலும் அந்தந்த ஊர் சாலை விதிகளுக்கு உட்பட்டு ஒழுங்காகக் கார் ஓட்டுவதில் குகன் கெட்டிக்காரன்!





# 11. நாம் இருவர்



கணவன் - மனைவி இவர்களுக்கிடையில் இருக்கும் உறவு மிகவும் உன்னதமான ஒன்று. இந்த உறவில் காதல், அன்பு, பாசம், நட்பு, மரியாதை. அபிமானம், பாராட்டு, இன்னும் பெயரிட்டுக் குறிப்பிட சாத்தியமில்லாத பல நல்ல விஷயங்கள் உண்டு.

ஒருவருக்கொருவர் புரிந்து கொள்வதும், விட்டுக் கொடுப்பதும் மிக மிக அவசியமான இணைப்புச் சங்கிலிகளாக இருந்து உறவை நீடிக்கச் செய்ய வேண்டும்.

கணவனுக்காக மனைவி இதைத்தான் செய்யலாம், இதைச் செய்யக் கூடாது என்பதோ அல்லது மனைவிக்காகக் கணவன் இதையிதைச் செய்யலாம், இப்படியிப்படி செய்யக்கூடாது என்பதோ, மிதமிஞ்சிய மரியாதை என்பதோ இவர்களிடையே இல்லை. நான்கு சுவர்களுக்குள்ளான இவர்கள் உலகத்தில், நடப்பதை வெளியே சொல்லக்கூடாது என்பதே முக்கியம்.

மனைவிக்குக் கணவன கால் பிடித்து விடலாமா? கணவன் குளிக்கும்போது மனைவியோ அல்லது மனைவி குளிக்கும்போது கணவனோ எண்ணை தேய்த்து விடலாமா? அவள் குழந்தையைக் கவனித்துக் கொண்டிருக்கும்போது அவன் குழந்தைக்கு வேண்டிய பொருட்களை எடுத்துத் தரலாமா?

இதெல்லாம் நம் ஊரில் அனாவசியமாகப் பேசப்படும் கௌரவப் பிரச்னைகள்! மனைவிக்கு அனுசரணையாகக் கணவன் இவற்றைச்

செய்யும்போது 'பெண்டாட்டியைத் தாங்குகிறான்!' என்ற ஏளனப் பார்வைகளும் குத்தல் பேச்சுக்களும் நம் நாட்டில் வெகு சகஜம்!

வெளிநாடுகளில் ஒரு விருந்து நடந்தால் விருந்து முடிந்தவுடன் அந்த வீட்டின் தலைவன்தான் பாத்திர பண்டங்களை சுத்தம் செய்ய முனைகிறான். கனமான பொருட்களை கணவன்தான் தூக்கிச் செல்வான், மனைவியைத் தூக்கவே விட மாட்டான். மனைவிக்காக கார் கதவைத் திறந்து விடுவது அங்கெல்லாம் 'எடிகெட்' என்று சொல்லப்படும் நல்ல பண்புகளில் ஒன்று. தெரியுமா?

அங்கெல்லாம் நடப்பதாகச் சொல்லப்படும் இன்னொரு விஷயத்தையும் நாம் தெரிந்து கொள்ள வேண்டும். பெரிய நிறுவனங்களில் 'எக்ஸிக்யூடிவ்' எனப்படும உயர் பதவிக்கு ஒருவரைத் தேர்ந்தெடுக்கும்போது அவரது மனைவியையும் உடன் வரச் சொல்லி தேர்வு நடத்துகிறார்கள். அவள் எப்படிப் பழகுகிறாள்; பொறாமை, பேராசை, திருப்தி என்று பல குணங்களும் அவளிடம் எந்த அளவுக்கு இருக்கின்றன; அவளது பொதுவான அணுகுமுறை என்ன - என்பதையெல்லாம் பரிசோதித்து அறிகிறார்கள். பொறுப்பான பதவியில் அமருபவருக்குக் குடும்பத்தில் பிரச்சனை இல்லாமல் இருப்பது முக்கியம் என்பதற்காக இப்படி செய்கிறார்களோ என்று நினைக்கத் தோன்றுகிறது!

வேலையின்போது மட்டுமல்லாமல், சில சங்கங்களில் உறுப்பினராகும் முன்பும் இப்படி கணவன் - மனைவி இருவரையம் இன்டர்வியூ செய்கிறார்கள்! குடும்பத்தின் இரு தூண்களுக்கும் வெளிநாடுகளில் கொடுக்கும் மரியாதை நாமும் அறிந்து கொள்ள வேண்டிய விஷயம்.

பெரியவர்களின் முன்னிலையில் கணவனைப் பெயர் சொல்லி அழைப்பதோ, கணவனிடம் வேலை ஒப்படைப்பதோ அந்தந்த குடும்பத்தைப் பொறுத்த விஷயம். ஆனால் நான்கு சுவர்களுக்குள், இருவர் மட்டுமே உள்ள இடத்தில், அனாவசிய போலி கௌரவங்களை விட்டுவிட்டு, ஒருவரை ஒருவர் அனுசரித்துப் போவது அவர்கள் உறவுக்குச் சிறப்பு.

முன்பு பாராட்டைப் பற்றிச் சொல்லும்போது மனைவியைப் பாராட்ட கணவன் தயங்கக்கூடாது என்று சொல்லியிருந்தேனே, நினைவிருக்கிறதா?



'நாம் இருவர்' படத்தில் B.R.பந்துலு, T.R.மஹாலிங்கம், T.A.ஜெயலட்சுமி (1947)

பூ, புடவை போன்ற விஷயங்களுக்கு மட்டுமல்ல, மற்ற எல்லாவற்றிலுமே ஒருவரையொருவர் எங்கெங்கு பாராட்ட முடியுமோ அங்கு எல்லாம் நல்ல அம்சங்களைக் குறித்து மகிழ்ச்சியையும் பெருமையையும் தெரிவிப்பது இருவருக்கும் இடையில் உள்ள அன்யோன்யத்தை வளர்க்கும்.

கணவன் தன்னைப் பாராட்ட மாட்டாரா என்று அவள் எதிர்பார்ப்பதைப் போலவே, 'என் புருஷன் இப்படிப்பட்டவர், அவருக்கு இதுதான் பிடிக்கும், அவருக்கு ரொம்ப நல்ல குணம், அவரால் எனக்குப் பிரச்சனையே இல்லை' என்று நான்கு பேருக்கு நடுவில் மனைவியும் சொல்ல வேண்டும் என்று கணவன் எதிர்பார்ப்பதும் இயற்கை!

உடை, அலங்காரம், பேச்சு, செயல் - எதுவானாலும் நன்றாக அமைந்து விட்டதென்றால் வீட்டுக்கு வெளியில் எவரிடமிருந்தாவது ஒரு பாராட்டுச் சொல் கிடைத்துவிடும். அலுவலகத்தில் உடன் வேலை பார்ப்பவரோ, நண்பரோ நம் உடையைப் பாராட்டலாம்; பொது இடத்தில் சந்திப்பவர் நமது பேச்சையோ செயலையோ உயர்த்திப் பேசலாம். இவற்றால் நமக்கு சந்தோஷம் உண்டாகிறது என்பதை மறுப்பதற்கில்லை.

ஆனால், வெளியில் ஏற்படும் இத்தனை மகிழ்ச்சியும் பூரிப்பும், வீட்டுக்குள் நமது வாழ்க்கைத்துணையிடமிருந்து கிடைக்கும் ஒரு சின்ன பாராட்டினால்தான் முழுமையைப் பெறுகின்றன. எங்கே எவர் எப்படிச் சொன்னாலும், நமக்கு உரியவர் வாயிலிருந்து வரும்போதுதான் எந்தப் பாராட்டுக்கும் ஒரு நிறைவு ஏற்படுகிறது.

சில சமயங்களில் அது சற்று உண்மையைவிட அதிகமாக மிகைப்படுத்திச் சொல்வதுபோல் தோன்றினாலும் அதனால் தவறில்லை. குறைகளைத்தான் வலியுறுத்திச் சொல்லக்கூடாதே தவிர, நிறைகளை அழுத்தமாகக் கூறுவது நல்லதுதானே!

திருமணம் போன்ற விசேஷங்கள், விழாக்கள், மற்றும் பொதுவான இடங்களுக்கு இருவருமாக ஜோடியாகச் செல்வது ஒரு நல்ல பண்பு ஆனால் இந்த வழக்கம் எல்லா நாட்களும், எல்லா இடங்களுக்கும் சில சமயம் பொருந்தாமல் போய்விடுவதுண்டு. இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில், ஒருவர் மட்டுமே போக நேர்கிற நாட்களில், விழா முடிந்து வீட்டுக்குத் திரும்பி வந்ததும் வீட்டிலுள்ள மற்றொருவரிடம் விழாவில் நடந்தவைகளைப்பற்றி பேசுவது, இருவருக்கிடையே ஒரு பகிர்ந்து கொள்ளுதலை வளர்க்கும். கணவன் வெளியே போய்விட்டு வந்ததும் மனைவி, வெளியே நடந்தவைகளைப் பற்றி கணவனிடம் விசாரிப்பதும் ஒரு நல்ல வழக்கம். வாசலுக்குள் நுழையும்போதே வீட்டு சமாசாரங்களைப் பற்றி கணவனிடம் பேசத் துவங்குவது, அவனிடம் ஒரு எரிச்சலைத்தான் ஏற்படுத்தும். இதை விடுத்து, வெளியில் நடந்தவற்றை மனைவியிடம் கூற வாய்ப்புக் கிடைக்கும்போது கணவனுக்கு ஒரு நிறைவு நிச்சயம் கிடைக்கிறது.

ஒவ்வொரு வருடமும் தீபாவளி, பொங்கல் என்று எத்தனையோ விசேஷ நாட்கள் வந்தாலும், தம்பதிகளுக்கென்று சிறப்பாக உள்ள நாட்கள் சில உண்டு. அவை - மணநாள், பிறந்த நாள் ஆகியவை. எங்கோ பிறந்து, வளர்ந்து இரு வெவ்வேறு குடும்பங்களைச் சேர்ந்த ஆணும் பெண்ணும் வாழ்வில் ஒன்று சேர்ந்து ஒரு புதிய தலை முறையை உருவாக்க ஒரு துவக்கமாக அமையும் திருமண நாள் மிக முக்கியமான நாள் இல்லையா? இருவருமாக இணைந்து கொண்டாட இதைவிட சிறப்பான நாள் இருக்க முடியுமா!

இதை எத்தனை வீடுகளில் நினைவில் கொண்டு ஒருவருக்கொருவர் வாழ்த்துத் தெரிவித்துக் கொள்கிறார்கள் என்று கேட்டால் பலரும் பதில் சொல்ல முடியாமல் திணறித்தான் போகிறார்கள்! நமது திரைப்படங்களில்கூட, ''இன்று என்ன விசேஷம் தெரியுமா?'' என்று மனைவி கேட்க, கணவன் பதில் கூறாமல் முழிப்பதும், பிறகு திருமண நாள் என்று தெரிந்ததும், ''ஐயோ, மறந்தே போய்விட்டேன்!'' என்று சமாளிப்பதும் வெகு சகஜமான ஒரு காட்சி.

இது இப்படி சும்மா சிரித்துவிட்டுப் போகிற விஷயமாக எனக்குப் படவில்லை.

வருடத்துக்கு ஒருமுறை வரும் மணநாள், இருவரின் பிறந்த நாட்கள் என்று மூன்றே மூன்று தினங்களை தம்பதி நினைவில் வைத்துக் கொள்வது பெரிய கஷ்டமான செயல் ஒன்றும் இல்லை. அந்த நாட்களில் காலையில் ஒருவரையொருவர் வாழ்த்திக் கொள்வதிலும் அன்பைப் பரிமாறிக் கொள்வதிலும் உறவும் நெருக்கமும் கட்டாயம் பலப்படும். துணிமணியும், நகையும், விருந்து கொண்டாட்டங்களும்தான் மகிழ்ச்சியின் வெளிப்பாடுகள் என்று பொருளல்ல. மனதார ஒரு வாழ்த்தும், சந்தோஷத்தைத் தெரிவிக்கும் விதமாக ஓர் பகிர்தலும் இவற்றைவிட அதிக மகிழ்ச்சியை உண்டாக்குமே!

ஒவ்வொரு வருடத் துவக்கத்திலும் காலண்டர் வாங்கிய உடன் இப்படிப்பட்ட முக்கிய தினங்களைக் குறித்து வைத்து விட்டால் பிரச்னையே வராது. கணவன் மனைவி இவர்களின் முக்கிய தினங்கள் மட்டுமல்லாது மற்ற உறவினர்கள், நண்பர்களின் வாழ்வில் வரும் முக்கிய தினங்களையும் காலண்டரில் குறித்து வைத்துக் கொள்ள பதினைந்து நிமிடம் கூட ஆகப் போவதில்லை!

இப்படிக் குறித்து வைப்பதை என் சகோதரி சரஸ்வதியிடமிருந்துதான் கற்றேன். தினக் காலண்டரில் குறிப்பிட்ட சில பக்கங்களின் ஓரங்களை மடித்து விட்டிருப்பாள். எல்லோருடைய தமிழ், ஆங்கில பிறந்த நாள், கல்யாண நாள் என்று மறக்காமல் வாழ்த்தும் பழக்கம் அவளுக்குச் சின்ன வயதிலிருந்தே உண்டு. அவளிடமிருந்து கற்றதுதான் நான் இப்போதும் இவற்றை மறக்காமல் இருப்பது!

**'எஜமான்' படத்தில் ரஜினிகாந்த், மீனா, நம்பியார், மனோரமா (1993)**



கணவன் - மனைவிக்கு இடையே எதிர்பார்ப்புகள் ஏராளம் உண்டு. அவை அத்தனையும் நிறைவேறுமா என்பது கேள்விக்குறிதான். ஆனால் எதிர்ப்பார்ப்புகளை மனதிலேயே வைத்து மறுகிக் கொண்டிருக்காமல் ஏதாவது ஒரு சந்தர்ப்பத்தில் வெளியே சொல்லி விடுவது, தொடர்ந்து ஏமாற்றம் அடைவதைத் தவிர்க்க உதவும். பேசுவதில் ஒரு தெளிவும், திருத்தமும் இருந்தால் அனாவசிய மனத்தாங்கலைத் தவிர்க்கலாம்.

சமையலும் சாப்பாட்டு ரசனையும் கணவன் - மனைவிக்கு நடுவில் ஒரு நல்ல பாலம். கணவனுக்காக அவள் பார்த்துப் பார்த்து சமைப்பதும், அதை அங்கீகரிக்கும் விதமாக அவன் ரசித்து ருசித்துச் சாப்பிடுவதும் எத்தனை சந்தோஷமான விஷயம்! மிகுந்த அக்கறையோடு சமைத்தாலும் கணவன் அதை உணரக்கூட செய்யாமல் மண்ணைத் தின்பதுபோல் தின்றுவிட்டுப் போனால் எந்த மனைவிக்கும் ஒரு ஏமாற்றம் ஏற்படத்தான் செய்யும்!

வாழ்க்கைப் பயணத்தில் சரிவர திட்டமிட்டு நடத்திச் சென்று வெற்றி காணுவதில் கணவன் மனைவி இருவருக்குமே சம பங்கு உண்டு ஒரு குடும்பத்தை நடத்துவ்தில் உள்ள பொறுப்புகளை இருவருமாகப் பகிர்ந்து கொண்டால்தான் பயணம் நிலைகுலையாமல் சீராகச் செல்லும். செலவுக்குத் தேவையான பொருள் ஈட்டுவதில் கணவன் ஈடுபடும்போது அவன் பணி தொடர்பான இடத்தில் அவனுக்குப் பொறுப்பு; அவன் சம்பாதித்துக் கொண்டு வரும் பொருளை வைத்து வீட்டை நிர்வகிக்கும்போது வீட்டில் மனைவிக்குப் பொறுப்பு. இன்றைய நிலையில் இருவருமாக வேலை பார்த்து வாழ வேண்டிய சூழ் நிலையிலும் இந்தப் பகிர்தல் வேண்டும். இன்னின்ன வேலையை இவர் இவர் செய்ய வேண்டும் என்று கட்டாயமான ஆணை எதுவும் இல்லறத்துக்கு நல்லதல்ல. எதுவானாலும் அதில் ஒருவருக்கொருவர் உதவி செய்து, அன்புடன் பணிகளைப் பகிர்ந்தால் அங்கு பிரச்சனைகளுக்கே இடமில்லை.

ஏர் பூட்டி நிலத்தை உழும்போது, இரு மாடுகளும் சமமான சீரான நடையிலும் நோக்கிலும் சென்றால்தான் உழவு சரிவர நடக்கும். மனித வாழ்வும் இதே போன்றதுதான். அதனாலேயே திருமணத்தின்போது தலையில் நுகத்தடியை வைத்து இருவருமாகத் தொடும் சம்பிரதாயம் இன்றும் காணப்படுகிறது என்று எனக்குத் தோன்றுகிறது.



நுகத்தடி சடங்கு

சிவபெருமான் அர்த்தநாரீஸ்வரராகக் காட்சியளிப்பதும் இதே தத்துவத்தை உணர்த்தத்தானே! இறைவனே தன் மனைவிக்குத் தன்னில் பாதியைக் கொடுத்து விட்டபோது, அவனை வணங்கும் நாம் அவன் வழி செல்வதுதானே முறை!

மனிதப்பிறவியில் தவறு செய்யாதவரே கிடையாது. சமையலில்கூட உப்பு, புளி குறைந்தோ, தூக்கலாகவோ அமைவது சகஜம். இதைப் பெரிய குறையாகக் கருதி வீண் வாக்குவாதத்தை வளர்க்காமல், அந்தக் குறையை நிவர்த்தி செய்யும் வழியைத்தான் முதலில் பார்க்க வேண்டும். ''நீ நன்றாகத்தான் செய்திருந்தாய், ஆனால் இந்த ரசத்தில் மட்டும் காரம் அதிகமாக இருக்கிறது. நேற்று சரியாக இருந்ததே!'' என்று லேசாகத் தொட்டுக் காட்டினால், குறை உடனே மனதில் குறிக்கப்பட்டு மறுநாள் கட்டாயம் சரி செய்யப்பட்டு விடும்!

சின்னச் சின்ன சமாசாரங்களைப் பற்றியெல்லாம் நான்கு பேர் நடுவில் ஒருவரையொருவர் திட்டுவதோ, அநாகரிகமாக சண்டை போடுவதோ நல்ல பண்புகளே அல்ல. அனாவசியமாக மூன்றாம் மனிதருக்கு நம் விவகாரங்கள் தெரிந்து போவதோடு, நம் பிளவும் ஆழமாகிப்போகும்.

பல கணவன்மார்களுக்கு, மூன்றாம் மனிதருக்கு எதிரில் தங்கள் மனைவியை மட்டம் தட்டிப் பேசும் ஒரு கீழ்த்தரமான குணம் இருக்கிறது. இதனால் அந்த மனைவிக்கு மட்டும் அவமானமில்லை, கணவனுக்கும்தான். அவளை கணவன் அன்பாக நடத்தவில்லை என்ற

உண்மை பார்ப்பவருக்குப் புரிந்து விடுவதால் அவன் மீதுள்ள மரியாதை குறைந்துதான் போகும். வெறும் விளையாட்டுக்காகக் கூட மனைவியைக் கிண்டல் செய்து மற்றவர்கள் முன்னால் பேசிச் சிரிப்பது நாகரிகமான செய்கையல்ல.

எத்தனைதான் கவனமாக இருந்தாலும் மனவேறுபாடுகள் ஏற்படுவதைத் தவிர்க்க முடியாமல் சில நேரங்களில் நேர்ந்து விடுகிறது. எதிராளியைக் குற்றம் சொல்வதை விடுத்து, ''இந்த வார்த்தையை நான் சொல்லாமல் விட்டிருக்கலாமோ? வேறு மாதிரி மெதுவாகச் சொல்லியிருக்க வேண்டுமோ? ஆபீஸிலிருந்து வந்ததும் வராததுமாக இந்தப் பிரச்னையை ஆரம்பித்திருக்க வேண்டாமோ?'' என்று தன்னைத் தானே விமர்சித்துப் பார்த்தால் பல சிக்கல்களுக்கு உடனே விடை கிடைத்து விடும்.

சில நேரங்களில், ஏதோ ஒரு அற்ப விஷயத்தில் துவங்கும் சச்சரவு, காரமான வார்த்தைகளை விடாமல் தொடர்ந்து கொட்டி விடுவதனால் பெரிய சண்டையாக ஆகிவிடுகிறது. பெரும்பாலும், அப்போதைய வேறுபாடுக்கான காரணத்தை விட்டுவிட்டு பழைய குப்பையைக் கிளறி தேவையில்லாத அழுக்குகளை வெளியில் எடுத்து வீட்டை நாறடித்து விடுவது பலருக்கும் உள்ள பழக்கம்.

'உங்கப்பன் ரொம்ப யோக்கியமா? கல்யாணத்துக்கு எனக்கு வாங்கின டிரஸ்ஸுலயே அவன் கஞ்சத்தனம் புரிஞ்சு போச்சு!' என்றும், 'உங்கம்மா பேசின பேச்சுல உங்க பரம்பரை அழகு அப்பிடியே தெரியுது! வந்தவங்களை வான்னு கூட சொல்லாத மகராசி!' என்றும், 'உங்கண்ணன் இருக்கான் பாரு திமிர் பிடிச்சவன்! உருப்படாத பயலுக்கு அலட்டல் வேறு!' என்றும் யார் யாரையோ இழுத்து பேச்சை வளர்த்துவிட்டு, பிறகு எங்கே நிறுத்துவது, யார் முதலில் நிறுத்துவது என்ற கௌரவப் பிரச்சனையினால் மனக்கசப்பு தீராமலே போய்விடுவதும் உண்டு.

அந்தந்தப் பிரச்னையை அப்படி அப்படியே தீர்க்க முயன்றால்தான் நல்லது. இரண்டு கை தட்டினால்தான் சத்தம். இருவருமே ஒத்துழைத்து கருத்து ஒன்றிப் போனால்தான் சச்சரவுகள் நீங்கும். ஒருவேளை இருவரில் ஒருவர் சற்று முரண்டு பிடிப்பவராக இருக்கக்கூடும். அவர் பக்கமிருந்து எந்த விதமான ஒத்துழைப்பும் கிடையாது என்பதற்காக, மற்றவரும் முயற்சி செய்யாமல் வேற்றுமையைப் பெரிதாக்கினால் அப்புறம் பிரச்னை தீர்வது எப்படி?

என்றேனும் ஒரு நாள் அவரும் திருந்தி நம் முயற்சிக்கு செவி சாய்ப்பார் என்ற நம்பிக்கையில் நல்லதையே நினைத்து செய்ய வேண்டும்.

காலையில் கணவன் ஏதோ கோபமாகப் பேசிவிட்டு அலுவலகத்துக்குப் போய் விட்டான் என்றால், மனைவி அதை நாள் முழுவதும் மனதுக்குள் ஊறப்போட்டு பெரிதாக்கி, மாலையில் அவன் வந்ததும் தன் கோபத்தை பதிலுக்குக் காட்டினால் அதைப்போல தவறு வேறு ஒன்றும் இல்லை.

அவன் ஆபீஸில் எத்தனையோ பிரச்னைகள் இருக்கலாம்; காலையில் கோபம் வந்ததையே மறந்திருக்கலாம். வேண்டாதவைகளை சுமந்து கொண்டு மறுபடியும் தொடர்வது கசப்பான ஒரு சூழ்நிலையைத்தான் உருவாக்கும்.

இதுபோன்ற சூழ்நிலைகளை வளரவிடாமல் செய்வதில் பொறுப்புள்ள கணவனுக்கும் பங்கு இருக்கிறது. கோபம் வரும் நேரத்தில், தன்னைக் கட்டுப்படுத்த முடியாமலோ அல்லது தன் கோபத்தை மனைவி உணர வேண்டும் என்பதற்காகவோ படாரென்று கதவை அறைந்து உதைத்துவிட்டுப் போவது கணவன்மார்களுக்கு மிக சகஜம்! சொல்லப்போனால், இப்படிச் செய்ய வேண்டும் என்ற வேகம், ஒரு சபலம் (டெம்ப்டேஷன்) அனேகக் கணவர்களுக்கு உண்டாவது உண்டு!

ஆனால் வீட்டை விட்டுக் கிளம்பும்போது சூடாக, ஆத்திரமாகச் சொற்களை வீசிவிட்டுக் கிளம்புவது கூடாது. ஏனென்றால், அவனுக்கு ஆபீஸிலும் பல இடங்களிலும் பல மாற்றங்கள், சிந்தினையினை திசைதிருப்பும் விஷயங்கள் உண்டு. ஆனால், வீட்டிலேயே இருக்கும் மனைவிக்கு, கணவனும் குழந்தைகளுமே உலகமாக இருக்கும் மனைவிக்கு, அவன் கோபத்தில் எறிந்துவிட்டுப் போகும் வார்த்தைகளிலிருந்து கவனத்தைத் திருப்புவது கடினம், இதைக் கணவர்கள் உணர வேண்டும்.

எத்தனை பிரச்சனையிருந்தாலும், ''சாயங்காலம் வரேன், மற்ற விஷயங்களை எல்லாம் பிறகு பார்த்துக் கொள்ளலாம்'' என்று அவளை ஆறுதல்படுத்துகிற மாதிரி சுமுகமாகப் பேசிவிட்டுப் போனால், பல சமயங்களில் இந்த ஆறுதலே கூட பிரச்னையைத் தீர்த்துவிடும்!

# 12. என் மனைவி



'இவ்வளவெல்லாம் பேசுகிறாயே, உன் குடும்ப வாழ்க்கை எப்படி?' என்று நீங்கள் கேட்கலாம்.

முன்னுரையில் குறிப்பிட்டுள்ளபடி, ஒரு காலத்தில் மிகவும் கோபக்காரன் என்று பெயர் வாங்கிய என்னை, தந்தையார் கூட சில சமயம் 'ஆங்க்ரி மேன்' என்று செல்லமாகக் கூப்பிட்ட என்னை, அனுசரித்து வாழ்ந்து என் கோபத்தைக் குறைத்து என்னை நிதானமாக்கிய பெருமையில் என் மனைவி முத்துலட்சுமிக்குப் பெரும் பங்குண்டு. அந்த அளவுக்கு பொறுமையும் விட்டுக் கொடுக்கும் தன்மையும் கொண்டவள் அவள்.

அவளைப் பெண் பார்த்துவிட்டு வந்த பிறகுதான் தெரிந்தது, அவள் பட்டப்படிப்பு இறுதியாண்டு படிக்கிறாள் என்று. எனக்கோ ஒரே அதிர்ச்சி! காரணம், நான் பள்ளியிறுதியைத் தாண்டாதவன்!

பெண்ணை நான்தான் பார்த்தேனே தவிர, அவள் என்னைச் சரியாகப் பார்ககவில்லை. அதோடு, என்னைவிட அதிகமாக வேறு படித்திருக்கிறாள். எனவே, நாளை வாழ்க்கையில் ஏதாவது பிரச்சினைகள் ஏற்படலாம் என்று பயந்தேன். ஆனால், என் சகோதரி மீனா வீரப்பன், பெண் சம்மதம் தெரிவித்துவிட்டதாகச் சொன்னதும் பேசாமல் இருந்துவிட்டேன்.

ஒரு பக்கம் பெண்ணைப் பிடித்திருந்தது. மறுபக்கம் எனது தயக்கங்கள்.

என் மனைவி படித்த கல்லூரியில்தான்என் சகோதரி சரஸ்வதியும் படித்து வந்தாள். அவள் கேட்டதால் என் போட்டோ ஒன்றைக் கவரில் வைத்து என் மனைவியிடம் காட்டுவதற்காகக் கொடுத்தனுப்பினேன். ஆனால் திருமணம் முடிந்த பிறகு ஒருநாள் அந்தக் கவர் பிரிக்கப்படாமலேயே அவள் பெட்டியில் இருந்ததைப்பார்த்தேன். லட்சுமி சொன்னாள், ''நான் கவரைத் திறந்து பார்க்கவேயில்லை. எனக்கு என் பெற்றோரைவிட யாரும் நல்லது செய்துவிட முடியாது. அதனால் அவர்கள் எடுக்கும் எந்த முடிவையும் ஏற்பது என்று தீர்மானித்தேன். எனவே, கல்யாணம் ஆன பிறகுதான் உங்களைப் பார்த்தேன். அதுவரை பார்ப்பதில்லை என்று இருந்ததால் கவரைப் பிரிக்கவில்லை''.

எந்த விதத்திலும் என்னைவிட அதிகம் படித்தவள் என்கிற எண்ணம் தவறிப்போய்க்கூட எனக்கு ஏற்பட்டு விடாமல் அவள் இந்த முப்பத்திரண்டு வருடங்களாக நடந்து வருவது எனக்கு வியப்பான விஷயம்.

திருமணமான புதிதில், புது மனைவியின் தவறுகளைக் காண, கண்டிக்கத் துடித்தேன். ஆனால் என்னைப் பொறுத்தவரையில் அது காற்றைப் பிடித்தவன் கதையாயிற்று. நாணலின் மேற்கோளை அவள் எனக்குப் புரிய வைத்தாள்.

என்னை அத்தான் என்று அவள் கூப்பிட்டாலும்கூட, சில சமயங்களில் இந்த முறையில்தான் கூப்பிடுவது என்று இல்லாமல் ஒவ்வொரு விதமாகக் கூப்பிட்டுக் கொள்வோம்.

காலையில் எனக்கு பெட் காபி கொடுப்பதில் ஆரம்பித்து, காக்காய்க்கும் அணிலுக்கும் பிரெட் போடுவதிலிருந்து வீட்டு வேலைகள் எல்லாவற்றையும் நிர்வகிப்பது மட்டுமல்ல, இரவு எத்தனை நேரமானாலும் நான் வரும் வரை விழித்திருப்பாள். நான் சாப்பிட்டு விட்டேன் என்று ஆபீஸிலிருந்து போன் செய்து சொன்னாலும்கூட எனக்காகக் காத்திருந்து, ''நீங்கள் அப்படித்தான் சொல்வீர்கள், ஆனால் என்கூட கொஞ்சமாவது சாப்பிடுவீர்கள். அதனால்தான் காத்திருந்தேன்'' என்பாள்.

இத்தனை வருடங்களில் அவள் ஒருநாள் கூட ஷூட்டிங் பார்க்க வந்ததில்லை. குடும்ப விசேஷங்கள், திருமண விழாக்களில் கலந்து கொள்ள ஸ்டுடியோவுக்கு வந்திருக்கிறாளே தவிர ஒருமுறை கூட படப்பிடிப்பைப் பார்க்க வந்ததில்லை. நான் கூப்பிட்டதும் இல்லை.

எங்கள் படங்களைப் பார்த்துவிட்டு பிடித்ததாகவோ பிடிக்கவில்லை என்றோகூட சொன்னதேயில்லை!

நகை அதிகமாகப் போடுவது எனக்கு எப்போதுமே பிடிக்காது. அவளும் போடுவதில்லை, எனக்குப் பிடிக்காது என்பதாலா அல்லது அவளுக்கே பிடிக்காதா என்று எனக்குத் தெரியாது. ஆடம்பர உடைகள்கூட அவள் வாங்கியதில்லை.

தன் குழந்தைகளைப்போல தன் சினேகிதிகளின் குழந்தைகளையும் பாவிப்பாள். தன் பையனுக்குச் செய்ததைப் பேலவே, எங்கள் வீட்டில் தங்கிப் படித்து வந்த பையனுக்கும் இரவு கண்விழித்துப் படிக்கும்போது ஹார்லிக்ஸ் கலந்து கொடுப்பாள். மகளின் சினேகிதிகளைக்கூட தன் வளர்ப்பு மகள் என்றுதான் சொல்வாள். வீட்டில் இருக்கும் வேலையாட்கள், சலவை செய்பவர், தோட்டக்காரர் என்று யார் வீட்டுக் குழந்தையாக இருந்தாலும் அவர்கள் என்ன படிக்கிறார்கள், நன்றாகப் படிக்கிறார்களா என்று விசாரித்து, நன்றாகப் படிக்கிறவர்களை ஊக்கப்படுத்துவாள்.

மகளை ஒரு தோழி போல்தான் வளர்த்திருக்கிறாள். மருமகளிடமும் பாசத்துடன் மகளிடம் பழகுவது போலவே பழகுவாள்.

எந்த விஷயமாக இருந்தாலும் என் அபிப்ராயத்தைக் கேட்டே செய்வாள். ''நீங்கள் சொல்லுங்கள், அதுதான் சரியாக இருக்கும்'' என்று முடிவு செய்யும் பொறுப்பை என்னிடம் விட்டு விடுவாள். அன்று முதல் இன்று வரை எல்லா முடிவுகளையும் நானே எடுத்துக் கொண்டிருக்கிறேன் என்பதில் ஒரு வருத்தம்கூட எனக்கு உண்டு! என் முடிவுதான் நன்றாக இருக்கும் என்ற திருப்தியை எனக்குக் கொடுத்துப் பழக்கி விட்டாள்! அவள் சொந்த விருப்பு வெறுப்பு எது என்பதே கூட சமயங்களில் சந்தேகமாக இருக்கும்!

முந்தின அத்தியாயத்தில் சொன்ன மாதிரி, எங்களுக்குள் போலி மரியாதை எதுவும் இல்லாமல் வாழ்வதை இங்கு குறிப்பிட விரும்புகிறேன். அவளுக்காக சில வேலைகளை நானே செய்வதில் எனக்கு மிகுந்த திருப்தியும் மகிழ்ச்சியும் உண்டு.

இயன்றவரை மாலை வேளைகளில் அவள் கோவிலுக்கோ அல்லது கடைகளுக்கோ சென்றால், நானே கார் ஓட்டி அவளை அழைத்துப் போகிறேன். அழைத்துப் போகிறேன் என்பதைவிட இருவருமாகப் போய் வருகிறோம் என்பதே பொருத்தமாக இருக்கும். சொல்லப் போனால், கார் ஓட்டும்போது அவள் என்னுடன் வந்தால்

தேவலை என்கிற அளவுக்கு நான் அவளைச் சார்ந்தே இருக்கிறேன்! ஏனென்றால், கார் ஓட்டுவது மட்டும்தான் நானே தவிர, வழி சொல்வது அவள்தான்! எத்தனை தரம் பார்த்திருந்தாலும் எனக்கு எளிதில் புரியாத வழியை ஒரே ஒரு முறை பார்த்துப் புரிந்து கொண்டு விடுகிற சக்தி அவளிடம்தானே இருக்கிறது!

அவளது பொறுமை என்னைப் பல விதங்களில் மாற்றியிருக்கிறது. முன்பிருந்த கோபம் இப்போது என்னிடம் கிடையாதுதான். ஆனாலும், எப்போதாவது வரும்போது அதை மனைவியிடம்தான் காட்டுகிறேன். காரணம், அவள்தான் என் கோபத்தைப் பொறுத்துக் கொள்கிறாள். எப்போதுமே ஒத்துப்போகிற அளவுக்கு ஒரே அலைவரிசையில் எங்கள் கருத்துக்கள் ஒருமித்திருப்பதாலேயே எங்கள் மணவாழ்வு முப்பத்திரண்டு வருடங்களைத் தாண்டி வெற்றிகரமாக ஓடிக்கொண்டிருக்கிறது!

திரு. ரஜினிகாந்த் அடிக்கடி கூறுவதை இங்கு குறிப்பிட விரும்புகிறேன் ''சொர்க்கமும் நரகமும்'' என்பது பூமியில்தான் இருக்கிறது. ஒரு மனித னுக்கு சொர்க்கம் அவனுக்கு அமையும் மனைவியைப் பொறுத்தது. அதுபோல ஒரு பெண்ணுக்கு சொர்க்கம் அவளுக்கு அமைகிற புருஷ னைப் பொறுத்தது. சில வேளைகளில் அப்படி அமையாவிட்டால். கணவன் மனைவி இருவரும் முயற்சித்தால் சொர்க்கத்தை அவர்களால் உண்டாக்கிக் கொள்ள முடியும்.

**மனைவி லதாவுடன் ரஜினிகாந்த்**



# 13. தாய்மை



'பக்த பிரகலாதா' படத்தில் நாரதராக பால முரளி கிருஷ்ணா, அஞ்சலி தேவி (1967)

புராணத்தில் விஷ்ணுவின் நரசிம்ம அவதாரக் கதையில் ஒரு சிறு சம்பவம் சொல்லப்படுவதுண்டு.

பிரகலாதனை அவன் தாய் கருவுற்றிருக்கும்போது, நாரதரிடம் விஷ்ணுவைப் பற்றி கேட்டுக் கொண்டிருக்கிறாள். அப்போது நாரதர் பேசப்பேச, தாயின் கருவிலிருந்த பிரகலாதன் 'உம்' கொட்டியவாறு பேச்சைக் கேட்ட்தாகவும், விஷ்ணுவைத் துதிக்கும் பக்தியை பிறக்கும் முன்பே அவன் பெற்று விட்டதாகவும் புராணம் சொல்கிறது. இக்கதை எங்கள் 'பக்தப் பிரகலாதா' படத்திலும் இடம் பெற்றிருந்தது.

ஒரு சிசுவை வயிற்றில் சுமந்து கொண்டிருக்கும் தாயின் மனநலமும் உடல் நலமும் சுற்றுச் சூழலும் அந்தச் சிசுவின் வளர்ச்சிக்கு எந்த அளவுக்குக் காரணமாக இருக்கின்றன என்பதையே இக்கதை உணர்த்துவதாக எனக்குத் தோன்றுகிறது.

இந்தக் கருத்தை மருத்துவத் துறையும் வெகு காலமாக வலியுறுத்தி வருவதை நாம் அறிவோம். ஒரு குழந்தையின் முழு ஆரோக்கியத்துக்கும், கர்ப்பமுற்றிருந்த காலத்தில் அந்தத் தாயின் உடலிலும் மனதிலும் ஏற்படும் அனுபவங்களே காரணம் என்பதை மருத்துவர்கள் மிகத் தீவிரமாகக் குறிப்பிடுகிறார்கள்.

சந்தோஷமான வாழ்வு அமையப்பெற்று மனநிறைவுடன் தன் பேறு காலத்தை எதிர்நோக்கும் பெண்ணுக்குப் பிறக்கும் குழந்தை,

பெரும்பாலும் குறைகள் ஏதுமின்றி மிக ஆரோக்கியமாகப் பிறக்கிறது; வளர்கிறது.

ஆனால், இதற்கு நேர் மாறாக, ஒரு குழப்பமான, வருத்தமான மனநிலையில் தாய் இருந்தால், அவளுக்குப் பிறக்கும் குழந்தை பெரும்பாலும் நல்ல உடல்நலத்துடன் பிறப்பதில்லை.

இதைப் பற்றி சொல்லும்போது என் நண்பர் ஒருவரின் குழந்தையைப் பற்றிய நினைவுதான் வருகிறது, அந்தக் குழந்தைக்கு உடம்பில் உள்ள குறைபாட்டின் சிகிச்சைக்காக வெளிநாட்டுக்கு அழைத்துப் போனார்கள். குழந்தையை முழுவதுமாகப் பரிசோதித்த மருத்துவர், பெற்றோரிடம் கேட்டது என்ன தெரியுமா?

''இவனைக் கருவுற்றபோது உங்கள் வாழ்வு அமைதியானதாக இல்லையா? பிரச்னைகள் நிறைந்ததாக இருந்ததா?'' என்றுதான் கேட்டார்.

அவர் கேள்வி நியாயமானதுதான். குழந்தைகளின் உடல் ஊனம் அல்லது மனக்கோளாறுகளுக்குப் பல சமயங்களில் நிம்மதியற்ற கர்ப்ப காலம்தான் அடிப்படை பிரச்னையாக அமைந்து விடுகிறது. நண்பரின் மனைவிக்கும் இப்படிப்பட்ட ஒரு மனவேதனை ஏற்பட்டு அவரது ரத்த அழுத்தம் வெகுவாக அதிகரிக்கும் அளவுக்கு நிலைமை போயிருந்தது உண்மை. இதுதான் குழந்தையின் உடல்குறைக்குக் காரணம்.

நல்ல குழந்தை ஒன்றைப் பெற்று, சிறந்த முறையில் வளர்த்து, பெருமையோடு வாழ வைக்க வேண்டிய மிகப்பெரிய பொறுப்பு, குழந்தை உருவான உடனேயே பெற்றோருக்கும் அவர்களைச் சார்ந்த மற்றவர்களுக்கும் துவங்கி விடுகிறது.

சத்தான உணவு, சுத்தமான வாழ்க்கை முறை என்பதைப் பற்றியெல்லாம் இன்றைக்குப் பெரும்பாலான வீடுகளில் அறிந்திருக்கிறார்கள். இவற்றோடு நிம்மதியான மகிழ்ச்சியான சூழ்நிலை பற்றியும் கவனமாக சிந்திக்க வேண்டும்.

அன்பும், விட்டுக் கொடுத்தலும் எப்போதுமே எதையும் சாதிக்கும் வல்லமை கொண்டவை. அதிலும், கர்ப்பிணிப் பெண்கள் உள்ள குடும்பத்தில் இந்த இரண்டும் மிக மிகத் தேவை.

அனாவசிய வாக்குவாதங்கள், சண்டை சச்சரவுகள், மனதை நோகடிக்கும் பேச்சுக்கள், வேதனைப்படுத்தும் சம்பவங்கள் ஆகியவற்றை விலக்கியே ஆக வேண்டிய காலம் இது.



'களத்தூர் கண்ணம்மா' படத்தில் சாவித்திரி கமல்ஹாசன் (1960)

பரிவோ, பாசமோ, அரவணைப்போ - எதுவாக இருந்தாலும் அது அந்தக் குறிப்பிட்ட பெண்ணுக்கு மட்டுமல்லாமல் அவள் வயிற்றில் உள்ள சிசுவுக்கும்தான் என்பதை மறக்காமல் ஞாபகத்தில் வைத்துக் கொண்டால், குழந்தையின் வளர்ப்புக்கு ஒரு நல்ல ஆரம்பம் கிடைக்கும். அந்தப் பெண்.எந்த விதத்திலாவது மனவேதனையோடும் ஏக்கத்தோடும் இருந்தால், அந்த நேரத்தில் கூடுதலான அன்பும் கவனிப்பும் நிச்சயம் தேவை.

உண்டாகியிருக்கும் பத்து மாத காலத்தில் பெரும் பகுதியை ஒரு பெண் தன் கணவன் வீட்டாருடன்தான் செலவிடுகிறாள் என்பதால், அவளது சந்தோஷம், துக்கம் போன்ற உணர்வுகளுக்கு அவர்களே பெருமளவுக்குக் காரணமாகிறார்கள். முக்கியமாக, அவளது கணவன். பிறக்கப்போவது தங்களின் அன்பில் உருவாகி வளரும் குழந்தை என்ற அடிப்படையைப் புரிந்து அனுசரணையாக அவன் நடந்து கொண்டால் பிரச்சினையே இல்லை.

பத்து மாதம் சுமக்கப் போவது தாய்தான் என்றாலும், குழந்தையின் உடல் அமைப்புக்குத் தாய், தந்தை இருவருமே பொறுப்பாளிகள்தான். சொல்லப்போனால், இருவரின் பரம்பரை உடல்வாகைக் கொண்டுதான் பெரும்பாலும் குழந்தைகள் பிறக்கின்றன.

''ராஜா மாதிரி ஆண் குழந்தையைப் பெத்துக்கிட்டு வா, பெண் குழந்தை பொறந்துச்சு, அப்புறம் நீ இந்த வீட்டுப் படி ஏறக்கூடாது!'' என்று நிபந்தனை விதிக்கும் மனிதர்களையும், ''குழந்தை சிகப்பா லட்சணமாகத்தான் இருக்கணும், ஆமா சொல்லிட்டேன்! கருப்பா

கிருப்பா பொறந்திட்டா நல்லாவே இருக்காது. பார்த்து நடந்துக்க!'' என்று கட்டளையிடும் மனிதர்களையும் நாம் பல வீடுகளில் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறோம்.

பெண் மட்டுமே இவற்றுக்குப் பொறுப்பாளி என்கிற மாதிரி பேசப்படும் இத்தகைய அபத்தப் பேச்சுக்கள், அந்தப் கர்ப்பிணிப் பெண்ணின் மனதில் என்னென்ன பயங்களையும், விபரீதக் கற்பனைகளையும் உண்டாக்கும் என்பதை இவர்கள் அறிவதில்லை.

பொதுவாகவே, கர்ப்ப காலத்தில் பெண்ணின் மனது சற்று பலவீனமாகவும், மற்றவர்களின் கவனிப்பைக் கொஞ்சம் கூடுதலாக எதிர்பார்க்கும் விதத்திலும் இருக்கும் என்று பெரியவர்களும் மருத்துவர்களும் கூற நான் கேட்டிருக்கிறேன். இந்த மன பலவீனத்தினாலேயே, கணவன் தன்னை சரியாகக் கவனிக்கவில்லையோ, தான் ஒதுக்கப் படுகிறோமோ, ஒருவேளை பிரசவத்தில் இறந்து விடுவோமோ, அப்படியானால் கணவர் இரண்டாம் திருமணம் செய்து கொண்டு குழந்தையைக் கொடுமைக்கு உள்ளாக்குவாரோ, இல்லாவிட்டால் பிரசவம் முடிந்து நாம் வருவதற்குள் கணவருக்கு வேறு பெண்ணுடன் சினேகம் ஏற்பட்டு விடுமோ என்று பல சந்தேகங்களும், குழப்பங்களும், அர்த்தமற்ற மனப்பிரமைகளும் மனச்சோர்வும் ஏற்படுவதுண்டு. எனவேதான்



'நானும் ஒரு பெண்' படத்தில் விஜய குமாரி (1963)

இந்த நேரத்தில் உறவு மனிதர்களின், முக்கியமாக கணவனின் கவனிப்பு அதிகமாகத் தேவை என்று கூறப்படுகிறது.

பெண் குழந்தை பிறந்து விட்டால் என்னசெய்வது, அதுவும் நிறமும் அழகும் குறைந்து பிறந்தால் எப்படி கணவனையும் அவன் வீட்டாரையும் சமாளிப்பது என்று பேறு காலம் முழுவதும் அச்சத்திலேயே வாழும் பெண்ணுக்குப் பிறக்கும் குழந்தை ஆரோக்கியத்தை இழந்து பிறக்க சாத்தியக்கூறுகள் உண்டு.

பெற்றோரை மீறி, அவர்கள் சம்மதமில்லாமல் காதலனுடன் ஓடிப்போய் வாழ்ந்த பெண் ஒருத்தி, ஊனமுள்ள குழந்தையைப் பெற்றெடுத்ததை நான் அறிவேன். அவள் சந்தித்த எதிர்ப்புகளும், மனப் போராட்டங்களுமே இந்நிலைக்குக் காரணம். அந்தப் பெண் கர்ப்பமாக இருக்கிறாள் என்று அறிந்தும்கூட, அவளை ஏற்க மறுத்து வெறுத்து ஒதுக்கினார்கள் உறவினர்கள். நல்ல கவனிப்புத் தேவைப்படும் நேரத்தில் வெறுப்பும் அலட்சியமும் அவள் மனதைத் தாக்கி பாதித்ததால்தான் அவளது குழந்தைக்கு ஊனம் உண்டாயிற்று.

உடலில் சுமையைத் தாங்கும் பெண்ணுக்கு உள்ளத்தில் வேறு சுமையை ஏற்றி வைத்து வதைப்பது அவளை மட்டுமல்ல, அவள் சுமக்கும் சிசுவையும் பாதிக்கும் என்பதை நான் அழுத்தமாக நம்புகிறேன்.



# 14. குழந்தையும் தெய்வமும்



குழந்தைகளின் இளம் மனதை எப்போதுமே ஈரக் களிமண்ணுடன் ஒப்பிடுவார்கள்.

இரண்டுமே நாம் எதை நினைத்து எப்படி உருவாக்குகிறோமோ அப்படித்தான் உருவாகும். களிமண்ணை லாவகமாகப் பிசைந்து, பொறுமையோடு நிதானமாக உருட்டி, தட்டி தேவையான உருவத்தைச் செய்வார்கள். கொஞ்சம் கவனம் சிதறி பதட்டப்பட்டாலும் பொம்மை சிதைந்து போய்விடும். பிள்ளையார் பிடிக்கக் குரங்கான கதை ஆகிவிடும்.

குழந்தை வளர்ப்பும் இதே போன்றதுதான். சொல்லப்போனால், இன்னமும் கூடுதல் கவனமும் பொறுப்பும் தேவைப்படும். ஏனெனில், களிமண் பொம்மை சரியாக இல்லையென்றால் உடைத்துத் தூக்கியெறிந்து விடலாம்; ஆனால் குழந்தையை?

எளிதில் எதையும் கிரகித்துக் கொண்டு அவற்றை அழுத்தமாகப் பதித்துக் கொண்டு விடுகிற பிஞ்சு மனம் குழந்தைகளுடையது. சற்று லேசாகப் பட்டால்கூட போதும், உடனே தடம் பதிந்து போய் விடும் அளவுக்கு இளசான மனம். எனவே, அவற்றில் பதிப்பவற்றைச் சிறந்ததாகத் தேர்ந்தெடுத்துக் கொடுக்கும் பொறுப்பு நம்மைப் போன்ற பெரியவர்களிடம்தான் இருக்கிறது.

எப்போதும் சண்டையிட்டுக் கொண்டும், விவாதித்துக் கொண்டும் பெற்றோர் இருந்தால் குழந்தைகளுக்கும் இதே குணங்கள்

ஏற்பட வாய்ப்புண்டு. அல்லது, இவற்றால் பாதிக்கப்பட்டு குழந்தையின் மனம் பாதை மாறிப்போய்விடும் அபாயமும் ஏற்படலாம்.

சின்னச்சின்ன கருத்து வேறுபாடுகளைக்கூட பெரிதுபடுத்தி, மிகப்பெரிய சண்டையாக ஆக்கி, கணவனும் மனைவியும் ஒருவரையொருவர் திட்டிக் கொண்டும் தரக்குறைவாகப் பேசிக் கொண்டும் இருந்தால், அவர்களுக்கிடையே மாட்டிக் கொண்டுவிட்ட குழந்தைகளின் கதி என்ன?

வளரும் நிலையில் நியாயமாகக் கிடைக்க வேண்டிய அன்பு, பாசம், வழிகாட்டுதல் இல்லாமல் போவதோடு, தேவையில்லாத பேச்சுக்களையும் நடத்தைகளையும் வேறு பார்க்க நேரிட்டு விடுகிறது. இப்படி வளரும் குழந்தைகளின் வாழ்க்கை நல்ல விதத்தில் எப்படி அமைய முடியும்?

தாங்கள் செய்யாத தவறுக்காக இவர்கள் தண்டனை அனுபவிப்பது எந்த விதத்தில் நியாயமாக இருக்க முடியும்?

பெரியவர்களின் பிரச்னைகளினால் பாதிக்கப்படும் குழந்தைகள், தங்கள் பிரச்னைகளைத் தீர்த்துக் கொள்ள யாரை அணுகுவார்கள், எப்படி முயற்சி செய்வார்கள்? பிரச்னைகளை வெளியே சொல்ல அவர்களுக்கு சந்தர்ப்பமோ, அவற்றைத் தீர்த்துக் கொள்ளும் வாய்ப்போ அமையுமா?

பெரும்பாலும் 'இல்லை' என்ற பதிலைத்தான் கூற வேண்டியிருக்கிறது. 'அப்பாவும் அம்மாவும் என்னைக் கவனிப்பதில்லை. எனக்கு யாருமே இல்லை' என்கிற சுயபரிதாபம் இந்தக் குழந்தைகளிடம் ஏற்பட்டு விடுவதே போதை மருந்து மற்றும் தீய பழக்கங்களுக்குத் தூண்டும் கருவியாக அமைகிறது என்று மருத்துவர்கள் சொல்கிறார்கள்.

தன்னைக் கவனிக்காத பெற்றோரை எப்படியாவது தன் பக்கம் இழுத்து கவனிக்க வைத்துவிட வேண்டும் என்கிற தவிப்பும் கூட இப்படிப்பட்ட பழக்கங்களுக்குத் துவக்கமாகின்றன.

எனக்கு தெரிந்த ஒரு பையன் அன்றாடம் காலைக்கடனை முடித்ததும், கால்களைக் கழுவாமலே நடு வீட்டுக்குள் வந்து விடுவான். காரணம், பெற்றோரின் ஓயாத சண்டையைக் கொஞ்சமாவது நிறுத்தி தன்னை கவனிக்கச் செய்ய அவனுக்குத் தோன்றிய வழிதான் அது! பெற்றோரிடம் எத்தனை எதிர்பார்ப்பும் ஆதங்கமும் இருந்தால்

இப்படித் தனக்கு ஏற்படக்கூடிய அவமானத்தைக்கூட பொருட்படுத்தாமல் நடந்து கொள்வான்.

ஒருசிலர் சும்மா சண்டை போடுவதோடு நிற்காமல் குழந்தைகளிடமே தங்கள் வாதங்களைக் கூறி முறையிட வேறு செய்வார்கள். ''அப்பா செய்வது அநியாயம்தானே! நானாக இருப்பதால் பொறுத்துப் போகிறேன்'' என்று அம்மாவும், ''உங்கம்மா செய்வது ரொம்ப சரியோ! என்னைத் தவிர வேறு யார் இவளோடு குடும்பம் நடத்துவார்கள்'' என்று அப்பாவும் மாற்றி மாற்றிப் புகார் செய்தால், அப்பாவிக் குழந்தைகள் என்னதான் செய்ய முடியும்.

இதில் சிலருக்குத் தங்கள் பக்கம்தான் குழந்தைகள் பேச வேண்டும் என்பதற்காக, '' நீ அவள் சொல்வதைக் கேட்காதே, என்கிட்டே வா, நான் சாக்லேட் வாங்கித் தருகிறேன்'' என்று லஞ்சம் கொடுத்து இளம் மனங்களைக் கெடுக்கும் குணமும் உண்டு.

''நீயே சொல்லு, நான் என்ன பண்ணுவேன், என் தலையெழுத்தைப் பார்த்தாயா?'' என்று பரிதாபத்தால் மகனை வளைத்து, மறுபக்கக் கதையைக் கேட்கவே விடாமல் செய்பவர்களைக்கூட நான் பார்த்திருக்கிறேன்.

மற்றும் சிலருக்குக் குழந்தைகளைக் கண்டிப்பதில்கூட போட்டி மனப்பான்மை வந்துவிடுவதையும் பலரும் கண்டிருக்கலாம். அம்மா அல்லது அப்பா - யாராவது ஒருவர் பையனைக் கண்டிக்கும்போது, ''ஏன் அவனைத் திட்டுகிறாய்? பாவம், குழந்தை! பேசாமல் விட்டு விடு!'' என்று அப்போதுதான் ரொம்ப அக்கறை இருக்கிற மாதிரி மற்றொருவர் பரிந்து கொண்டு வந்து விடுவார். ஒவ்வொரு முறையும் தன்னை யார் சப்போர்ட் செய்து பேசுகிறார்களோ அவர்களுடன் ஒண்டிக் கொண்டு பையன் திருந்தாமலே போய் விடுவான்.

'குழந்தையும் தெய்வமும்' படத்தில் (1965)



இந்த மாதிரி பெற்றோருக்குப் பிறந்து, இப்படிப்பட்ட சூழ்நிலை களில் வளரும் குழந்தைகள் எதிர்காலம் நல்ல முறையில் அமைவது என்பது மிகவும் கஷ்டமானது.

பிறந்ததிலிருந்து பார்த்து வரும் பெற்றோர், சகோதர சகோதரியர், உறவினர்கள் ஆகியவர்களின் பழக்க வழக்கங்களையே பெரும்பாலும் ஒரு குழந்தை பின்பற்றுகிறது. முக்கியமாய் பெற்றோரின் செயல்களை நன்றாகக் கவனித்து அதே போன்று தானும் செய்ய முயற்சிக்கிறது. சிறு குழந்தைகள் ''அப்பா - அம்மா'' விளையாட்டை மிக விரும்பி விளையாடுவதைக் கவனித்திருக்கிறீர்களா? அந்த விளையாட்டின் இடையே அவை பேசிக் கொள்வது, தங்கள் வீட்டில் பெற்றோர் பேசிக் கேட்ட பேச்சுக்களாகவே இருக்கும்!

நாம் எதைச் செய்தாலும் அதை ஊன்றிக் கவனித்து எதிரொலிக்கிற குழந்தைகள் வீட்டில் இருக்கும்போது, நமது செய்கைகள் நல்ல பண்பை, பணிவை, அன்பை, சிறந்த மனிதத்தன்மையுள்ள குணங்களை வெளிக்காட்டுகிற விதத்தில் அமைவது அவசியம். பொதுவாகவே குழந்தைகளை வாடி, போடி, வாடா, டேய் என்றும் 'சனியனே' 'கடங்காரா' என்று திட்டியவாறு கூப்பிடுவதும் பல வீடுகளில் நடக்கின்றது. நம்மையே கவனித்து வளரும் குழந்தைகளும் இப்படிப்பட்ட மரியாதைக்குறைவான பேச்சுக்களைத்தான் பேசத் துவங்கும்.

திருநெல்வேலி, கோவை மாவட்ட மக்களும், இலங்கை வாழ் தமிழ் மக்களும், குழந்தைகளைக் கூட 'வாங்க' 'போங்க' 'உட்காருங்க தம்பி' 'சாப்பிடும்மா பாப்பா' என்றும் பண்போடு அழைத்துப் பேசுவதை பலர் அறிந்திருக்கலாம். பெரியவர்களின் இந்த நல்ல வழக்கத்தினால் அங்கெல்லாம் குழந்தைகள்கூட பேசத் துவங்கும் சிறு பிராயத்திலிருந்தே மரியாதையோடு பேசச் கற்கின்றன. அதோடு, பெயரைக் குறிப்பிட்டு அழைப்பதும் மிக நல்ல பண்புதான். இவற்றைக் கற்பிக்க வேண்டிய பொறுப்பு பெரியவர்களான நம்மிடம்தான் உள்ளது.

சின்னஞ்சிறுவர்கள் தவறு செய்யாமல் பாதுகாக்க வேண்டிய பொறுப்பு எப்படி நம்மிடம் இருக்கிறதோ, அப்படித்தான் அவர்கள் தவறு செய்யும்போது கண்டிக்கும் உரிமையும் உள்ளது. இந்த உரிமையை நாம் தயக்கமின்றி உபயோகிக்க வேண்டுமானால் முதலில் நம்மிடம் குறையின்றி இயன்றவரை கவனமாக இருக்க வேண்டும்.

பலரும் அறிந்த புத்தபிட்சுவின் கதை ஒன்று இருக்கிறது. அவரிடம் ஒரு தாய் தன் மகனை அழைத்து வந்து, ''என் மகன் இனிப்பு



குழந்தைகளுடன் நேரு

அளவுக்கு அதிகமாகத் தின்கிறான். தாங்கள் தான் அவனுக்கு புத்தி சொல்லித் திருத்த வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டாள். ''ஏன், இனிப்பு தின்றால் என்ன தவறு?'' என்று கேட்டார் புத்தபிட்சு. அதற்கு தாய் சொன்னாள், ''கொஞ்சமாகத் தின்றால் ஒரு தவறும் இல்லை ஐயா. ஆனால் இவன் மிக அதிகமாகத் தின்கிறானே. எதுவுமே அளவுக்கு அதிகமானால் தவறுதானே! அதோடு, இனிப்பு நிறைய தின்றால் உடல் நலத்துக்கும் கெடுதல் என்பது தாங்கள் அறியாததா!''என்றாள். சிறிது யோசித்த புத்தபிட்சு அவர்களைப் பிறகு வந்து சந்திக்கும்படி கூறினார்.

சில நாட்கள் கழித்து அவர்கள் மீண்டும் வந்ததும் அந்தச் சிறுவனை அழைத்து, ''அதிகமாக இனிப்பு தின்னாதே சிறுவனே! எதுவுமே அளவுக்கதிகமானால் நல்லதல்ல. இனிப்பு நிறைய தின்றால் உடல்நலத்துக்குக் கெடுதல்'' என்று அந்தத் தாய் சொன்ன வார்த்தைகளையே ஒப்பித்து அறிவுரை சொன்னார் புத்தபிட்சு. இதைக்கேட்ட அந்தத் தாய்க்கு வருத்தம் ஏற்பட்டது. ''நான் சொன்னதையே திருப்பிச் சொல்ல இத்தனை நாட்கள் எதற்கு? சென்ற முறை நாங்கள் வந்தபோது இதைச் சொல்லியிருக்கலாமே ஐயா!'' என்றாள். புத்தபிட்சு புன்சிரிப்போடு சொன்னார், ''சொல்லியிருக்கலாம் அம்மா. ஆனால் அப்போது நானே நிறைய இனிப்பு சாப்பிட்டு வந்தேன். எனவே, முதலில் அந்தப் பழக்கத்தை நான் நிறுத்தி விட்டுப் பிறகுதானே இவனுக்கு அறிவுரை சொல்ல முடியும்!'' என்று விளக்கினார்.

அறிவுரை சொல்வது மிக எளிது; ஆனால் அப்படிச் சொல்வதற்கு முன் அதைச் சொல்லும் தகுதி நமக்கு இருக்கிறதா என்பதை உணர வேண்டும் என்பதையே இக்கதை புரிய வைக்கிறது. குழந்தைகளைப்

பெற்று வளர்க்கும் பெற்றோர் அனைவரும் மிகக் கவனமாக வளர்த்துக் கொள்ள வேண்டிய தகுதி இது.

வரும் தலைமுறையை சரியான பாதையில் நடத்திச் செல்லும் மிகப்பெரிய பொறுப்பு நமக்கு இருப்பதை எல்லா பெரியவர்களும் உணர வேண்டுமே என்று நான் ஆதங்கப்படுகிறேன். இந்தப் பொறுப்பை நிறைவேற்ற பொறுமையும், அக்கறையும், அன்பும், பண்பும் தேவை. முக்கியமாய், சிறிய அளவிலான தியாகங்கள் தேவை. குழந்தைகள் படிக்கிறார்கள் என்றால் நாமும் டி.வி. பார்ப்பது, சினிமாவுக்குப் போவது ஆகியவற்றைக் குறைக்க வேண்டும். நாம் உட்கார்ந்து இவற்றை ரசித்துப் பார்த்துவிட்டு குழந்தைகளிடம் மட்டும் ''போய்ப்படி, இங்கே வராதே'' என்றால் அதைக் கேட்கும் குணம் அவர்களிடம் வளருமா? ஒரு நிர்ப்பந்தத்துக்காக புத்தகத்தில் கண்ணை வைத்தால்கூட, கவனம் அதில் இருக்குமா? ஹாலில் ஓடிக்கொண்டிருக்கும் தொலைக்காட்சி நிகழ்ச்சியில்தான் இருக்கும்.

படபடவென்று பேசியபடி நாம் மகனிடம், ''நிதானமாகப் பேசு'' என்றால், அதன் அர்த்தம் அவனுக்குப் புரியுமா? நம் விரலில் சிகரெட் புகையும்போது பையனிடம் போய், ''புகை பிடிப்பது தப்புடா'' என்றால் அவன் நம்மைக் கேவலமாகப் பார்க்க மாட்டானா? குடும்பத்தினர் அனாவசியமாக செலவுகளைச் செய்து பொருட்களை வாங்கிவிட்டு குழந்தை விளையாட்டு பொம்மை கேட்கும்போது மட்டும் சிக்கனத்தைப் பற்றி உபதேசித்தால் குழந்தைக்குப் புரியுமா?

யாரிடமிருந்து ஏதைப் பெற்றாலும், 'தேங்க்யூ' 'நன்றி' என்று சொல்வதும் காலையில் எழுந்ததும் 'குட்மார்னிங்' அல்லது 'வணக்கம்' என்று சொல்வதும், தப்பு செய்தால் 'ஸாரி' 'மன்னிச்சிடுங்க' என்று சொல்வதும் நல்ல பண்புக்கு அடையாளம். இவற்றைக் குழந்தைகளுக்குக் கற்றுக் கொடுப்பது, நாமே சொல்லிக் காண்பிக்கும் போதுதான் நல்ல பலனைத் தரும்.

நாம் சொல்லும் விஷயங்களை நாமே பின்பற்றுகிறோமா என்பதை வைத்துத்தான் குழந்தைகளும் கடைபிடிக்கத் துவங்குகின்றன.

நம்மைப் பார்த்து கற்றுக் கொள்வதைத் தவிர நாமே சில தவறான கருத்துக்களை குழந்தைகளுக்குச் சொல்லிக் கொடுக்க வேறு செய்கிறோம்.

எங்கோ காட்ட நினைக்கிற ஆனால், காட்ட முடியாத கோபம் ஆத்திரம் போன்ற உணர்வுகளை குழந்தைகளின் மீது காட்டிவிடும்

குணம் நிறைய பெற்றோருக்கு இருக்கிறது. மன்னிக்கக்கூடிய சாதாரண தவறு செய்தால்கூட இந்தக் கட்டுப்படுத்த முடியாத கோபத்தைக் காட்டி, மூர்க்கத்தனமாக குழந்தைகளை அடித்து விடுவது ஒருசிலருக்குப் பழக்கமாகவே போய் விடுகிறது. நம் பலத்தைப் பிரயோகித்து அந்தச் சின்னக் குழந்தையைத் தாக்குவது எந்த விதத்திலும் நியாயமில்லை.

அதேபோல், ஒருவருக்கொருவர் அடிப்படை நம்பிக்கை இல்லாத கணவன் மனைவி, தங்களுக்குள் இருக்க வேண்டிய பேச்சுக்களை வெளிப்படையாக்கி குழந்தையின் மனதைக் கெடுப்பதும் எனக்குத் தவறாகப் படுகிறது.

''நான் டூர் போயிருந்தபோது வீட்டுக்கு யார் யாரெல்லாம் வந்தார்கள்?'' என்று மகனிடம் ரகசியமாக விசாரிப்பதும், ''உங்க மாமா வந்தானா? தெரியுமே, நான் ஊரில் இல்லையென்றால் தவறாமல் வந்து விடுவானே!'' என்று தரக்குறைவாக விமர்சிப்பதும்,

''அப்பாவோட மார்க்கெட்டுக்குப் போனியே, அங்கே அப்பாகூட யாரெல்லாம் பேசினாங்க?'' என்று வேவு பார்ப்பதும், ''அப்பா ஆபீஸ் ஸ்டெனோவும் அங்க வந்திருந்தாங்களா? ரெண்டு பேரும் சிரிச்சா பேசினாங்க?'' என்று மேலும் மேலும் துருவிப் பார்ப்பதும் ஆரோக்கியமான அபிப்ராயத்தையா குழந்தைக்கு உண்டாக்கும்?

குழந்தைகள் அடிப்படையில் வெகுளிகள். அந்த வெகுளித் தனத்தை நல்ல விதமாகப் பயன்படுத்தி சிறந்த ஒழுக்கத்தையும் வாழ்வு முறையையும் கற்றுக் கொடுக்க வேண்டுமே தவிர, தவறான எண்ணங்களையும் கருத்துக்களையும் அந்த மனதில் திணித்து அவர்களை ஒழுக்கக் கேட்டுக்குத் தூண்டிவிடக் கூடாது. வெகுளித்தனமான இளம் மனதில் நாமே கல்மிஷத்தை நுழைத்து விடுவது மிக மிகத் தவறு என்று நான் அடித்துக் கூறுவேன்.

வெகுளித்தனத்தைப் போலவே குழந்தைகளின் புத்திசாலித்தனமும் தவறாக வளர்க்கப்பட்டு விடக் கூடாது என்று கருதுகிறேன்.

வேகமாகப் போகும் காரை தடக்கென்று நிறுத்தி பாதை மாற்றுவது மிகக் கடினம், ஆபத்தானதும்கூட. அதேபோல், கண்ணிமைக்கும் நேரத்தில் கற்றுக் கொண்டு விடும் வேகம் கொண்ட குழந்தைகளையும் நல்ல பாதையில்தான் அழைத்துச் செல்ல வேண்டும். பாதை தவறிப்போனால் பாதியில் மாற்றுவது விபரீதத்தை ஏற்படுத்தி விடலாம்.

# 15. வழிகாட்டிகள்



கெட்ட பழக்கங்கள் என்று உலகம் ஒதுக்கி வைத்திருப்பவை; செய்யத்தகாதவை என்று அரசும் சட்டமும் தடை விதித்திருப்பவை; செய்வது மனிதப் பண்பல்ல என்று சமுதாயம் நிராகரித்திருப்பவை - ஆகியவற்றை எந்தவொரு மனிதனுமே செய்யாமல் இருப்பதே உத்தமம். அப்படியிருக்க முடியாமல் எப்படியோ ஒரு தீய பழக்கத்துக்குப் பழகிவிட்டாலோ, அடிமையாகிவிட்டாலோ - 'அந்தப் பழக்கத்தைப் பெரியவர்கள் முன் செய்வது மரியாதை இல்லை' என்பார்கள்.

இதைவிட முக்கியமாக நான் நினைப்பது. சிறியவர்கள் முன்னாலும் இவற்றில் ஈடுபடுவது கூடாது என்பதுதான்!

குழந்தைகளின் வளர்ப்பில் விசேஷ கவனம் வேண்டும் என்று நான் மீண்டும் மீண்டும் வலியுறுத்திக் கூறுவதற்குக் காரணம், அன்பு, மனிதநேயம், கரிசனம் ஆகியவற்றுடன் நல்ல பண்பும் பண்பாடும் கொண்ட ஆரோக்கியமான சிந்தனைகள் அவர்களின் மனங்களில் உருவாக வேண்டும் என்கிற எதிர்பார்ப்புதான்.

நல்ல பாதையைக் காட்டுவது ஒருபுறமிருக்க, தேவையில்லாத கெட்ட பழக்கங்களை குழந்தைகளுக்கு அறிமுகப்படுத்தாமல் இருப்பதை மிக முக்கியமான விஷயமாக நினைக்கிறேன்.

நான் சிறுவனாக இருந்தபோது என் உறவினர் ஒருவர் சிகரெட் குடிப்பதைப் பார்த்து அவரைப்போல நாமும் புகைக்க வேண்டும் என்ற ஆசை ஒருமுறை ஏற்பட்டது. மிகச் சின்ன வயதிலேயே கூட, சிகரெட் போன்ற தோற்றம் கொண்ட மிட்டாய் ஒன்றை வாங்கி ஸ்டைலாக வாயில் வைத்து சுவைக்கும் பழக்கம் உண்டாயிற்று. நல்லவேளையாக, கொஞ்சம். பெரியவனானதும் உண்மையான சிகரெட்டை வாயில்

வைத்துப் புகைத்துப் பார்த்தபோது அந்த வாசனை எனக்கு ஏனோ பிடிக்காமல் போயிற்று! ஒருவேளை பிடித்திருந்தால் புகைக்கும் வழக்கம் என்னை விடாமல் பற்றியிருக்கும்!

எனக்கு ஒரு நண்பர். நல்லவர்தான். என்றாலும் எப்படியோ குடிக்கும் பழக்கத்துக்கு அடிமையாகி விட்டார். வீட்டில் நண்பர்களையும் உடன் வைத்துக் கொண்டு பகிரங்கமாகக் குடிப்பார். வேடிக்கை பார்த்தவாறு நிற்கும் மகனிடம், தன் கிளாஸில் மிஞ்சிய பானத்தைக் கொடுத்து விளையாட்டாகக் குடிக்கச் சொல்வார். என்னைத் திகைக்க வைக்கும் அவரது செயல்!

பொறுக்க முடியாமல், ''என்ன இப்படிச் செய்கிறீர்கள்? பையனுக்கும் உங்கள் பழக்கம் வந்து விட்டதா?'' என்று நான் கேட்டபோது, ''நான் செய்வதனால் ஒன்றும் வந்துவிடாது. எங்கள் பரம்பரையே இப்படித்தான். என் தாத்தா, தந்தை, இப்போது நான் - எல்லாருக்குமே குடிக்கும் பழக்கம் உண்டு. நாளை என் பையனும் குடிக்கத்தான் போகிறான். இதில் நானென்ன சொல்லித் தருவது!'' என்று அலட்சியமாகச் சொன்னார். ஆனால் நான் விடவில்லை. ''நாளை அவன் பெரியவனானதும் அவனுக்கே இதில் நாட்டமிருந்தால் குடித்துவிட்டுப் போகட்டும், அதற்காக இப்போதே பழக்கி விடாதீர்கள்'' என்று பலமுறை நான் சொன்னதும் தன் செயலைக் கொஞ்சம் மாற்றிக் கொண்டார்.

ஆனால், அவரது மகன் வளர்ந்து இளைஞனாக ஆவதற்குள் குடிப்பழக்கம் அவனுக்குள் வளர்ந்து விட்டது. உடல்நிலை கெட்டு, அந்தப் பழக்கத்தின் தீவிரம் என் நண்பருக்குப் புரிந்தபோது அவரால் ஒன்றும் செய்ய முடியவில்லை. சமீபத்தில் அந்த இளைஞன், மீள முடியாத குடி நோயினால் இறந்தே போய் விட்டான்.

அவனது இறுதி ஊர்வலத்தின்போது நான் வருத்தத்துடன் நண்பரிடம் கேட்டேன், ''இத்தனை முற்றிப்போய் ஆளையே மூழ்கடிக்கும் அளவுக்கு அவனை ஏன் குடிக்க விட்டீர்கள்? நீங்கள் கண்டித்திருக்கக் கூடாதா?'' என்று.

நண்பர் சொன்னார், ''கண்டிக்கத்தான் விரும்பினேன். ஆனால் அவனைக் கண்டிக்க எனக்கு என்ன தகுதி இருக்கிறது? என்னால் ஏதும் செய்ய முடியவில்லையே!'' என்று வேதனைப்பட்டார்.

இளம் குருத்து ஒன்று சரியான வழிகாட்டுதல் இன்றி கருகிப்போய் விட்டதை நினைத்து நான் மிகவும் வருந்தினேன்.



'தியாகு' படத்தில் திலீப், ரகுவரன்(1990)

பெற்றோரின் குடிப்பழக்கத்தினால் தனக்கும் குடிக்கும் ஆசை வளர்ந்து, பள்ளிக்கூட கலை நிகழ்ச்சியில் குடித்துவிட்டு மேடையில் தாறுமாறாக நடந்து கொண்ட பதினாறு வயதுப் பையன் ஒருவனையும் நான் பார்த்திருக்கிறேன்! எப்படிப்பட்ட அவமானம் அவனுக்கும் அவனைப் பெற்றவர்களுக்கும்! ஆனால் அவர்கள் அதை உணர்ந்தார்களா என்று தெரியவில்லை.

இந்தப் பையனைப் பள்ளிலிருந்தே நீக்கி விட்டார்கள். அவனது எதிர்காலம் குறித்து கவலைப்படுவதைத் தவிர வேறு என்ன நான் செய்வது!

இதேபோன்ற ஒரு வருத்தத்துக்கும் ஆத்திரத்துக்கும் உரிய மற்றொரு சம்பவத்தைப் பற்றி உங்களிடம் சொல்ல விரும்புகிறேன்.

கிட்டத்தட்ட பதினைந்து வருடங்களுக்கு முன்பு நடந்தது. சென்னையில் மிகப் பெரிய பணக்காரக் குடும்பங்களுள் அவர்களுடையதும் ஒன்று. ஏராளமான சொத்தும், வசதிகளும் கொண்ட அந்தத் தம்பதிக்கு ஒரே மகன். பதினான்கு வயதுச் சிறுவன். திடீரென்று அவன் உடல்நலம் சரியாக இல்லை என்று டாக்டரிடம் அழைத்து வந்தார்கள். அவனைப் பரிசோதித்துப் பார்த்த டாக்டருக்கு ஒரே அதிர்ச்சி!

அந்தப் பதினான்கு வயதுச் சிறுவனுக்கு வி.டி. எனப்படும் பால்வினை நோய்! நான் ஏதோ பொய் சொல்வதாகவோ, இருப்பதை மிகைப்படுத்திச் சொல்வதாகவோ உங்களுக்குத் தோன்றலாம். ஆனால் உண்மை இதுதான்.

பையனைத் தனிமையில் விசாரித்தபோது வெளிவந்த விவரங்கள் அவன் மீது கோபத்துக்குப் பதில் ஒருவித பரிதாபத்தையே உண்டாக்கின. அவர்கள் வீட்டில், வியாபாரத் தொடர்பாகவோ அல்லாது வெறும் கேளிக்கைக்காகவோ தினமும் மாலையில் பார்ட்டிகள் நடக்கும். மதுபானங்களும், உயர்ந்த ரக உணவும், ஆட்டமும் பாட்டமும் எல்லாம் உண்டு. எவரும் எவருடனும் வரைமுறையின்றிப் பழகுவதை இவன் பார்க்க நேரிடும். வளரும் பருவத்தில், சிறுவன் என்ற நிலையைத் தாண்டிக் கொண்டிருக்கும் இரண்டும்கெட்டான் பருவத்தில், அந்தப் பையனின் மனம் கெட்டுப் போனதற்கு இந்த ஒரு சூழ்நிலை போதாதா!

இதோடு மட்டும் நிற்கவில்லை அவன் சொன்ன விவரங்கள். அம்மா, அப்பா இருவருக்குமே இப்படிப்பட்ட உல்லாச விஷயங்களில் மட்டுமே ஈடுபாடு இருந்ததால், மகனைப் பற்றிய அக்கறை சிறிதும் காட்டவில்லை.

அவன் என்ன படிக்கிறான், பள்ளிக்கு ஒழுங்காகப் போகிறானா, நல்ல நண்பர்களுடன் பழகுகிறானா, ஒழுக்கத்துடன் வளர்ந்து வருகிறானா, அவனது தேவைகளைக் கவனிக்க எவராவது வீட்டில் இருக்கிறார்களா என்றெல்லாம் கவலைப்பட இருவருக்குமே 'நேரம் இல்லை'! அவனைப் பார்க்கும்போதும், வீட்டில் பார்ட்டிகள் நடக்கும்போது அவனை சமாளிக்கவும் தினம் ஏராளமான பணம் பாக்கெட் மணியாகக் கொடுத்து விடுவார்கள். ஏராளம் என்றால் நாம் கற்பனை கூட பண்ணிப் பார்க்க முடியாத அளவுக்கு இருக்கும்! பள்ளியில் படிக்கும் சிறுவனுக்கு இத்தனை பணம் எதற்கு? அதைச் செலவு செய்யும் விதம் கூட அவன் அறிந்திருக்க மாட்டானே!

ஆனால் அந்த விவரத்தை அவனது கார் டிரைவர் அறிந்திருந்தான். மிகுந்த பணத்தேவை இருந்த அந்த டிரைவருக்கு, பையனைத் தவறான வழிகளில் பழக்கப்படுத்தி பணத்தைப் பறித்துக் கொள்ள அதிககாலம் ஆகவில்லை. சிறுவனுக்கு வரக்கூடாத நோய் வரக் காரணம் இப்போது புரிகிறதா?

**'ராஜா சின்ன ரோஜா' படத்தில் ரஜினிகாந்த், ராகவி (1989)**





7


'ராஜா சின்ன ரோஜா' படத்தில் குழந்தைகளுடன் ரஜினிகாந்த், கவுதமி (1989)

''அம்மா அப்பாவுக்கு என்னோடு பேசக்கூட நேரம் இல்லை. என்னைக் கவனிக்க இந்த வீட்டில் யாருமே இல்லை. அதனால் எனக்குப் பிடித்ததை என் விருப்பப்படி நான் செய்தேன். ஆனால் இப்படி ஒரு விளைவு ஏற்படும் என்று எனக்குத் தெரியாது'' என்ற சிறுவனின் வார்த்தைகளில் நியாயம் இருப்பதாகவே எனக்குப்படுகிறது.

அன்புதான் குழந்தைகளின் முதல் தேவை, பணமல்ல என்பதை உணர்ந்துவிட்டால், ஏழையோ பணக்காரரோ - எவரும் நல்ல குழந்தைகளை உருவாக்கிவிடலாம். நாம் பெற்ற செல்வங்கள் எப்படி வளருகிறார்கள் என்பதை ஊன்றிக் கவனித்து, கெட்டதைக் களைந்து நல்லதை வளர்த்துவிட வேண்டிய கடமை பெற்றோர்களுக்குத்தான் உண்டு.

குழந்தைகளின் முதல் ''ஹீரோ' பெற்றோர்கள்தான்! அடுத்தது, வீட்டிலுள்ள மற்ற பெரியவர்களான மாமா, அத்தை, சித்தி, தாத்தா, பாட்டி போன்றவர்கள். வீட்டை விட்டு வெளியே உள்ள உலகத்தில் முதலில் அவர்களைக் கவருவது பள்ளிக்கூட ஆசிரியர்களே. ஒவ்வொரு குழந்தையின் வளர்ச்சிக்குப் பின்னாலும் இவர்கள் அத்தனை பேர்களும் எற்படுத்திய பாதிப்புக்களின் எதிரொலி நிச்சயம் உண்டு.

இவர்களைத் தவிர, நண்பர்களுக்கும் சுற்றியுள்ள மற்றவர்களுக்கும் கூட குழந்தைகளின் வளர்ப்பில் பங்குண்டு. குறிப்பாக, திரைப்படங்களுக்கும் பொறுப்பு உண்டு என்பதை நான் உணர்கிறேன். இயன்றால் நல்லதைச் சொல்லித் தர வேண்டும். இல்லையென்றால் விஷ விதைகளை இளம் மனங்களில் தூவாமல் இருக்க வேண்டும்.

பிரபல தெலுங்கு நடிகர் ஒருவர் ஒரு படத்தில் ரிக்ஷா ஓட்டுபவராக நடிக்கும்போது, பீடியை வாயில் தொத்த வைத்துக் கொண்டு எந்நேரமும் அதை உதட்டில் இடது - வலதாக நாக்கால் நகர்த்தி நகர்த்திப் பேசுவார். இதைப் பார்த்த ரசிகப் பெருமக்கள், பீடி பிடிக்கும் வழக்கம் இல்லாவிட்டாலும்கூட எரியாத பீடியை அப்படி உதட்டில் வைப்பதை ஒரு பழக்கமாக ஆக்கிக் கொண்டார்களாம். இதுபோன்ற பழக்கங்கள் திரைப்படங்களிலிருந்து எளிதில் மக்கள் மனதில் பதிந்து விடுகின்றன. ரசிகர்கள் இவற்றை ரசிக்கிறார்கள், விரும்புகிறார்கள் என்று பல காரணங்கள் இதற்குச் சொல்லப்படுகின்றன.

ஒன்றை நினைவில் கொள்ள வேண்டும். இந்தியா முழுவதும் சிகரெட், மது பழக்கங்களைப் படங்களில் நடித்துக்கூட காட்டாத நடிகர் புரட்சித் தலைவர் எம்.ஜி.ஆர். அவர்கள். தாய்ப்பாசம், அன்பு, கடமை, நேர்மை, உழைப்பு என்று நல்ல பல விஷயங்களுக்கு முக்கியத்துவம் கொடுத்துதான் அவர் படங்கள் அமைந்திருந்தன. தவறிப்போய்க்கூட புகைப்பதாகவோ, குடிப்பதாகவோ காட்சிகள் இருக்காது.

அவரது ஒவ்வொரு படத்திலும் நல்ல வாழ்வு முறையைக் கடைப்பிடிக்கத் தூண்டும் விதமாக ஒரு அறிவுரைப் பாடல் கட்டாயம் இடம் பெற்றிருக்கும்; வெறும் அறிவுரையாக அல்ல, பாமர மக்களும் உடனே புரிந்து கொண்டு செயல்படுத்துகிற மாதிரி எளிய நடையில்,

மணிவிழாவில் பேரக் குழந்தைகளுடன் ஏவி.எம். தம்பதியர்



சாதாரண வார்த்தைகளைக் கொண்ட பாடல் - சர்க்கரைப் பூச்சு கொண்ட மாத்திரை போல!

அவருக்கில்லாத வரவேற்பா! அவரை ரசிக்காத குழந்தைகளா! அந்த அளவுக்குப் பேரும், புகழும், ரசிகர்களும் கொண்டிருந்த பொறுப்பான நடிகர் இந்தியாவிலேயே அவர் ஒருவராகத்தான் இருக்க முடியும்! இந்தப் பேரையும் புகழையும் அவர் ஒரே நாளில் சம்பாதித்து விடவில்லை. பலகாலம் உழைத்து அவர் உருவாக்கின 'இமேஜ்' இது. பிற்காலத்தில் ஒரு மாநிலத்தை ஆளப்போகிறோம் என்ற எதிர்பார்ப்பில் வரவழைத்துக் கொண்ட 'இமேஜ்' அல்ல. தனிமனித ஒழுக்கமும் சிறந்த வாழ்க்கையும்தான் படம் பார்க்கும் மனதில் பதிய வேண்டும் என்ற உயர்ந்த கருத்தில் மிகக் கவனமாக வளர்த்துக் கொண்ட ஒரு சிறந்த குணம்.

அரச மரத்தைச் சுற்றிய உடனே அடிவயிற்றைத் தொட்டுப் பார்க்கும் சமாசாரமாக, இரவோடு இரவாக நிகழ்ந்து விடுகிற அற்புதமும் இல்லை இது. தான் திரைத்துறையில் பிள்ளையார் சுழி போட்ட காலம் தொட்டு சற்றும் பிறழாமல் புரட்சித் தலைவர் சேர்த்து வைத்த அரிய சொத்து இந்தப் பேரும் புகழும்.

நல்ல சந்ததிகள், வீட்டில் மட்டுமல்ல நாடு முழுவதிலும் உருவாக ஒவ்வொரு வீடும், குடும்பமும், நாடும், சமுதாயமும் பொறுப்புடன் செயல்பட்டுப் பின்பற்ற வேண்டிய ஒன்று - இந்த வழிகாட்டுதல்.

**M.S..குகன், M.பாலசுப்பிரமணியன், எம்.ஜி.ஆருடன்**



# 16. தொ(ல்)லை பேசி?



தொலைபேசியின் பயனைப் பற்றி எல்லாருக்கும் நன்றாகத் தெரியும். இன்றைய வாழ்க்கை முறையில் அது எத்தனை அவசியமான கருவி என்பதும் புரியும். அது இல்லாமல், கை கால்கள் கூட இயங்காமல் இருக்கிற மாதிரி ஒரு பிரமையே நமக்கு உண்டு.

எத்தனை தூரம் நேரத்தை மிச்சப்படுத்தி சிரமத்தைத் தவிர்க்க டெலிபோன் உதவுகிறது என்பதை அதை உபயோகித்தவர்களால் நன்றாக உணர முடியும். ஆனால், இத்தனை பயனுள்ள ஒரு கருவியைப் போய் 'தொல்லைபேசி' என்று அழைக்கலாமா?

எந்தப் பொருளையுமே சரிவரப் பயன்படுத்தினால் அது நல்ல பலனைக் கொடுக்கும். முறையின்றி உபயோகித்தால் அதனால் தொல்லைதானே! தொலைபேசியும் நேரம், காலம் தெரியாமல் மணியடித்துத் தொந்தரவு செய்தால் அது 'தொல்லைபேசி' என்பார் நண்பரும் லயோலா கல்லூரி தமிழ்த்துறைத் தலைவருமான திரு.ராஜகோபாலன்.

தொலைபேசியில் நிதானமாக எண்களை தவறு நேராமல் சுழற்றி, நம்பர் சரிதானா என்பதை உறுதிப்படுத்தியபின், வேண்டியவரை அழைத்துப் பேசுவது ஒரு நல்ல பண்பு. ஒரு சம்பவம் சொல்கிறேன்.

போன் செய்து லைன் கிடைத்தவுடன் படபடப்பாக, ''ராஜுவைக் கூப்பிடுங்கள்'' என்று கட்டளையிட்டு, ராஜு லைனில் வந்ததும், ''சாயங்காலம் ராஜேஸ்வரி தியேட்டருக்கு ஆறு மணிக்கு வந்துடு'' என்று அவசரமாகச் சொல்லி முடித்துவிட்டு படக்கென்று ரிஸீவரைக் கீழே வைத்தார் ஒருவர். மாலை சினிமா தியேட்டரில்

காத்திருந்துவிட்டு ஏமாற்றத்துடன்தான் திரும்பும்படி ஆயிற்று. மறுநாள் ராஜுவை நேரில் பார்த்துக் கோபத்தோடு சண்டை போட்டபோது, ராஜு ஆச்சர்யமாகக் கேட்டார், ''போன் செய்தாயா? எப்போது? நேற்று நான் ஆபிஸே போகவில்லையே!''

அப்படியானால் நேற்று போனில் வந்தவர் யார்?

யாரோ! ஏதோ ஒரு ராஜு! தியேட்டர் வாசலில் எத்தனை நேரம் காத்திருந்தாரோ! அல்லது, தன்னைப் போய் தியேட்டருக்கு வரச் சொன்னது யார் என்ற குழப்பத்தில் எவ்வளவு நேரத்தை வீணடித்தாரோ!

தான் எண்களைச் சுற்றியதும் கிடைத்தது அதே நம்பர்தானா, லைனில் வந்தவர் நண்பர் ராஜு தானா என்பதைக் கேட்டு சரிபார்க்காமல் மொட்டையாக 'ராஜு' என்றால், இதுபோன்ற சாதாரணப் பெயர் களில் பல இடங்களிலும் பலர் இருப்பது சகஜம்தானே!

இதே மாதிரி சிலருக்கு இன்னொரு வழக்கமும் உண்டு. போன் செய்துவிட்டு 'நான் கோபால் பேசுகிறேன்' என்று மொட்டையாகச் செய்தி தெரிவிப்பார்கள். எந்த கோபால், எந்த இடத்திலிருந்து எந்த நம்பரிலிருந்து பேசுகிறார் என்று ஒரு விவரமும் சொல்ல மாட்டார்கள். கண்டு பிடிப்பதற்குள் நமக்குக் குழப்பமே ஏற்பட்டு விடும். இதைவிட மோசம், நாம் இல்லாதபோது இப்படிப்பட்ட தலைகால் புரியாத அழைப்புகள் வந்ததாக வீட்டில் இருப்பவர்கள் தெரிவிப்பதுதான். நாம் எப்படி அவர்களை மறுபடி தொடர்பு கொண்டு பேசுவது. அவருடைய தொலைபேசி எண்ணைத் தெரிவித்திருந்தாலாவது நாம் கூப்பிட முடியும். எனவே சரியானபடி நம்மை அறிமுகப்படுத்திக் கொண்டு பேசுவது மிக முக்கியம். ஒருவேளை நாம் அழைத்த நபர் இல்லையென்றால், நம்மைப் பற்றிய விவரங்களுடன் நமது டெலிபோன் எண்ணையும் கொடுத்து 'அவர் வந்ததும் இந்தச் செய்தியைத் தெரிவித்து விடுங்கள்' என்று சொல்வதால் தேவையில்லாத குழப்பத்தையும் கால தாமதத்தையும் தவிர்க்கலாம்.

என் தந்தை ஒரு சமயம் டெலிபோன் ஆபரேட்டரிடம், ''வாசன் போட்டுக் கொடப்பா'' என்றார். டெலிபோன் கால் வந்ததும், ''என்ன மேனா! நான் வாசன் பேசறேன். சௌக்கியமா?'' என்று அமரர் எஸ்.எஸ். வாசன் அவர்கள் கேட்டார்.

ஒரு கணம் திகைத்துப் போன என் தந்தை அவரிடம், ''தவறு நடந்து விட்டது, எங்கள் ஸ்டூடியோ புரோக்கிராமில் இருக்கும் வாசன்



ஏவி.எம்முடன் S.S.வாசன்

என்பவரைக் கேட்டேன், அவருக்குப் பதிலாகத் தங்களை இணைத்து விட்டார் ஆபரேட்டர் என்று விளக்கினார்.

''அதனாலென்ன மேனா! நீங்களும் நானும் எப்பவும் பிசியாக இருக்கிறோம். ஒருவரை ஒருவர் தொந்தரவு செய்யக்கூடாது என்று நாம் இரண்டு பேருமே நினைக்கிறோம். ரொம்ப முக்கியமான காரணமில்லாமல் போன் பண்ணப் போவது இல்லை. உங்கள் ஆபரேட்டருக்குத்தான் தாங்க்ஸ் சொல்லணும்! இல்லைன்னா உங்ககூட பேச முடியப் போகிறதா!'' என்று சொல்லி தொடர்ந்து சிறிது நேரம் பேசினார் திரு.வாசன் அவர்கள். இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு தொலைபேசியில் பெயர் சொல்லும்போதுகூட விளக்கமாகத்தான் சொல்வார் தந்தை.

தொலைபேசியில் நம்மோடு பேசுபவரின் குரலை மட்டும்தான் நாம் கேட்க முடியும். உருவத்தைப் பார்க்க முடியாது. பேசும்போது அவர் எங்கு இருக்கிறார், யாருடன் இருக்கிறார், எப்படிப்பட்ட மனநிலையை அவர் முகம் பிரதிபலிக்கிறது என்பதையெல்லாம் உணர முடியாது.

அதனால் நம் பேச்சு மிக கவனமாக அமைய வேண்டும். வார்த்தைகளை மிகுந்த ஜாக்கிரதையாகத் தேர்ந்தெடுத்து, அளந்து பேச வேண்டும். நேரில் பேசுவது ஒரு திரைப்படமோ, நாடகமோ, நாட்டியமோ பார்க்கிற மாதிரி. வாய் வார்த்தைகள் இல்லாமல்

முகபாவத்தினாலேயே கூட சில செய்திகளைச் சொல்லி விட முடியும்; எதிரே இருப்பவர் பேசுவதைக் கேட்கும்போது நாம் சும்மா தலையசைத்துக் கொண்டிருந்தால்கூட போதும், நாம் உன்னிப்பாக் கேட்கிற எண்ணம் அவருக்கு வந்துவிடும்; 'ஆம்' 'இல்லை' போன்ற சொற்களின் அர்த்தங்களையும் வெறும் தலையசைப்பின் மூலமே வெளிப்படுத்தி விடலாம்.

நேரில் இத்தனை விபரங்களை நமக்கு உதவி செய்கின்றன. ஆனால் தொலைபேசியில்? இவற்றில் ஒன்றுக்கூட இல்லை. மறுமுனையில் இருப்பவர் அவ்வப்போது பதில் பேசிக் கொண்டு வந்தால்தான் அவர் இருக்கிறாரா, அல்லது ரிஸீவரை வைத்துவிட்டுப் போய்விட்டாரா என்பதுகூட தெரியவரும். சில சமயம் அவர் கோபத்தில் யாரிடமாவது கத்திக் கொண்டிருக்கக்கூடும்; ஏதோ கவலையில் ஆழ்ந்து போய் பேசவே பிடிக்காமல் இருக்கக்கூடும்; அசந்தர்ப்பமான ஒரு நேரத்தில் நாம் பண்ணியிருக்கக்கூடும்; பாதி சாப்பாட்டிலோ அல்லது அரைகுறையான தூக்கத்திலோ அவர் இருக்கும்போது நாம் கூப்பிட்டிருக்கக்கூடும்; வேறு ஏதாவது தர்மசங்கடத்தில் இருக்கும்போது நமது போன் வந்திருக்கலாம்.

எதுவாக இருந்தாலும் அவர்களின் மனநிலை என்ன என்பதை நாம் எப்படித் தெரிந்து கொள்வது? நேரம் காலம் தெரியாமல் எதையாவது பேசி அவரை வேதனைப்படுத்துவது நல்லதல்ல. நம்மைப் போலவே அவர்களுக்கும் உணர்ச்சிகள் இருக்கிறது, அதை நாம் புண் படுத்தி விடுகிறோமோ என்ற அச்சம் பேச்சில் சற்றே இருப்பது வார்த்தைகளின் தீவிரத்தைக் குறைக்க உதவும். பிரச்னைகளைப் பற்றியோ பேச வேண்டுமென்றால் இயன்றவரை நேரில் சென்று பேசுவதே உசிதம்.

தொலைபேசியில் அழைத்து உடனே திட்டிவிட வேண்டும் என்று ஒரு தீர்மானத்துடன் பேசுகிறவரைப் பற்றி நமக்குக் கவலையில்லை. ஆனால், சாதாரணமாகப் பேசுவதாக நினைத்துக் கொண்டு தன்னை யறியாமல் ஏதோ விதத்தில் மறுமுனையில் இருப்பவரைப் புண்படுத்தி விடுவ்து, அவர்களைத் துன்புறுத்துவதற்குச் சமமாக் எனக்குத் தோன்றுகிறது.

பொதுவாகவே தொலைபேசியை ஒரு தொடர்பு சாதனமாக மட்டும் உபயோகித்தால் நல்லது. முக்கியமான விஷயங்களுக்கும், அவசரமாகச் செய்தி அனுப்ப வேண்டியவைகளுக்கும் மட்டும் தொடர்பு கொண்டால் மற்ற வகைக் குழப்பங்களைத் தவிர்க்கலாம்.

அதோடு, பேச்சு மிகச் சுருக்கமாக அமைவதும் வீண் கால விரயத்தைத் தடுக்கும்.

கணவன், மனைவி, நண்பர்கள், வியாபாரிகள், பொழுது போகாதவர்கள் என்று பலதரப்பட்டவர்களும் டெலிபோனைச் சுருக்கமாக உபயோகிக்கக் கற்க வேண்டும். தேவையில்லாத விஷயங்களைத் தவிர்த்து அளவோடு பேசப் பழகினால் பிரச்னைகள் பல குறையும். ஏதோ அவசரத் தகவல் அளிப்பதற்காக நம்மைத் தொடர்பு கொள்ள முயன்று கொண்டிருப்பவர்கள், நீண்ட நெடிய வீண் அரட்டைகளினால் சோர்ந்து போய் தகவலை அளிக்காமலே இருந்து விடலாம். சரியான நேரத்தில் சில செய்திகளைச் சொல்லவில்லை என்றால் விளைவுகள் சில சமயங்களில் விபரீதமாகக் கூட இருந்து விடலாம்.

தொலைபேசியில் எஸ்.டி.டி.வசதி இருப்பது மிகுந்த சாதகமாக இருப்பதை யாரும் மறுக்க முடியாது. ஆனால், இப்படி உள்ளூரிலேயே வெகு நேரம் போனில் பழகி விட்டவர்களால், வெளியூர் போனை மட்டும் நினைவு வைத்துக் கொண்டு உடனே துண்டித்துக் கொள்ள முடியுமா? ஏதோ 2 அல்லது 3 நிமிடம் பேசிய மாதிரிதான் சில சமயம் தோன்றும். ஆனால் உண்மையில் 15 அல்லது 20 நிமிடங்கள்கூட பேசியிருப்போம்! பில் வரும்போதுதான் வயிற்றைக் கலக்கும்.

தொலைபேசியில் பேசும்போது ஜாக்கிரதையாகப் பேச வேண்டும். தெளிவாக அளந்து பேச வேண்டும் என்பவை ஒரு பக்கம் இருக்க, தேவை இருக்கும்போதுதான் தொலைபேசியை உபயோக்க வேண்டும் என்பதும் மிக முக்கியம்.

அனாவசிய விஷயங்களுக்காவும் சும்மா பொழுது போகாமல் யாருடனாவது பேசுவோமே என்றும் நினைத்து கைக்கு வந்த எண்களைச் சுற்றி எவரையாவது தொந்தரவு செய்வது, தேவையில்லாமல் கட்டணத்தை ஏற்றி நம் பாக்கெட்டைத்தான் பதம் பார்க்கும். இது போதாதென்று, நாம் அடிக்கடி தொந்தரவு செய்யும் நண்பர்களும்கூட. 'ஐயோ, அவனா! பேசிப்பேசி கழுத்தறுப்பானே! நான் இங்கே இல்லை, வெளியே போயிருப்பதாகச் சொல்லிவிடு!'' என்று குரலைக் கேட்டவுடன் ஒளிந்து கொண்டு விடுவதும் நடக்கலாம்.

குரலே கேட்காமல் டெலிபோனை உபயோகித்தவர் ஒருவரைப் பற்றி சொல்லட்டுமா?

ஸ்டுடியோ அதிபர், தயாரிப்பாளர், டைரக்டர், காமிராமேன் என்று பல தகுதிகளையும் திறமைகளையும் பெற்றவர் திரு.ஜித்தேன் பானர்ஜி. தொலைபேசியை இவர் மாதிரி லாபகரமாக

உபயோகித்தவரை நான் இதுவரை பார்த்ததும் கிடையாது, கேள்விப்பட்டதும் கிடையாது.

இவருக்கும் இவரது மருமகளுக்கும் இடையே ஒரு தனி டெலிபோன் மொழியே உண்டு. உதாரணமாக, வீட்டிலிருந்து கால் வர வேண்டும் என்றால் வீட்டு நம்பரை டயல் செய்து, எதுவும் பேசாமல் மூன்று முறை அடித்தவுடன் நிறுத்தி விடுவார். மீண்டும் இது மாதிரி மற்றொரு முறை. செய்தி புரிந்ததற்கு வீட்டிலிருந்து டெலிபோன் வரும். எப்படித் தெரியுமா?

இவர் செய்த மாதிரியே இரண்டு அல்லது மூன்று முறை அடித்து பிறகு நின்று விடும். பேச்சே இல்லாமல் ஒரு செய்திப் பரிமாற்றம் நிகழும். இரண்டு போன் கால்கள் மிச்சம்.

இதே போன்று, சாப்பிட வருகிறேன், சாப்பிட வரவில்லை. வண்டி அனுப்ப வேண்டாம், லேட்டாக ஆகும் என்று பல விஷயங்களுக்குக் குறிப்பிட்ட நேரத்தில் குறிப்பிட்ட தடவைகள் டெலிபோன் செய்து, பேசவே செய்யாமல் விஷயத்தைப் புரிய வைப்பதில் சமர்த்தர் திரு.பானர்ஜி.

இவர் அளவுக்குச் சிக்கனமாக இருக்க எல்லாருக்கும் சாத்தியப்படாது என்றாலும், ஓரளவுக்கு முறையாக உபயோகித்தால் தொலைபேசி நமக்குப் பயனை மட்டும் அளித்துவிட்டு தொல்லை தராமல் இருக்கும் என்றே எனக்குத் தோன்றுகிறது.



Jiten Bannarjee with the first silent camera

# 17. யாமறிந்த மொழிகளிலே...



சிந்தனையில் தூய்மை, பேச்சில் எளிமை, தெளிவு, என்கிற அழகிய பூக்களைக் கோர்க்கும் இணைப்பு நூலாய் விளங்குவது மொழி.

பிறந்ததிலிருந்து கேட்டு, பேசி, பழகி, படித்து வரும் மொழியில்தான் நம்மை அறியாமல் நமது சிந்தனைகூட அமைகிறது. இந்த சிந்தனையை வெளியே வெளிப்படுத்தும்போது இதே மொழி தேவைப்படுகிறது.

ஆனால், நம் உறவினர்கள், நண்பர்கள் என்ற சின்ன வட்டத்துக்குள் வேண்டுமானால் நாம் பழகிய, நம்முடன் ஒட்டிக் கொண்டுவிட்ட ஒரு மொழி உபயோகப்படலாம். வியாபாரம், வேலை, பிரயாணம் என்று நமது உலகம் விரியும்போது, மொழி அறிவும்கூட விரிவாக்கப்பட வேண்டியிருக்கிறது.

ஆங்கில ஆதிக்கத்தின் காரணமாக இந்தியாவுக்குள் ஆங்கிலம் ஒரு பொது மொழியாக நுழைந்து நிலைத்துவிட்டது. திரைப்படத்துறையைப் பொறுத்தவரை அதன் தொழில் நுட்பம் வளரவும், கலையம்சம் நாடு முழுவதும் பரவவும் இந்த அந்நிய மொழி பெரும் பங்காற்றியிருக்கிறது.

இந்தியத் திரைப்பட வரலாற்றின் முதல் பகுதியிலேயே, சென்னைக்கு வந்து படம் எடுத்த மற்ற மாநிலத்தவர் உண்டு; வெளி மாநிலம் சென்று படமாக்கிய நம்மவரும் உண்டு. பிற மொழிகளில் படித்துவரும், இயக்கிவரும், தயாரித்தவரும், மற்ற தொழில் நுட்பாளர்களும் ஏராளம் உண்டு. அத்தனை பேருக்கும் இணைப்பாக இருந்தது - முதலில் ஆங்கிலம், பிறகு இந்தி.

மொழி வேற்றுமை இல்லாமல் சமத்துவம் காணும் ஒரு பெரிய தொழில்துறை, எங்கள் திரைப்படத்துறைதான். இதன் எந்த ஒரு

பிரிவிலும் முற்றிலும் ஒரே மொழியைச் சேர்ந்தவர்களாக இருக்க வாய்ப்பில்லை என்றுதான் கூறவேண்டும். கவிஞர், பாடலை எழுதியவர் ஒரு மொழியைச் சார்ந்தவர்களாக இருந்தாலும், அவற்றை இசையமைப்பவர் வேறு மொழி பேசுபவராக இருக்கக்கூடும்.

இத்தனை வருட திரையுலக வாழ்வில், மொழித் தொடர்பாக நான் கற்றவை பல இருக்கின்றன. 'என் மானம் போகிறது!' என்பதை 'மை ஸ்கை கோயிங்' என்று ஆங்கிலம் தனக்குத் தெரியாது என்பதையே சாதகமாகக் கொண்டு நகைச்சுவை வழங்கிய திரு. எம்.எம்.ஏ சின்னப்பா தேவரின் சிரிப்பலைகளும் இதில் அடக்கம்!

ஆனால் முக்கியமான ஒரு பாடம் என் மனதில் பதிந்து போயிருக்கிறது. இரண்டு மூன்று பேர்களாக அமர்ந்து உரையாடும்போது பொதுவான மொழியில்தான் பேச வேண்டும், ஓரிருவருக்கு மட்டுமே தெரிந்த மொழியைத் தவிர்க்க வேண்டும் என்பதுதான் அந்த பாடம்.

ஒரு அனுபவம் கேளுங்கள். இந்திப்படங்களில் பிரபலமாகத் துவங்கியிருந்த ஒரு நடிகையை எங்கள் இந்தித் தயாரிப்பில் நடிக்க ஒப்பந்தம் செய்ய நானும் எங்கள் மானேஜர் சின்னான் என்பவரும் பம்பாய் சென்றிருந்தோம். நடிகையும், உடன் அவரது அண்ணனும் எங்களோடு பேசினார்கள். சம்பளமாகக் கேட்ட தொகை மிக அதிகமாக இருக்கவே சற்று பேரம் பேசினோம்.

''உங்கள் ஏ.வி.எம். நிறுவனத்தில் நடிப்பதைப் பெருமையாகக் கருதுவதால்தான் இப்படிக் குறைத்து ரேட் பேசினேன். இதுவே மற்ற

ஏவி.எம், எனது மூதத சகோதரர் M.குமரன் , சாண்டோ M.M.A சின்னப்பா தேவருடன்.





M.பாலசுப்பிரமணியன், சின்னான் மேனன், சிவாஜி கணேசன்.

கம்பெனியானால் இன்னும் அதிகம். இதற்கு மேல் குறைப்பதற்கில்லை'' என்று நடிகையின் அண்ணன் மறுத்துவிட்டார்.

என் அருகிலிருந்த திரு. சின்னானுக்குக் கோபம் வந்துவிட்டது. ''பெரிய ... இவ!'' என்று சடக்கென்று தமிழில் சொல்லி விட்டார். அவ்வளவுதான்!

''என்ன? என்ன சொன்னீர்கள்? 'பெரிய' என்றால் எனக்கு அர்த்தம் புரியும். அடுத்த வார்த்தை என்ன?'' என்று கேட்டு என்னைத் துளைத்தெடுத்து விட்டார் அந்த அண்ணன்காரர்! எதையெதையோ சொல்லி நான் சமாளிக்கப் பார்த்தும் விடாமல் அந்த வார்த்தை ஒன்றையே கெட்டியாகப் பிடித்துக் கொண்டார். பூசி மெழுகி அவரிடமிருந்து மீண்டு வருவதற்குள் எனக்குப் போதும் போதுமென்றாகி விட்டது!

வியாபார விவரங்களை எங்களுக்குள் விவாதித்து, அதிகம் வெளியே கேட்காமல் மெதுவாகப் பேசுவதில் தவறில்லை. 'இது அதிகமா? பரவாயில்லையா? நமக்குக் கட்டுப்படியாகுமா?' என்ற சாதாரண வார்த்தைகளை உபயோகித்துப் பேசினால் எதிரில் இருப்பவரும் நமது பேச்சை அவ்வளவாகப் பொருட்படுத்த மாட்டார்.

ஆனால் இதிலும்கூட சிக்கல் ஏற்பட்டு விடலாம் என்பதற்கு இன்னொரு உதாரணம் சொல்கிறேன்.

எங்களைப் போலவே முன்பு ஒரு இந்தி நடிகையை ஒப்பந்தம் செய்யப்போன இரண்டு தயாரிப்பாளர்களின் அனுபவம் இது. தமிழில் வெற்றிகரமாக ஓடிய படத்தின் இந்திப் பதிப்பு. தயாரிப்பாளர்களை

வரவேற்று அமரச் செய்தார் நடிகை. அருமையான மசாலா டீ கொடுத்து உபசரித்தார். உரையாடல் ஆங்கிலத்திலும் இந்தியிலுமாக அமைந்தது. இங்கேயும் ரேட் பேரம்தான். கடைசியில் நடிகை குறிப்பிட்ட தொகையை ஒப்புக்கொண்டே ஆகவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டதும் இரு தயாரிப்பாளர்களும் தங்கள் தோல்வியை மறைக்கும் விதமாகவோ என்னவோ நடிகையைப் பற்றி தமிழில் தரக்குறைவாய் விமர்சித்து தங்களுக்குள் பேசிக் கொண்டார்கள். ஒப்பந்தம் முடிந்து இருவரும் கிளம்பும்போது நடிகை இரு கைகளையும் கூப்பியபடி, ''வணக்கம், மெட்ராஸ்ல பார்ப்போம்'' என்று தமிழிலேயே விடை தர, இருவருக்கும் அதிர்ச்சியில் மயக்கமே வந்து விட்டது!

அவருக்குத் தமிழ் தெரியாது என்ற நினைப்பில் இத்தனை நேரம் என்னவெல்லாம் பேசித் தீர்த்துவிட்டோம் என்ற குற்ற உணர்வோடு ''உங்களுக்குத் தமிழ் தெரியுமா?'' என்றால், ''நல்லாத் தெரியும். நான் சென்னையில் ரொம்ப நாள் இருந்திருக்கேன்'' என்றார் நடிகை! பிறகு படப்பிடிப்பின்போது அந்த நடிகை செட்டில் இருக்கும் சமயத்திலெல்லாம் இரு தயாரிப்பாளர்களும் வெளியே நழுவி வந்து, அவர் முகத்தைப் பார்ப்பதையே தவிர்த்தார்கள்! இந்த சம்பவத்தைப் பற்றி அவர்களுள் ஒருவரே என்னிடம் தெரிவித்தார்.

நான்கு பேர் இருக்கும்போது பொதுவான மொழிதான் பேசச் சிறந்தது. அதிலும்கூட பண்பும் நாகரிகமும் பேச்சில் கலந்திருக்க வேண்டும் என்பதற்கு வேறு என்ன எடுத்துக்காட்டு வேண்டும்!

பொது மொழியான ஆங்கிலம்கூட தற்போது அளவுக்கு அதிகமாக உபயோகிக்கப் படுகிறதோ என்று எனக்கு ஒரு சந்தேகம் ஏற்பட்டிருக்கிறது.

இரு தமிழர்கள் சந்தித்தால்கூட ஆங்கிலத்திலேயே குசலம் விசாரித்துக் கொள்கிறார்கள். ஆங்கில மீடியத்தில் படித்து, வீட்டிலும் ஆங்கிலமே பேசி, வெளி இடங்களிலும் ஆங்கிலம் பழக்கமாகி விடுகிறது. அன்றாட வாழ்வில்கூட தமிழ் தலைகாட்டாத ஒரு நிலை எப்படி வந்தது?

கணவன் - மனைவி, பெற்றோர் - குழந்தைகள் என்று தற்போது எல்லாருமே ஆங்கிலத்திலேயே பேசிவிடுவதால்தான் தமிழின் உபயோகம் குறைந்துவிட்டது. இந்தப் பழக்கம் மாற வேண்டும் என்பதே என் ஆசை. அதிலும், ஆங்கிலம் தெரியாத பாட்டி, தாத்தாவோ மற்ற உறவினர்களோ நண்பர்களோ இருக்கும்போது வீட்டில் உள்ள மற்றவர்கள் ஆங்கிலத்திலேயே பேசுவது அவர்களிடம் ஒரு எரிச்சலைத்தான் வரவழைக்கும்.

கதைகள், திரைப்படங்களில் ஆங்கிலப் பிரயோகம் வெகுவாகக் குறைக்கப்பட்டு, இயன்றவரை அந்தந்த மாநில மொழிக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்தால், மேலைநாட்டு மொழி தெரியாத சாமான்யர் களும், பாமர மக்களும் பலன் அடைவார்கள்.

தமிழ்ப்படங்களில் அதிக ஆங்கிலம் இருப்பதை பெரும்பாலான ரசிகர்கள் விரும்புவதில்லை. குறிப்பாக, தமிழ்நாட்டின் சிறிய நகரங்களிலும் கிராமங்களிலும் ஆங்கில வாடை வீசுவதுகூட பிடிப்பதில்லை. தமிழ்ப் பண்பாடு, கிராமியம் போன்ற விஷயங்களைக் கொண்ட கதைகளையே விரும்புகிறார்கள். எங்கள் 'தூங்காதே தம்பி தூங்காதே' படத்திலிருந்த ஆங்கில வசனங்களைத் தமிழாக்கம் செய்ததும் ரசிகர்களிடம் வரவேற்பு அதிகரித்தது.

கோக்கோ கோலா' பானம் முன்பு முதன்முறையாக ஜப்பானுக்குள் நுழைந்தபோது, மற்றெந்த நாடுகளையும்விட ஜப்பானில் விற்பனை பிய்த்துக்கொண்டு போயிற்று! காரணம் பாட்டிலின்மேல் காணப்பட்ட பெயர் ஜப்பானிய மொழியிலும் இடம்பெற்றிருந்ததுதான்!

விஞ்ஞானத்திலும் மற்ற துறைகளிலும் ஜப்பான் நாடு அடைந்துள்ள முன்னேற்றம் பிரமிப்புக்கு உரியது. மேலை நாடுகளின் தொழில் நுட்பங்களை எளிதில் கற்றுக் கொண்டார்களே தவிர, தங்கள் நாட்டு மொழியை எதற்காகவும் அவர்கள் கைவிட்டுவிடவில்லை.

இங்கே இந்தியாவில், இந்தியப் பாரம்பர்ய வழி வந்த நடனமும், தமிழகத்தின் சிறப்புக் கலையுமாகிய பரத நாட்டிய நிகழ்ச்சி

**'தூங்காதே தம்பி தூங்காதே' படத்தில் ஜமுனா, கமல்ஹாசன் (1983)**





'பெண்' படத்தில் வைஜயந்திமாலா.

தமிழகத்திலேயே நடந்தால்கூட, அழைப்பிதழும், விளக்கமான நிகழ்ச்சி விபரங்களும் ஆங்கிலத்தில் அச்சடிக்கப்படுவதைப் பார்க்கும்போது வேதனைதான் மிஞ்சுகிறது.

நடனம் மட்டுமல்ல, மற்ற பல துறைகளிலும் தேவையின்றி ஆங்கிலம் உபயோகிப்பதைத் தவிர்க்க வேண்டும்.

என்னைப் பொறுத்தவரை, எந்தக் கூட்டத்திலும் தமிழில் பேசுவதையே வழக்கமாகக் கொண்டுள்ளேன். எப்போதும் ஆங்கிலத்திலேயே நடக்கும் ஒரு நிகழ்ச்சியில்கூட நான் தமிழில் பேசியபோது, யாரும் என்னை கேலி செய்யவில்லை; 'எங்களுக்குள் ஏற்படும் இறுக்கம் குறைந்து சூழ்நிலை சகஜமாக ஆக உங்கள் பேச்சு உதவியது' என்று பாராட்டத்தான் செய்தார்கள்.

பிறமொழிகள் தெரிந்து வைத்துக் கொள்வது நிச்சயம் நல்ல அறிவைக் கொடுக்கும். தாய்மொழி தவிர யார் யாருக்கு என்னென்ன மொழிகளில் பரிச்சயம் உண்டு என்பதை முழுவதுமாகத் தெரிந்து கொள்வது எல்லா இடங்களிலும் இயலாத செயல். அதிக மொழிகளை அறிந்தவருக்கு அந்த அறிவு எப்போதும் வீணாவதில்லை. எப்படியாகிலும் ஏதேனும் ஒரு பலன் கிடைத்து விடுகிறது, என் தந்தைக்குக் கிடைத்ததைப் போல.

அப்பச்சி ஒருமுறை சிங்கப்பூருக்குப் போனபோது அங்கு ஒரு கடையில் அழகிய கடிகாரம் ஒன்றை வாங்க நினைத்து விலை கேட்டார். அங்கிருந்த சிப்பந்தி, கடை உரிமையாளரிடம் வியாபார சங்கேத மொழியில் விலை கேட்க, அவரும் ஏதோ பதில் அதே

மொழியில் சொன்னார். பின், சிப்பந்தி அந்த விலையைத் தந்தையிடம் ஆங்கிலத்தில் சொல்ல, ''அநியாய விலை சொல்கிறீர்கள்'' என்று தந்தை மறுத்தார்.

''கடிகாரத்தின் அடக்க விலையின்மீது மிக அதிகமாக லாபம் வைத்து சொல்கிறீர்கள், குறைத்துக் கொடுத்தால் கடிகாரத்தை வாங்கிக் கொள்கிறேன்'' என்றார்.

''அதிக லாபம் என்று உங்களுக்கு எப்படித் தெரியும்?'' என்ற கடைக்காரரின் கேள்விக்கு தந்தை சொன்ன பதில் அவர்களை ஆச்சர்யப்படுத்தி விட்டது.

''இப்போதுதானே நீங்கள் அவரிடம் சொன்னீர்கள், அடக்க விலை இவ்வளவு, இதில் லாபம் இவ்வளவு வைத்து விலையைச்சொல்லலாம் என்று! உங்கள் மொழி எனக்குப் புரியும், நானும் இங்கு சில காலம் தங்கி வியாபாரம் செய்திருக்கிறேன்!''

தான் கேட்ட விலைக்கு அன்று அப்பச்சி வாங்கிய அந்தக் கடிகாரம் இன்னமும் எங்களிடம் இருக்கிறது.

**சிங்கப்பூரில் நீதிபதி மு.மு.இஸ்மாயீலுடன் ஏவி.எம்.**



# 18. தேவை - தெளிவு



'அன்னை' படத்தின் 100-வது நாள் விழாவிற்கு தலைமையேற்ற S.S வாசனுடன் இயக்குனர்களும், கலைஞர்களும்.

பேச்சு என்பதே நம் எண்ணத்தை மற்றவர்கள் புரிந்து கொள்வதற்காகத்தான் என்பதில் யாருக்கும் சந்தேகம் இருக்க முடியாது.

நாம் எதைச் சொன்னாலும் அதைத் தெளிவாக, மற்றவர்கள் புரிந்து கொள்ளும் விதத்தில் சொல்ல வேண்டும் என்பதில் என் தந்தையார் மிகவும் கவனமாக இருப்பார்.

நாங்கள் 'அன்னை' என்ற படத்தை வெளியிட்டிருந்த நேரம் அது.

படம் நன்றாக ஓடியது. வெற்றிவிழா நடத்துவதென முடிவாயிற்று. விழாவில் ஜெமினி அதிபர் அமரர் எஸ்.எஸ்.வாசன் அவர்கள் கலந்து கொள்ள வேண்டும் என்று தந்தையார் விரும்பினார். தொலைபேசியில் அவருடன் தொடர்பு கொண்டு சம்மதத்தைப் பெற்றார். இருந்தாலும் மரியாதைக்காக நேரிலும் போய்ச் சொல்லி அழைத்துவிட்டு வரவேண்டும் என்று என்னை அனுப்பினார்.

நான் புறப்படுவதற்கு முன் மிகத் தெளிவாக என்னிடம் சில விபரங்களைத் தெரிவித்தார். திரு. வாசன் அவர்களின் இல்லத்துக்குப் போனதும் காரை எங்கே நிறுத்த வேண்டும், வீட்டுக்குள் நுழைந்ததும் அங்கு இருப்பவர்களிடம் என்ன சொல்ல வேண்டும். திரு. வாசன் அவர்களைப் பார்த்ததும் அவரிடம் எப்படிப் பேச வேண்டும் என்கிற விபரங்கள்தான் அவை.

இன்னொரு முறை நீதிபதி திரு. மு.மு.இஸ்மாயில் அவர்களின் வீட்டுக்குப் போக வேண்டியிருந்தது. அப்போதும் இதே போல் எல்லாவற்றையும் விவரமாகச் சொல்லி அனுப்பினார்.

அந்த இரு சந்தர்ப்பங்களில் மட்டுமல்ல, பின்னர் எவரைப் பார்க்கப் போனாலும் உபயோகப்படும்படியாக மிக மிகத் தெளிவாக, அழகான கோர்வையோடு அமைந்து இருந்தன அந்த விவரங்கள்.

மனிதர்களை சந்திக்கும்போது மட்டுமல்ல, வெளியூர்களுக்குப் போகும் முன்னாலும்கூட அந்தந்த ஊர்களில் என்ன இடங்களைப் பார்க்க வேண்டும் என்று பட்டியல் போட்டுக் கொடுப்பார்.

அவரது தெளிவான பேச்சு பிசிறில்லாமல் நம்மை வழிநடத்திச் செல்வதை நான் பலமுறை கண்டிருக்கிறேன்.

வேலையாட்களிடமோ மற்றவர்களிடமோ எந்தவொரு வேலையை ஒப்படைக்கும்போதும் இதே தெளிவு பேச்சில் இருப்பதை என் தந்தையிடம் பார்த்திருக்கிறேன்.

மற்றவர்கள் பேசுவதைக் கேட்பதில் எவ்வளவு கவனம் காட்டுகிறோமோ அவ்வளவு கவனம் நாம் பேசும் போதும் இருக்க வேண்டும் என்பார்.

ஒரு தரத்துக்கு இரண்டு தரம் விவரங்களைத் தெளிவுபடுத்தி ''புரிகிறதா? நான் சொல்வதைப் புரிந்து கொண்டாயா?'' என்று உறுதிப்படுத்திக் கொள்வார். ஏனோதானோ என்ற பேச்சோ, வழவழா குழப்பமோ நிச்சயம் இருக்காது அவர் வார்த்தைகளில்.

நாம் சொன்னது புரியவில்லையென்றால் மறுபடி புரியும்படி சொல்ல வேண்டும். அப்போதுதான் நமது பணி வெற்றியில் முடியும் என்பதில் தீவிரம் காட்டுவார். ''அவர்கள் இப்படிக் கேட்டால் நீ அப்படி பேசு'' என்று எதிராளி என்ன சொல்வார்கள் என்பதை யோசித்து விளக்குவார்.

யாரிடமாவது நாம் வியாபாரம் பேசப் போனால்கூட எல்லாவகையான சாத்தியக் கூறுகளையும் முன்கூட்டியே ஊகித்து, எது எதற்கு எப்படி நம் பேச்சு இருக்க வேண்டும் என்று தெளிவாக வழி காட்டுவதில் அவருக்கு நிகர் அவர்தான்.

நல்ல சமையல்காரனாக உருவாக வேண்டுமென்றால் முதலில் சாப்பாட்டின் ருசியை அறிந்துகொள்ள வேண்டும். நல்ல ஆசிரியனாக வரவேண்டுமானால் கல்வியில் சிறந்தவனாக இருக்க வேண்டும். அதே போல் நல்ல 'எக்ஸிக்யூடிவ்''வாகப் பிரகாசிக்க வேண்டுமென்றால் நமது பொறுப்புகளை சரிவரப் புரிந்து கொண்டு அதைச் சுலபமாக மற்றவர்களுக்குத் தெளிவுபடுத்தி வேலையை முடிக்கத் தெரிய வேண்டும் என்பது தந்தையின் கருத்து.

வேலை விஷயம்தான் என்றில்லை. ஒரு கல்யாணத்துக்கு சாப்பாடு போடுவதில்கூட இலையில் இவ்வளவு போட வேண்டும்,



டிவெங்கடாசலத்துடன்

ஒரு முறைக்கு இரு முறை கேட்டுத்தான் அடுத்த பதார்த்தத்தைப் பரிமாற வேண்டும் என்று சொல்வதிலிருந்து அலுவலகக் கணக்கு வழக்கு விவகாரங்கள், கடிதப் போக்குவரத்து, நிர்வாகம் வரை குழப்பமில்லாமல் சீராக வைத்திருப்பார்.

என் தந்தை போலவே என் சகோதரர் திரு. குமரனும் மிகத் தெளிவாகப் பேசுவார். எதைச் சொன்னாலும் யாருக்கும் குழப்பம் வராத வகையில் தெள்ளத் தெளிவான பேச்சு அவருடையது. பேச்சைப் போலவே அவரது கையெழுத்தும் மணி மணியாக, புரியும்படி தெளிவாக இருக்கும்.

எந்த வேலையும் உரிய நேரத்தில் முடிக்கப்படுகிறதா என்பதில் என் தகப்பனார் கவனமாக இருப்பார். குறிப்பிட்ட நேரத்துக்குள் பணியை முடித்துவிட வேண்டும் என்பதை ஒரு கொள்கையாகவே வைத்திருந்தார். அதனால் நேரத்தைத் திட்டமிட்டுக் குறிப்பிட்டு விடுவார்.

''இதை நாளைக்குள் முடித்துவிட வேண்டும்'', ''இதை 7-மணிக்குள் செய்து விடு'' என்று நேரம் குறிப்பார். சாதாரணமாக ஒரு வேலையைச் செய்ய எவ்வளவு நேரம் பிடிக்கும் என்று நாம் நினைக்கிறோமோ அதைவிட குறைவான நேரம்தான் கொடுப்பார். உதாரணமாக, ஒரு பணிக்கு மூன்று மணி நேரம் ஆகும் என்று நாம் நினைத்தால், ''இரண்டு மணிக்குள் முடித்துவிடு'' என்பார்.

''நேரம் போதாது, மூன்று மணி ஆகுமே'' என்று நாம் தயங்கினால், ''சரி இரண்டு மணிக்குப் பிறகு எவ்வளவு முடித்திருக்கிறாய் என்று வந்து சொல்லு'' என்பார். அவர் குறித்த

இரண்டு மணி முடிந்து, நாம் சொன்ன மூன்று மணியும் தாண்டும்வரை நம்மைப் பற்றி கவலையே பட மாட்டார். அந்தக் கெடுவும் தீர்ந்த பிறகும் நாம் வேலையை முடிக்கவில்லை என்றால், ''எங்கே இருந்தாய், என்ன செய்து கொண்டிருந்தாய்?'' என்று ஆரம்பித்து விடுவார்.

காலம் பொன்னானது, அதைத் திட்டமிட்டு செலவு செய்தால்தான் செயல்களை முடிக்க முடியும் என்பது அவருடைய அசைக்க முடியாத நம்பிக்கை.

இந்த நம்பிக்கையில்தான் எங்களிடம் கடைசியாக ஒரு பொறுப்பை ஒப்படைத்தார்.

''ஏ.வி.எம். ராஜேஸ்வரி திரையரங்கத்தை நான் கட்டி முடித்து விட்டேன். 25-ம் தேதிக்குள் திறப்பு விழா செய்ய வேண்டியது உங்கள் பொறுப்பு'' என்று சொன்னார்.

அதை அப்படியே நிறைவேற்றினோம்.

ஆனால் - அவரது மறைவுக்குப் பிறகு.

தன் ஆயுள் முடியும்வரை கொள்கைப் பிடிப்புடன் வாழ்ந்த அவரது இறுதிக் கட்டளையை நிறைவேற்றி, இப்போதும் ஓரளவாவது திறமையாகச் செயல்பட முனைகிறேன் என்றால் அதற்குக் காரணம், அப்பச்சி இருந்திருந்தால் என்னென்ன கேள்விகள் கேட்பார் என்று நானே எனக்குள் அலசிப் பார்த்து, சொல்லிலும் செயலிலும் தெளிவு இருக்கும் படியாக ஒரு சுய விமர்சனம் செய்து பணியாற்ற முயற்சிப்பதுதான்.

AVM ராஜேஸ்வரி திரையரங்கு



# 19. எண்ணமும் பேச்சும்



எண்ணப் பரிமாறலில் பேச்சும் அதன் தெளிவும் எத்தனை முக்கியமானவை என்பதைப் பற்றி பேசும்போது மற்றுமொன்று என் நினைவுக்கு வருகிறது.

நாம் நினைப்பதை விட வேகமாக வார்த்தைகளைப் பேசிவிடும் அவசரம் நமது நாக்குக்கு இருக்கிறது. அறிவு யோசித்து, முடிவு செய்து, சொற்களைத் தேர்ந்தெடுத்துக் கொடுப்பதற்குள் பல சமயங்களில் இந்த நாக்கு அதிவேகமாக செயல்பட்டு வார்த்தைகளை வெளியே தள்ளி விட்டுவிடும்!

ஆனால் இதற்கு நாக்கை மட்டும் குறை சொல்ல முடியாது, நம்முடைய மனதுக்குள் ஊறிக் கிடக்கும் எண்ணங்களும் அவற்றின் தாக்கமுமே பெரும்பாலும் இந்த நிலைக்குப் பொறுப்பு.

நல்ல நினைப்புகளை மறைத்துக் கொண்டு உருவாகும் இந்தக் கெட்ட எண்ணங்களை 'சாத்தான்' என்றுதான் நான் கூறுவேன். அதுதான் நல்லதைப் பேசாமல் கெட்டதைப் பேசும்படியும் எண்ணும்படியும் நம்மை ஆட்டுவிக்கிறது.

ஒருவர் நோயினாலோ அல்லது வேறு ஏதோ நெருக்கடியினாலோ அவஸ்தைப் படும்போது, ''ஆள் குளோஸ்'' காலி!, அவ்வளவுதான் ஆட்டம்!'' என்று ஆரம்பித்து விடுகிறோமே, இது எதைக் காட்டுகிறது?

துர்குணம் என்ற சாத்தான் நம் மனதை ஆக்ரமித்திருக்கும் நேரத்தில் நம்மை மீறி வெளிப்பட்டுவிடும் வார்த்தைகள் இவை.

''பாவம், ரொம்ப சிரமப்படுகிறான்'' என்று இரக்கம் நம் பேச்சில் தொனிப்பதல்லவா நல்ல பண்புக்கு அடையாளம்!

இந்தப் பண்பு வளருவது சற்று கடினம்தான். மனதை ஒழுங்கு படுத்தி, எண்ணத்தில் அன்பு, பாசம், இரக்கம், ஒழுக்கம் என்ற நல்ல அம்சங்களால் நிறைத்து வைத்துக் கொண்டால் சாத்தான் தலையெடுக்க முடியுமா?

பண்பே இல்லாமல் ஆத்திரத்தையெல்லாம் கொட்டி யாரையாவது திட்டியதும், ''அப்பாடா, வாங்கு வாங்குனு வாங்கிட்டேன்!'' என்ற அற்ப சந்தோஷம் வேறு பல சந்தர்ப்பங்களில் எண்ணத்தை அழுக்காக்கி விடுகிறது. உண்மையில் இப்படிப் பேசுவதால் ஒரு உறுத்தல் அல்லவா நம் நிம்மதியைப் பறிக்கும்படியாக மிஞ்சுகிறது!

ஏதாவது ஒரு சமயம் வேடிக்கையாகப் பேசும்போது இப்படிப்பட்ட யதார்த்தப் பேச்சு வெளிவரலாம், ஆனால் அதுவும் காயப்படுத்தும் அளவுக்குப் போகக் கூடாது.

'சும்மா விளையாட்டுக்குச் சொன்னேன்' என்பதுகூட வினையாகிப் போய் விடலாம். விளையாட்டுக்கும், வேண்டுமென்றேவுக்கும் இடையே உள்ள கோடு எங்கே, எப்படிப் போடப்பட வேண்டும் என்பதை யார் தீர்மானிப்பது?

யாரைப் பற்றியாவது விசாரிக்கும்போதுகூட, ''அவர் வந்துட்டுப் போனாரா?'' என்ற அலட்சியக் கேள்விக்கு பதில், ''அவர் எப்படி இருக்கிறார்? சௌகரியமாக இருக்கிறாரா?'' என்பதில் நமது அக்கறை வெளிப்படுவதைக் கவனிக்க வேண்டும்.

எல்லா மனித மனங்களுக்குள்ளும் சாத்தானும் உண்டு, தேவதையும் உண்டு என்பார்கள். சாத்தானைத் தலையெடுக்க விடாமல் அடித்து அமுக்கிவிட்டு, தேவதையை வளர விடுவது நமது கையில்தான் இருக்கிறது. எத்தனைதான் நல்ல மனிதரானாலும், நல்ல மனமானாலும் - சாத்தான் சில சமயங்களிலாவது தலை காட்டிவிடும்.

நன்றாக வாழ்ந்து வருகிற ஒரு பெரிய மனிதர். மிக நல்லவர். என்றாலும் அவரிடம்கூட இந்த சாத்தான் சில சமயம் தன் கைவரிசையைக் காட்டி விடுவதை நானே பார்த்திருக்கிறேன். தன் குடும்பம் மூன்றாவது தலைமுறை வரை ஒற்றுமையாக நன்றாக இருக்க வேண்டும் என்ற நல்ல எண்ணம் இருக்கும் அவருக்கு, அடுத்தவர்

குடும்பத்தில் தகராறு என்று கேட்பதில் ஏதோ ஒரு ஆனந்தம்! ''யாருக்கும் யாருக்கும் சண்டை? யார் என்ன திட்டினார்கள்? அட, அவனா அப்படிச் சொல்லி விட்டான்? ஆக, சகோதரர்கள் பிரிவது உறுதியாகி விட்டதா? உம், அப்புறம் என்னாயிற்று?'' என்று மிக உற்சாகமாக சண்டை விபரங்களை அவர் கேட்டுக் கொள்வதை சாத்தானின் தூண்டுதலால் வந்த விளைவு என்றுதானே சொல்ல வேண்டும்!

எப்படிப் பேச வேண்டும் என்று தீர்மானிக்க வேண்டியது நம் பொறுப்புத்தான். நான்கு முறை சாமர்த்தியமாகப் பேசுவதாக நினைத்துக் கொண்டு பேசினால், ஐந்தாவது முறை சாமர்த்தியம் தானாக வந்துவிடும். நகைச்சுவையோடு பேச வேண்டும் என்றால் பேச்சில் நிச்சயம் ஹாஸ்யம் கலந்திருக்கும். காதலியிடம் பேசும்போதுகூட காதலில் தோய்ந்த வார்த்தைகள் வருவதை அனுபவித்திருப்பீர்களே!

ஆனால் ரொம்ப அறிவாளிபோல் பேச நினைத்தால், அதற்கேற்ப அறிவுத்திறன் நம்மிடம் உள்ளதா என்று யோசித்துப் பேச வேண்டும்.

நமக்குத் தெரிந்த, நாம் நன்றாக அறிந்த ஒரு பொருளைப் பற்றிப் பேசினால் அது உண்மையான பேச்சு. முழுமையாக நமக்குத் தெரிந்ததைப் பற்றி இந்த மாதிரி பேசும்போதும், 'எனக்கு எல்லாம் தெரியும், அதனால் நான் சொல்வதை நீங்கள் கேளுங்கள்' என்று ஒரு

நெடுஞ்செழியன், அறிஞர் அண்ணா, ஏவி.எம்.



அதிகாரத்தோடு பேசுவதைத் தவிர்த்து, அடக்கத்தோடு அளவாகப் பேசினால், கேட்பவருக்கு நம்மீது ஒரு மரியாதை நிச்சயம் ஏற்படும். திறமையை வெளிப்படுத்துவதிலும்கூட ஒரு எளிமை தேவை என்பதை நாம் அனைவரும் ஒப்புக் கொள்வோம்!

திறமை என்றதும் ஒன்று சொல்லத் தோன்றுகிறது. நாம் யாரிடம் பேசிக் கொண்டிருக்கிறோம் என்பதை உணர்ந்து பேசுவது அனாவசிய தர்மசங்கடங்களிலிருந்து நம்மைக் காப்பாற்றும். என்னைவிட திறமைசாலியிடம் போய் எனக்கிருக்கும் சிற்றறிவைக் காட்டி பெருமையாகப் பேசினால், என் அறியாமையைப் புரிந்துகொண்டு மதிப்புக்குறைவாகத்தான் எடை போடுவார்கள். கொல்லன் தெருவில் ஊசி விற்பது மடத்தனம் அல்லவா!

கொஞ்சம் தெரிவதே இப்படி ஒரு விளைவை உண்டாக்கும் என்றால், ஒன்றுமே தெரியாமல் அதிகப்பிரசங்கியாகப் பேசுபவரை எப்படி மதிப்பிடுவார்கள்? தேவையில்லாத சவடால் பேச்சும், வீண் ஜம்பத்தைக் காட்டும் சொற்களும், 'அலட்டிக்கிறான்' 'தெரிந்த மாதிரி காட்டிக் கொள்கிறான்' 'ரொம்ப புத்திசாலி மாதிரி நிலைநாட்ட முயற்சி செய்கிறான்' என்ற விமர்சனங்களைத்தான் பெற்றுத் தரும்! நிறைகுடம் தளும்பாது என்பதை அறியாதவர் யார்!

எப்போதுமே நல்லதை விட கெட்டது மிக வேகமாக நம் மனதில் பதிந்து விடும் என்பார்கள். பேச்சிலும்கூட, பிறரைக் குத்திக் காட்டுவதாகப் பேச ஆரம்பித்தால் அதுதான் மிக வேகமாகப் பல மடங்கு பெரிதாகி வளர்ந்து அருவிமாதிரி கொட்டத் துவங்கி விடுகிறது! இந்த நினைப்பை மனதுக்குள் வளர விடுவது நம்மை நாமே குட்டிச்சுவராக ஆக்குவதற்குத்தான் வழி!

ஒரு திருமண விழாவுக்குப் போயிருந்தேன். மண்டபத்தில் நுழைந்தஉடன், 'வாங்க ....' என்று வரவேற்றார்கள் என்றுதானே நினைக்கிறீர்கள்? இல்லை. கிண்டலும் கேலியுமாக ஒரு பார்வை பார்த்து, ''உங்க மனைவி வரவில்லையா?'' என்று வராதவளைப் பற்றி ஒரு விசாரிப்பு! இதுகூட பரவாயில்லை, ''அவளால் வர முடியவில்லை'' என்று நானும் ஒரு வரியில் பதிலைச் சொல்லிவிட்டு நகரத் தொடங்கினேன்.

விஷயம் இதோட முடியவில்லை. உள்ளே சென்று உட்கார்ந்ததும், வாசலில் என்னை 'வரவேற்ற'. மனிதரின் மனைவி



ஏவி.எம்,ஜோதி வெங்கடாசலம், காமராஜர்

வந்தார். ''என்ன, நீங்க மட்டும் வந்திருக்கீங்க? யாரையும் கூட்டிட்டு வரலையா? ரொம்பப் பெரிய ஆளாயிட்டீங்க, நம்ம வீட்டுக்கெல்லாம் வருவீங்களா!''

நாம் வந்ததே கூட தவறோ என்கிற எண்ணம் உண்டாகி நான் சங்கடமாக உணர்ந்தேன். அடுத்து மற்றொரு நபர் வந்து, ''அடடா, வந்திட்டீங்களா! இப்பத்தான் எங்க வீட்டுக்கு வழி தெரிந்ததா!'' என்று வேறு சொன்னதும், என் சங்கடம் அதிகமாகிவிட்டது.

மகிழ்ச்சியும் குதூகலமுமாக இருக்க வேண்டிய அந்த நல்ல விசேஷ நாளில் எனக்கு ஏன்தான் இங்கு வந்தோமோ என்று ஆனது. அன்று மட்டுமில்லை. பிறகு எப்போதும் அந்தக் குடும்பத்து நல்லது கெட்டதுக்குப் போக வேண்டுமென்றாலும் எனக்குத் தயக்கம்தான்.

இப்படிப்பட்டவர்கள் குதர்க்கமாகக் கேள்வி கேட்கும்போது நாம் பதில் சொல்லத் திணறுவது எரிச்சலாக இருக்கும். அதனால், அங்கு போகும் முன்னால் அவர்கள் என்னென்ன பேசினால் நாம் எப்படியெப்படி பதில் சொல்லலாம் என்று எனக்குள்ளேயே ஒரு உரையாடலை நடத்திப் பார்ப்பதும் வழக்கமாகி விட்டது! மனதில் சந்தோஷத்தோடு சென்று, அந்த கோலாகலத்தில் கலந்து கொண்டு நிறைவுடன் திரும்பி வருவது மறைந்து, அவர்களின் நையாண்டி நம் மனதுக்குள்ளும் புகுந்து அவர்கள் பேச்சை எதிர்கொள்ள நம்மைத் தயார் செய்து கொள்ளவும் வைத்து நம் எண்ணத்தையும் அழுக்காக்கிவிடும் நிலமையை என்னவென்பது!

முன்பு எங்கோ படித்த ஒரு சின்ன கேலி நாடகம்தான் நினைவுக்கு வருகிறது. ஒரு கணவன் தினமும் நேரங்கழித்து வீட்டுக்கு வருவதும், அவன் வந்ததும் மனைவி திட்டுவதும் வாடிக்கையான சமாசாரம். அவன் சீக்கிரம் வரவும் முயற்சிக்கவில்லை, அவள் திட்டுவதை நிறுத்தவும் இல்லை. அவளது கத்தலினால் எரிச்சலடைந்திருந்த அந்தக் கணவனுக்கு ஒருநாள் திடீரென்று ரோஷம் வந்து விடுகிறது. 'இன்றும் நேரமாகிவிட்டது, மறுபடி அவள் திட்டத்தான் போகிறாள். ஆனால் இன்று நான் சும்மா இருக்கப் போவதில்லை, நானும் திருப்பித் திட்டப் போகிறேன்' என்று பலவிதமாகக் கற்பனை செய்து அந்த 'மூட்' மாறாமல் வீட்டுக்கு வருகிறான்.

அவன் கேட்டைத் திறக்கும் சத்தம் கேட்டு மாடி பால்கனியிலிருந்து மனைவி எட்டிப் பார்த்து, 'யாரு?' என்று கேட்டதுதான் தாமதம், தான் தயாரித்து வைத்திருந்த திட்டுக்களை கடகடவென்று கொட்டி, 'போடி வெளியே' வில் வந்து நிற்கிறான் அவன்! தான் இன்னும் 'ஏன் லேட்?' என்ற கேள்வியையே துவங்கவில்லையே என்று அந்த மனைவி திகைத்துப்போய் நிற்கிறாள்!

எண்ணத்தின் தீவிரத்தைப் பார்த்தீர்களா!

இதேபோன்ற சம்பவத்தை நான் நேரிலும் பார்த்திருக்கிறேன். தினம் லேட்டாக வருபவர் ஒருநாள் ரொம்பவும் சிரமப்பட்டு தன் வேலைகளை முடித்து வீட்டுக்கு சீக்கிரம் வந்தபோது அவர் மனைவி ஒன்றும் சந்தோஷப்படவில்லை. ''என்ன இன்றைக்கு சீக்கிரம் வந்து விட்டீர்கள்? எங்கேயும் ஊர்சுற்றப் போகவில்லையா? உங்கள் சினேகிதப் பட்டாளம் ஏன் உங்களை விட்டு விட்டார்களா? வேறு ஏமாந்தவன் எவனாவது கிடைத்து விட்டானாமா?'' என்று வாய் மூடாமல் பேசி, 'ஏன்தான் சீக்கிரம் வந்தோமோ!' என்ற சலிப்பைத்தான் கணவனிடம் வரவழைத்தாள். எத்தனை நாட்களாகவோ அவள் மனதில் ஊறிப்போயிருந்த கோபம்தான் இப்படிப் பேச வைத்ததோ!

தாமாக உண்டாகுபவை, நாமாக வளர்த்துக் கொள்பவை தவிர பிறரால் நம் மனதில் ஊன்றப்படும் எண்ண விதைகளும் நம்மை நல்லதோ கெட்டதோ, ஏதாவதொரு பாதையில் இழுத்துச் செல்லும் வலிமை படைத்தவை.

அடுத்தவர் பேச்சைக் கேட்கும்போது பெரும்பாலும் அந்த விஷயம் முழுவதுமே உண்மை என்று எடுத்துக் கொள்ளக் கூடாது.

அதில் சில உண்மையான அம்சங்களும் இருக்கலாம் என்றுதான் கொள்ள வேண்டும். ஒரு வரிகூட விடாமல் நம்பத் துவங்கிவிட்டோம் என்றால் அதனால் நிம்மதிதான் குறைந்து போகும். எவரைப் பற்றி வேண்டுமானாலும் எவரும் கெட்ட செய்திகளை நம் மனதுக்குள் திணித்து விட முடியுமே!

பொதுவாகவே நாம் கெட்ட செய்தியை இன்னொருவரிடம் சொல்லும்போது அதே வார்த்தைகளைக் கொண்டு அப்படியேவா சொல்கிறோம்? இல்லை, ஒன்றிரண்டு சொற்களைச் சேர்த்து, நம் எண்ணங்களையும் அதில் தூவி, அந்த விஷயம் நம் பார்வையில் எப்படிப் படுகிறதோ அப்படிச் சொல்கிறோம். இதைக் கேட்டு அப்படியே ஒருவர் வார்த்தைக்கு வார்த்தை நம்பிவிட்டு அதனால் ஒரு அபிப்ராயத்தை வளர்த்துக் கொண்டால் அது அவருக்கு பாதிப்பை அல்லவா தேடித் தரும்!

எனவே அதிகமாகப் பிறர் பேச்சைக் கேட்பதைக் குறைத்துக் கொள்வது நல்லது.

காரில் போய்க் கொண்டிருக்கும்போது, பிரயாண நேரம் முழுவதும் நம்மோடு பேசிக் கொண்டு வரும் டிரைவர் கூட மிகச் சுலபமாக நம்முள் சில கருத்துக்களைப் புகுத்திவிட முடியும். ஆபீஸ் பியூன் கூட சில நேரங்களில் ஏதாவது செய்திகளை நம்மிடம் அவிழ்த்துவிட்டு, ''சந்தர்ப்பம் கிடைத்தது, நன்றாகப் பற்ற வைத்து விட்டேன்'' என்று பெருமைப்படலாம். அவர்களுக்கு எவ்வளவு இடம் கொடுத்து எத்தனை விவரம் சேகரிக்க வேண்டும் என்பதை நாம்தான் முடிவு செய்ய வேண்டும்.

இப்படித் தானாக செய்திகள் வருவதைத் தவிர, சிலருக்கு ஒட்டுக் கேட்கும் பழக்கமும் செய்தி திரட்ட ஆள் அனுப்பும் குணமும்கூட இருப்பதை நான் கண்டிருக்கிறேன். ''அவர்கள் என்ன பேசுகிறார்கள் என்பதைக் கேட்டு வந்து சொல்லு'' என்றும், '' அங்கே போய் ரகசியமாக விசாரித்துவிட்டு வா'' என்றும் ஆட்களை அனுப்பும்போது அவர்கள் திரும்பி வந்து சொல்லும் விவரம் அனைத்தும் உண்மையாகவா இருக்கும்? துளி நிஜம் இருந்தாலும் அதைச் சுற்றி அவரது கற்பனையும், கருத்துமாக வலை பின்னி மிகைபடச் சொல்வதுதான் மனித சுபாவம்!

ஒரு உதாரணம் சொல்லட்டுமா? மைசூர் பிருந்தாவன் கார்டனில் படப்பிடிப்பு ஒன்று நடந்தது. சற்று ஓய்வாக இருந்த நேரம்

இயக்குனர்கள் திரு.ஏ.சி.திருலோக்சந்தர், திரு.எஸ்.பி.முத்துராமன், நான் ஆகிய மூவரும் அருகிலிருந்த பாதையில் நடக்கத் துவங்கினோம்.

திடீரென்று திருலோக்சந்தர் ஒரு புதர் ஓரம் எதையோ பார்த்த மாதிரி 'அதோ... அதோ பாருங்க' என்று சுட்டிக்காட்ட, முத்துராமன் அவர்களும் நானும் அங்கே நிஜமாகவே ஏதோ இருக்கிற மாதிரி சீரியஸாகப் பார்த்து, ''அட, ஆமாம்! பாருங்க, போவுது பாருங்க'' என்று பாவ்லா செய்தோம். அக்கம் பக்கத்தில் இருந்த மனிதர்கள் எங்கள் பேச்சைக் கேட்டு கூட்டமாகக் கூட, நாங்கள் நைஸாக இடத்தைவிட்டு நழுவி விட்டோம்!

15 அல்லது 20 நிமிடம் கழித்து நாங்கள் மீண்டும் அதே பாதையில் திரும்பி வரும்போது பார்த்தால், எக்கச்சக்கமாகக் கூட்டம் நிற்கிறது! 'நல்ல பாம்புதான், என் கண்ணால் பார்த்தேன்!' என்றும், 'பெரிய கட்டுவிரியன், இங்கேயே சுற்றிக் கொண்டிருந்தது, அதைத்தான் அடித்து எரித்து விட்டார்களா!' என்றும் விதம் விதமாய்ப் பேச்சுக்கள்!

ஒன்றுமேயில்லாமல் நாங்கள் சும்மா விளையாட்டுக்காக ஏதோ பேசப்போக, அதை நிஜம் என்ற நம்பி இத்தனை நேரத்தைப் பேச்சில் வீணடித்த மனிதர்களைப் பற்றி என்ன சொல்வது! நெருப்பில்லாமலே புகையும் என்றுதான் சொல்லத் தோன்றுகிறது!

எண்ணமும் பேச்சும், கோழியிலிருந்து முட்டையா முட்டையிலிருந்து கோழியா என்கிற மாதிரி ஒன்றை ஒன்று முந்திக் கொண்டு வெளிவருவதால்தான் இவற்றைத் தேர்ந்தெடுத்துப் பயன்படுத்துவது முக்கியம் என்று நினைக்கிறேன்.

**சிம்லாவில் P.N.சுந்தரம், A.C.திருலோகசுந்தர், S.P.முத்துராமனுடன்**



# 20. மனிதன் என்பவன் தெய்வமாகலாம்



மனிதாபிமானம் இல்லாத எந்த செயலுக்கும் மதிப்பில்லை. அதனால் பயனும் இல்லை என்று என் தந்தை எப்போதும் சொல்வார்.

தேவையறிந்து உதவுவதும், துன்பம் கண்டு இரங்குவதும், துயர் நீக்க உதவிக்கரம் நீட்டுவதும் மனிதத்தன்மை நிறைந்தவரின் வாழ்வு முறை. இப்படிப்பட்ட ஒரு வாழ்வையும் குணத்தையும் மக்கள் திலகம் திரு.எம்.ஜி.ஆர். அவர்களிடம் நான் கண்டிருக்கிறேன்.

'அன்பே வா' படப்பிடிப்பு சிம்லாவில் நடந்தது. அதை முடித்துக்கொண்டு ஸோலன் என்ற இடத்துக்கு வந்தோம். ஒரு ரெஸ்டாரெண்டில் சாப்பிடுவதற்காக வண்டியை நிறுத்தினோம். பலத்த பனி காரணமாக எனக்குத் தொண்டை வலி வந்து விட்டது. காதை அடைத்துக் கொண்டிருந்தது. 50 படிகள் ஏறி ஒரு ரெஸ்டாரெண்டுக்குப் போய்ச் சாப்பிட வேண்டும். எனக்குப் சாப்பிடவும் பிடிக்கவில்லை, அத்தனை படிகள் ஏறவும் முடியாது என்பதால் நான் காரிலேயே படுத்து விட்டேன். மற்றவர்கள் சாப்பிடச் சென்றார்கள்.

கொஞ்ச நேரம் கழித்துக் காரின் கண்ணாடிக் கதவுகளை யாரோ தட்டுவதை உணர்ந்து நான் பார்க்கும்போது, கைகளில் கிளவுஸ், அதன்மேல் ஒரு டவல் வைத்து அதில் ஒரு கண்ணாடி டம்ளரில் சூடான பாலை வைத்துக் கொண்டிருந்தார் எம்.ஜி.ஆர். அவர்கள். ''சரவணா! சூடாகப் பால் சாப்பிடுங்கள். உங்கள் தொண்டைக்கு இதமாக இருக்கும்'' என்று கட்டாயப்படுத்திக் குடிக்கச் சொன்னார். ''இந்தப் பாலை டைரக்டரிடமோ, உதவியாளரிடமோ அல்லது வேறு யாரிடமோ கொடுத்து அனுப்பி இருக்கலாம். ஆனால் அவர்கள் வந்து

சொன்னால் நீங்கள் கேட்க மாட்டீர்கள் என்பதால்தான் நானே கொண்டு வந்தேன்'' என்றார்.

அவரது செய்கையும் அன்பும் பாசமும் என்னை நெகிழச் செய்து விட்டன!

மக்கள் திலகத்தின் மனிதாபிமானத்தை உணர்ந்து நெகிழும்படி இன்னொன்றும் நான் பார்க்க நேர்ந்தது. சிம்லாவில் நாங்கள் போய் இறங்கியபோது சரோஜாதேவி அவர்களைக் கண்ட ரசிகர்களின் உற்சாகம் மிக அதிகமாக இருந்தது. 'சசுரால்' என்ற இந்திப்படத்தில் நடித்து வட இந்தியாவில் அவர் 'சசுரால் லட்கி' என்று புகழ் பெற்றிருந்த நேரம் ஆதலால் அவருக்கு நல்ல புகழ் இருந்தது, வரவேற்பு இருந்தது. ராணுவ வீரர்களின் நலத்துக்காக ,கலைநிகழ்ச்சி ஒன்று நடத்தப்பட்டபோது, அதுவரை அமைதியாக இருந்த திரு.எம்.ஜி.ஆர்.அவர்கள் நிகழ்ச்சி முடியும் நேரத்தில், ''இந்நிகழ்ச்சிக்காக என்ன தொகை வசூலாகிறதோ அதைப்போல ஒரு பங்கு நான் தருகிறேன்'' என்று எந்தவித ஆர்ப்பாட்டமுமில்லாமல் அறிவித்தார்! எங்களிடமிருந்து தனது சம்பளத்தில் பிடிக்கும்படி சொல்லி பணத்தை வாங்கி உடனடியாகக் கொடுக்கவும் செய்தார்!

இதோடு நிற்கவில்லை. ராணுவ வீரர்களின் மருத்துவ முகாம்களைச் சென்று பார்த்தபோது, நாட்டுக்காகப் போராடி



எம்.ஜி.ஆருடன்

காயம்பட்ட வீரர்களைக் கண்டு உணர்ச்சிவசப்படுவார். ஒவ்வொரு வீரரின் அருகிலும் சென்று ஆதரவாகப் பேசி அவர்களின் கஷ்டங்களைக் கேட்டு அறிவார். பழங்களும், சத்தான ஆகாரங்களும் எடுத்துச் சென்று கொடுப்பார். கூடவே, அவர்களது சிகிச்சைக்காகத் தன்னால் இயன்ற பொருள் உதவியும் செய்வார்.

அவருடன் ஒரு மருத்துவ முகாமுக்குப் போயிருந்தபோது, போரில் படுகாயம் அடைந்து உடலும் முகமும் பெரும்பகுதி கட்டுப்போடப் பட்டிருந்த ஒரு வட இந்திய வீரரைப் பார்க்க நேர்ந்தது. அவரை அன்புடன் தடவிக் கொடுத்து ஆறுதல் கூறிய எம்.ஜி.ஆர். அவர்களைப் பற்றி. ''இவர் எங்கள் தமிழ்நாட்டில் ஒரு சிறந்த நடிகர், தமிழகத்தில் மிகப் பெரிய மனிதர்'' என்று ஒரு தமிழ் வீரர் அறிமுகப்படுத்தியதும் அந்த வட இந்திய வீரருக்குக் கண்களில் தாரை தாரையாகக் கண்ணீர் பெருகுகிறது. எவ்வளவு பெரிய மனிதர் நம்மிடம் இப்படிப் பரிவுடன் நடந்து கொள்கிறார் என்று அவர் உணர்ச்சிவசப்பட்டார்!

இதுபோல் இன்னும் பல நிகழ்ச்சிகள். அவரை, ஒரு நடிகர் இவர் என்ற நினைப்பில் இருந்த அந்தப் பகுதி மக்கள், இவரின்

**'அன்பே வா' படத்தில் சரோஜா தேவி, எம்.ஜி.ஆர். (1966)**





சிம்லாவில் நடைபெற்ற கலைவிழாவில் எம்.ஜி.ஆர்.

மனிதாபிமானச் செயல்களைப் பார்த்ததும் நெகிழ்ந்து போனார்கள். தங்களின் மேல் அன்பு கொண்டவர் என்று புரிந்ததும் நேசத்தோடு நெருக்கமானார்கள். அதன்பிறகு நாங்கள் சென்னை திரும்பும்வரை எம்.ஜி.ஆர். அவர்களின் பின் ரசிகர்கள் தொடராத நேரமே கிடையாது!

இதில் ஒன்றைக் கவனிக்க வேண்டும். நான் சொல்லும் இந்த விஷயங்கள் நடந்தபோது புரட்சித் தலைவர் எந்தத் தேர்தலிலும் நிற்கவில்லை; நின்றாலும் சிம்லா மக்களின் ஓட்டு அவருக்குத் தேவையில்லை! அந்தப் பகுதி மக்களால் அவருக்கு ஆக வேண்டியது ஒன்றுமே இல்லை! எனவே, ஆதாயம் கருதாத அவரது செயல்கள் மனிதாபிமான உணர்வின் காரணமாக எழுந்தவையே என்பதில் சந்தேகம் இருக்க முடியாது. அன்று அவர் அன்போடு கொடுத்த பாலின் சுவை இன்னமும் என் நாவில் இனிக்க, சந்தோஷத்துடன் இதை உறுதியாகக் கூறுகிறேன்!

மனிதாபிமானம் என்பது இடம், பொருள், ஏவல் அறிந்து நாம் கொள்ள வேண்டிய குணமல்ல. எப்போதும், எந்தச் சூழ்நிலையிலும் நமக்குள் பதிந்திருக்க வேண்டிய ஒரு அடிப்படை பண்பு அது என்பதை நான் அறிந்து கொண்டது இன்னொரு மனிதரின் மூலமாக.

எங்கள் நிறுவனத்தில் ஒரு சீக்கியர் பணிபுரிந்து வந்தார். சர்துல் சேத்திசிங் என்ற அவர், மனிதாபிமானத்தின் முழு முதலாளி என்பேன்.



R.ரங்கசாமி, ஏவி.எம், சார்துல் சிங் சேத்தி, இயக்குனர் பஞ்சு, A.L.சீனிவாசன்.

யார் யாருக்கு எந்த நேரத்தில் எந்த உதவி தேவைப்பட்டாலும் தயங்காமல் செய்யும் நல்ல பண்பு அவருக்கு உண்டு. தெரிந்தவர்களில் எவர் வீட்டு விசேஷம் என்றாலும் அங்கு உதவிக்குப் போய்விடுவார். உதவி என்றால் பளிச்சென்று உடை அணிந்து வரவேற்பில் நின்று வந்தவர்களை வரவேற்று உபசரிக்கும் உதவி அல்ல. சமையலறையோ, சாப்பாட்டுக் கூடமோ எங்காவது நின்று வேலைகளை இழுத்துப் போட்டுக் கொள்வார். பெரிய மனிதர்களை கவனிப்பதை விட, பெரிய மனிதர்களுடன் வரும் டிரைவர்களையும் உதவியாளர்களையும் கவனித்து அவர்களுக்கு உணவு ஏற்பாடு செய்வார். என் மகளின் திருமணத்தின்போது குளிர்பானம் கரைத்துக் கொடுத்ததோடு, கார்களை நிறுத்துமிடத்தில் டிரைவர்களுக்காக ஏற்பாடு செய்யப்பட்டிருந்த உணவு பாக்கெட்களைப் பொறுப்பாகப் பிரித்துக் கொடுக்க உதவினார்.

திருமணங்கள், விசேஷங்கள்தான் என்றில்லை, எவர் வீட்டிலாவது துக்கம் நிகழ்ந்து விட்டால் அங்கு முதலில் செல்பவர் சர்துல் சேத்திசிங்தான். வருத்தத்தில் இருப்பவருக்கு ஆறுதல் அளிப்பதோடு, சடங்கு களுக்கு வேண்டிய ஏற்பாடுகளைக் கவனிப்பது வரை தன்னால் முடிந்ததைச் செய்வார்.

பொறுப்பான பதவி வகித்து, கார், டிரைவர் வசதிகளோடு இருந்தபோதும், மனிதர்களிடையே தேவையில்லாத தராதரம் பார்க்காமல் எவருக்கும் உதவுவார்.

ஒருமுறை எங்கள் நிறுவனத்தில் நிர்வாகப் பிரச்னையினால் ஆட்குறைப்பு செய்ய நேரிட்டது. ஒவ்வொரு பிரிவிலும் ஒரு சிலரையாவது வேலை நீக்கம் செய்து, தகுந்த ஈட்டுத் தொகை கொடுத்து வெளியேற்றுவது தவிர்க்க இயலாமல் போயிற்று. திரு.சிங் பொறுப்பில் இருந்த பிரிவிலும் அப்படி சிலரை வேலைநீக்கம் செய்வதற்காக தந்தை அவரை அழைத்துப் பேசினார்.

''உங்கள் டிபார்ட்மெண்டில் யார் யாரை அனுப்பி விடலாம் என்று சொல்லுங்கள்'' என்று கேட்டதும், திரு.சிங், ''யாரையாவது நீக்கித்தான் ஆக வேண்டுமா?'' என்று பலமுறை தயங்கினார்.

பின், ''அப்படி நீக்குவதால் மாதம் எவ்வளவு மிச்சப்படுத்த முடியும்?'' என்று கேட்டார். கணக்குப் போட்டுப் பார்த்து என் தந்தை தொகையை குறிப்பிட்டதும் திரு.சிங் என்ன சொன்னார் தெரியுமா?

''நீங்கள் குறிப்பிடுவது என் ஒருவனின் ஒரு மாதச் சம்பளத்துக்குச் சமமானது. இத்தனை நபர்களை வேலையை விட்டு நீக்கி அந்தப் பணத்தை மிச்சப்படுத்துவதற்குப் பதில், எனக்கு சம்பளம் தராமல் இருங்கள். கடவுள் புண்ணியத்தில் என்னுடைய கடமைகள் முடிந்து விட்டன. எனக்கு மனைவியும் இல்லை. குடும்பத்தை என் மகன் கவனித்துக் கொள்வான். இதுவரை நான் சம்பாதித்ததில் சேமித்தும் வைத்திருக்கிறேன். எனவே, சம்பளம் வாங்காமல் இருப்பதில் எனக்கு சிரமம் ஏதும் இருக்காது. தயவு செய்து அத்தனை தொழிலாளர்களின் குடும்பங்களை நடுத்தெருவில் திண்டாட விட்டு விடாதீர்கள். நம் நிறுவனத்தின் நிதி நிலைமை சீரடைந்ததும் எனக்கு மறுபடி சம்பளம் கொடுக்கத் துவங்கலாம். சந்தோஷத்தோடு அப்போது வாங்கிக் கொள்கிறேன்'' என்றார். பிறகு தனது டிபார்ட்மென்டின் வரவு செலவு எல்லாவற்றையும் காட்டி. அது லாபத்தில்தான் இயங்கி வருகிற தென்பதையும் விளக்கிக் காட்டினார். அதனால் அங்கு ஒருவரையும் வேலையிலிருந்து நிறுத்தவில்லை.

மனிதாபிமானத்தின் உச்சம் அல்லவா இது! யார் எக்கேடு கெட்டால் எனக்கென்ன, நான் நன்றாக இருந்தால் போதும் என்று உலகமே மாறிக்கொண்டு வரும் இந்நாளில் இப்படி ஒரு மனிதர் இருப்பது அபூர்வமில்லையா?

அதிலும், எங்கோ வட இந்தியாவில் பிறந்த சீக்கியர் இங்கு தென் இந்தியாவுக்கு வந்து, வேற்று மொழி, இனத்தைச் சேர்ந்த தமிழ்க் குடும்பத் தொழிலாளர்களுக்காகத் தன் நலத்தை தியாகம் செய்வது என்பது மிகச் சிறந்த மனிதப்பண்பு. பண்புள்ள இந்த மனிதர், இராயப்பேட்டையிலுள்ள ஆதர்ஷ் வித்யாலயாவில் ஒரு அறையில் வசித்தபடி அங்கு படிக்கும் குழந்தைகளுக்குப் புகைப்படக்கலையை கற்றுக் கொடுத்து வருகிறார் இப்போது!

மனிதாபிமானத்தைப் பற்றி பேசும்போது அன்னை தெரஸாவின் நினைவு வராமல் இருக்காது. அன்புக்குப் புது விளக்கம் கொடுத்து, துன்பத்தில் இருப்பவருக்குக் கை கொடுத்து உதவும் இந்த மதிப்புக் குரிய மனித தெய்வம் வாழுகின்ற நாளில் நாமும் வாழக் கொடுத்து வைத்திருக்க வேண்டும். இந்திய மக்களின் நலனுக்காக தன்னையே அர்ப்பணித்துக் கொண்டுள்ள அன்னை, நம் இந்தியாவில் பிறந்தவரா என்ன! இல்லை. மொழி, மாநிலம், நாடு என்ற பிரிவுகளைப் பாராமல் அவர் உணர்த்தும் அன்பும் நேசமும், உலகியல் அகராதியில் 'மனிதாபிமானம்' என்ற சொல்லுக்குப் பொருளாக விளங்குபவை.

இங்கிருந்து வடக்குப் பக்கம் சென்ற நமது புரட்சித் தலைவர் எம்.ஜி.ஆர். அவர்கள் அப்பகுதி மக்களுக்காக மனமிரங்கியதும், அங்கிருந்து இங்கு வந்த திரு.சிங் நம் சகோதரக் குடும்பங்களுக்காக இரக்கம் காட்டியதும், எங்கிருந்தோ வந்த அன்னை தெரஸா இந்திய மக்களின் தாயாகத் திகழ்வதும் - அன்புக்கும் அபிமானத்துக்கும் எடுத்துக்காட்டாகத் திகழ்பவை.

லயோலா கல்லூரி முதல்வர் காஷ்மீர் ராஜா, அன்னை தெரஸா, குரியகோஸ்



# 21. பெரிய மனிதர்கள்



ஒரு நாள் என் வீட்டுக்கு ஒரு கடிதம் வந்தது. அதை எழுதியவர் திரு.வி.அருணாசல ஐயர் என்பதை அறிந்தபோது மிகுந்த ஆச்சரியம் ஏற்பட்டது.

நான் மயிலை பி.எஸ்.உயர்நிலைப்பள்ளியில் படித்தபோது எனக்குத் தமிழ் ஆசிரியராக இருந்தவர் அவர். நீண்ட இடைவெளிக்குப் பின் அவர் எனக்குக் கடிதம் எழுதியதில் சந்தோஷம் ஏற்பட்டாலும், எழுதியதன் காரணம் என்ன என்று கொஞ்சம் யோசனையும் இருந்தது.

தனக்கு உடல்நிலை சரியாக இல்லை என்றும், ராயப்பேட்டை மருத்துவமனையில் இருப்பதாகவும் சொல்லி என்னைப் பார்க்க விருப்பமும் தெரிவித்திருந்தார் கடிதத்தில். தெளிவாக அவர் குறிப்பிடாவிட்டாலும்கூட, அவர் ஏதோ கஷ்ட நிலையில் இருப்பதாக எனக்குத் தோன்றியது. கடிதத்தில் அதைப்பற்றி விவரமாக எழுத விரும்பாமலோ அல்லது முடியாமலோ இருக்கிறார் என்றும் ஊகித்தேன்.

என்னால் உடனே சென்று அவரைப் பார்க்க முடியாத நிலை. நான் நேரில் சென்று பார்ப்பதைத் தள்ளிப் போட்டாலும், அவருக்குத் தேவையானதை முதலில் அனுப்பிவிட வேண்டும் என்று தீர்மானித்தேன். அதனால் எங்கள் விளம்பர இலாகாவில் பணிபுரியும் திரு.எஸ்.பி.அர்ஜுனனையும் எனது உதவியாளர் திரு.மலையப்பனையும் மருத்துவமனைக்கு உடனே அனுப்பி, என்னால் முடிந்த ஒரு தொகையை ஆசிரியரிடம் கொடுத்துவிட்டு வரச்

சொன்னேன். விரைவில் அவரை நேரில் வந்து சந்திப்பதாகத் தெரிவிக்கச் சொல்லி அவர்களை அனுப்பிவிட்டு, அருணாசல ஐயர் அவர்களின் உடல் நலம் பெற பிரார்த்தனை.செய்தேன்.

சில நாட்கள் கழித்து மறுபடி எனக்கு ஒரு கடிதம் வந்தது. ஆசிரியர்தான் எழுதியிருந்தார். ''உன்னை நேரில் சந்திக்க விரும்பினேன். உதவி கேட்க வேண்டும் என்று தோன்றினதால்தான் அப்படி எழுதினேன். ஆனால் நேரில் சந்தித்திருந்தால் உதவி கேட்டிருப்பேனா என்பது சந்தேகம்தான். என் சங்கடத்தைப் புரிந்து கொண்டு நீயாகவே பணம் அனுப்பினது ரொம்ப உதவியாக இருந்தது. என் தேவையை ஊகித்து நீ காலத்தில் செய்த உதவியை நான் எப்போதும் மறக்க மாட்டேன்' என்று எழுதியிருந்தார்.

எந்த விதத்திலாவது அவருக்கு உதவ முடிந்ததே என்று எனக்குள் ஒரு நிறைவு தோன்றியது.

பிறகு ஒரு நாள் ஞாயிற்றுக்கிழமை. அலுவலகத்தில் நண்பர்களுடன் கதை விவாதத்தில் ஈடுபட்டிருந்தபோது, என்னைப் பார்க்க யாரோ வந்திருப்பதாக அலுவலக உதவியாளர் வந்து தெரிவித்தார்.

''உங்கள் ஆசிரியர் என்று சொல்கிறார். தலையில் குடுமி வைத்திருக்கிறார். உங்களைப் பார்க்க வேண்டும் என்கிறார்'' என்று உதவியாளர் சொன்னதுமே, வந்திருப்பவர் அருணாசல ஐயர் அவர்கள்தான் என்பது புரிந்து போயிற்று.

என்னோடு கதை விவாதத்தில் ஈடுபட்டிருந்த நண்பர்கள் பண்பறிந்து அடுத்த அறைக்குள் போனார்கள்

ஆசிரியரும் அவரது மனைவியும் உள்ளே வந்தார்கள். உடன். உதவிக்கு ஒரு பையனையும் அழைத்து வந்திருந்தார்கள். ஒரு தட்டு நிறைய பழங்கள் வைத்து அதில் நான் கொடுத்த பணத்தைக் கவரில் வைத்திருந்தார்.

''நான் இன்னும் அதிக நாட்கள் உயிரோடு இருக்க மாட்டேன் என்பது எனக்குத் தெரியும். என் உடம்புக்கு ஒன்றுமில்லை என்று இவர்கள் எல்லாரும் சொன்னாலும், எனக்குத் தெரியும் என் உடம்பு பற்றி. இறக்கும்போது ஒரு கடன்காரனாக இறக்க நான் விரும்பவில்லை. அதனால்தான் இந்தப் பணத்தைத் திருப்பித் தருகிறேன். கால நேரம் அறிந்து நீ கொடுத்ததற்காக நன்றி. இதை நீ திரும்பப் பெற்றுக் கொண்டால்தான் எனக்குத் திருப்தியாக இருக்கும்.'' என்றார்.



துணைவியாருடன் பள்ளித் தமிழாசிரியர் அருணாசல ஐயர்

நான் உணர்ச்சி வசப்பட்டுப் போனேன். அவரது உயர்ந்த எண்ணம் என்னை நெகிழ வைத்தது.

அவருக்கும் அவரது துணைவியாருக்கும் வணக்கம் தெரிவித்துவிட்டு அவர்களது ஆசீர்வாதங்களைப் பெற்றேன். பிறகு அந்தப் பணத்தை அவரிடமே எடுத்துக் கொடுத்துவிட்டு, '' அன்று பள்ளிக் கூடத்தில் உங்களிடம் படிக்கும்போது, அப்பச்சி கொடுத்த பணத்தைத்தான் உங்களிடம் சம்பளமாகக் கொடுத்தேன். ஆனால் இன்று நானே நன்றாக சம்பாதிக்கும் அளவுக்கு வளர்ந்திருக்கிறேன். உங்களுக்கு இதைக் கொடுக்கும் அளவுக்கு என்னை சம்பாதிக்க வைத்திருக்கிறார் என் தந்தை. அதனால் இந்தப் பணத்தை நீங்கள் குருதட்சணையாக ஏற்க வேண்டும். இதை ஏற்றால்தான் எனக்கு ஒரு நிறைவு ஏற்படும்'' என்று சொன்னேன்.

அவரும் மிகுந்த நெகிழ்ச்சியுடன் என்னை அணைத்துக் கொண்டார். சந்தோஷத்தோடு பணத்தை எடுத்துக் கொண்டார். ''நீ இப்படி சொல்வது ரொம்ப மகிழ்ச்சியாக இருக்கிறது. நீ சொன்ன மாதிரி குருதட்சணையாக இதை ஏற்கிறேன். கடனாக நினைக்கவில்லை. உன் வார்த்தைகள் ஆறுதலாக இருக்கின்றன'' என்று சொல்லி விடைபெற்றார்.

அவர் அஞ்சிய மாதிரி சிறிது காலத்தில் மறைந்து போய் விட்டார். ஆனால், அவரும் அவரது வார்த்தைகளும் என் மனதில் என்றும் மறையாமல் பதிந்து விட்டதை எப்போதும் மறக்க முடியாது.

கல்வியும், ஒழுக்கமும், போதிக்கும் ஆசிரியர்கள் பெரும்பாலும் பரந்த மனமுடையவர்கள். பொறாமை என்பது சிறிதும்

இல்லாதவர்கள். எத்தனை பெரிய பதவிக்குத் தன் மாணவன் உயர்ந்தாலும், அந்த வளர்ச்சியில் ஆசிரியர்கள் மகிழ்ச்சிதான் அடைவார்களே தவிர பொறாமை உணர்ச்சி என்பதே தலைகாட்டாது.

'நாட்டின் பிரதமராக இருப்பவர் என் மாணவர்', 'ஜனாதிபதியாகப் பதவி வகிப்பவர் என்னிடம் படித்தவர்', 'இந்த விஞ்ஞானிக்கு நான் பாடம் எடுத்திருக்கிறேன்' என்றெல்லாம் கூறி பெருமிதப்படுவதுதான் ஆசிரியப் பெருமக்களின் இயல்பு. எந்த நிலையிலும் ஆதாயம் எதிர்பார்க்காத பரந்த மனமும், உளமாரப் பாராட்டும் பண்பும் கொண்ட ஆசிரியர்களின் ஆசீர்வாதங்கள் நம்மை நிச்சயம் நல்ல முறையில் நடத்திச் சென்று உயர்த்தும்.

இந்த முறையில், அருணாசல ஐயர் வாழ்த்துக்களை நான் மிகப் பெரிதாகக் கருதி சந்தோஷப்படுகிறேன். வசதிக்குறைவாக இருந்த போதிலும், உடல்நலம் இல்லாத நேரத்திலும், கடனாளியாகச் சாக விரும்பவில்லை என்ற அருணாசல ஐயர் அவர்களின் உன்னத நோக்கம் அவரை மிகப் பெரிய மனிதராகத்தான் என்னை நினைக்க வைக்கிறது.

திரையுலகில் நான் பார்க்கும் இன்னொரு மிகப் பெரிய மனிதர் திரு.டி.ராமானுஜம் அவர்கள்.

இந்தத் துறையில் அனைவராலும், 'திரையுலகத் தந்தை' என்று அன்புடன் அழைக்கப்படும் அவரைத் தெரியாதவர்கள் எவரும் இருக்க முடியாது. பொதுவாக நடிக, நடிகையர், டைரக்டர்கள், தயாரிப்பாளர்கள் ஆகியவர்களைப் பற்றி பலரும் அறிந்து வைத்திருப்பார்கள், டி.ராமானுஜம் அவர்களைத் தெரியவில்லை என்றால், அவர்கள் தமிழ்த் திரைப்படத்துறையில் முழுமையாக சம்பந்தப்பட்டவர்கள் அல்ல என்று என்னால் ஆணித்தரமாகக் கூற முடியும்.

இவர் வெறும் திரையரங்க உரிமையாளர் மட்டுமல்ல, ஒரு உண்மையான சினிமா பக்தர் என்றுதான் சொல்ல வேண்டும். திரையுலகத்தின் மீது அப்படி ஒரு மோகம் அவருக்கு உண்டு. எளிமை, பண்பு ஆகியவற்றின் மொத்த உருவமாகத் திகழும் இவரின் நிதான குணத்தைப் பற்றி பிறிதொரு அத்தியாயத்தில் குறிப்பிட்டிருக்கிறேன்.

எந்தப் பிரச்னையாக இருந்தாலும் அதைத் தன் பிரச்னை போன்று நினைத்து ஈடுபட்டு அதைத் தீர்க்க முனைவார்.

சாதாரணமாகத் திரையுலகில் ஏதாவது ஒரு பிரச்னைக்காகக் கூட்டம் கூட்டப்படுகிறது என்றால், அந்தக் கூட்டத்துக்கு பிரச்னையில் சம்பந்தப்பட்ட நபர்கள், அல்லது அந்தப் பிரிவைச் சேர்ந்தவர்கள்



அட்வகேட் N.C.ராகவாச்சாரி, D.ராமானுஜம், K.A.கிருஷ்ணசாமி, கலைஞர் கருணாநிதி.

மட்டுமே வருவார்கள். மற்றவர்கள், அழைப்பு இருந்தாலும், அது நம் பிரச்னை இல்லை என்றால் வர மாட்டார்கள். பிரச்னை ஏதாவது வந்துவிடுமோ என்று பயந்துகூட சில சமயம் கூட்டத்துக்குப் போகாமல் இருந்து விடுவதும் சிலருக்குப் பழக்கம். எழுதப்படாத சட்டமாகவே இதைக் கடைப்பிடிப்பதில் பெரும்பாலோனோர் விதிவிலக்கல்ல.

ஆனால் ராமானுஜம் அவர்கள் மட்டும் இந்தப் பழக்கத்துக்கு அறிமுகமில்லாதவர். தன் சுய ஆதாயம் கருதாமல் கூட்டத்துக்கு வந்து, பிரச்னையை நன்கு புரிந்து கொண்டு தீர்க்கப் பார்ப்பார். தயாரிப்பாளரோ, விநியோகஸ்தரோ, திரையரங்கு உரிமையாளரோ - யார் பாதிக்கப்படுகிறார்களோ அவர்களுக்கு சாதகமாகப் பேசி, நியாயத்தை நிலைநாட்டத்தான் பாடுபடுவார்.

ஒருமுறை, தமிழக முதல்வராக அப்போது இருந்த கலைஞர் கருணாநிதி அவர்களைப் பார்க்கச் சென்றிருந்தோம். பல்வேறு விஷயங்களைப் பற்றி பேசிவிட்டுக் கிளம்பும்போது திரு.ராமானுஜம் கலைஞரிடம், ''எனக்கு ஒரு பர்ஸனல் பிராப்ளம்'' என்று மெதுவாகச் சொன்னார்.

எனக்கு ஆச்சரியமாக இருந்தது. எனக்குத் தெரிந்து அவர் தனிப்பட்ட முறையில் யாரிடமும் எதுவும் கேட்டதில்லை. இப்போது கலைஞர் அவர்களிடம் கேட்கிறாரே, இந்த சந்தர்ப்பத்தில் நாம் இங்கு இருப்பது நாகரிகம்தானா என்ற குழப்பம் ஏற்பட்டது. ஆனால், எங்களுடன் வந்த மற்றவர்கள் எல்லாம் இருக்கும்போது நாமும் இங்கிருப்பது தவறில்லை என்று சமாதானப்படுத்திக் கொண்டு நின்றேன்.

ராமானுஜம் அவர்கள் தயக்கத்தோடு ஒரு ஊரைக் குறிப்பிட்டு ஆரம்பித்தார். ''அந்த ஊரில் தியேட்டர்கள் மூடிக்கிடக்கின்றன. தியேட்டர்களில் நடந்த சில சட்ட விரோத சம்பவங்களுக்காக

லைசன்ஸ் நிறுத்தி வைக்கப்பட்டிருப்பதால் தியேட்டர்களில் படக்காட்சிகள் ஏதும் நடக்கவில்லை. தவறை உணர்ந்து அவர்கள் திருந்த ஒரு சந்தர்ப்பம் அளித்து தியேட்டர்களைத் திறக்க லைசன்ஸ் அளித்தால் உதவியாக இருக்கும். இதனால், அரசுக்கு வருவாயும் கிடைக்கும், திரைப்படத் தயாரிப்பாளர், வினியோகஸ்தர்களுக்கும் நன்மை உண்டாகும். கொஞ்சம் அவகாசம் கொடுத்துப் பார்த்தால் தவறு நீங்கிவிட வாய்ப்பு உண்டு''

அவர் 'சொந்தப் பிரச்னை' யாகக் குறிப்பிட்டது எதை என்று புரிகிறதா! தியேட்டர் உரிமையாளர்களின் பிரச்னையைத் தன் சொந்தப் பிரச்னையாகக் குறிப்பிட்ட அவரது பரந்த மனதைக் குறித்து அங்கிருந்த எங்கள் எல்லாருக்கும் வியப்புத்தான் ஏற்பட்டது.

இப்பேர்ப்பட்ட இந்தப் பெரிய மனிதரை முன் உதாரணமாகக் கொண்டு நாம் செயல்பட்டாலே போதும், நமது சுயநலம் விலகி பொது நலம் நமக்குள் ஊற்றெடுக்கத் துவங்கும்.

ராமானுஜம் அவர்கள் திரை உலகுக்கு அமரர் டைரக்டர் கே.சுப்ரமணியம் அவர்களால் அழைத்து வரப்பட்டவர். திரைப்பட வர்த்தக சபையில் செயலாளராக இருபத்தைந்து வருடங்கள் சிறப்பாக் பணியாற்றியவர். பொருளாளர், உதவித் தலைவர், தலைவர் ஆகிய பதவிகளையும் வகித்தவர். தான் மட்டும் பொறுப்புக்களைச் சுமந்து கொண்டிருக்காமல், ஏணி போல் நின்று பலரையும் பதவியில் ஏற்றி வைத்தவர்.

ஏணியில் கால் வைத்து ஏறியவர்கள், மேலே போனதும் ஏணியை எட்டி உதைப்பது எந்தத் துறையிலும் சகஜம்தான். இவரிடமும் இப்படி நன்றி மறந்தவர்கள் உண்டு. ''அவர்களுக்கு ஏன் உதவுகிறீர்கள்? நன்றியுடன் அவர்கள் இருக்கிறார்களா?'' என்றால், ''நன்றி எதிர்பார்த்து நான் செய்யவில்லை'' என்பார் கொஞ்சம்கூட வருத்தமில்லாமல்.

பிற்பட்டோர் நலனுக்காகப் பாடுபட்டு உழைத்த, ஜனாதிபதி திரு.ஆர்.வெங்கட்ராமன் அவர்களின் கையினால் தாமிரப் பதக்கம் பரிசு பெற்ற திரு.தேவராஜ ஐயங்கார் அவர்களின் மகனான டி.ராமானுஜம் அவர்கள், தந்தையைப் போலவே மக்கள் நலனைக் கருத்தில் கொண்டு பணியாற்றுபவர். உடல்நலக்குறைவுகூட அவரது மனப்பான்மையைத் தடுத்துவிட முடியாது.

இந்தப் பெரிய மனிதர்களைப் பற்றி பேசுவதும் எழுதுவதும் எல்லையில்லா மன நிறைவைத் தரும் விஷயங்களாக எனக்குப் படுகின்றன.

# 22. எங்கே நிம்மதி!



'முதல் மரியாதை' படத்தில் கவிஞர் வைரமுத்து 'பூங்காற்று திரும்புமா?' என்ற பாடல் ஒன்றை எழுதியிருந்தார். இப்பாடலுக்காகப் பரிசும் பெற்றார்.

பாடலில் ஒரு வரி - 'மெத்தையை வாங்கினேன், தூக்கத்த வாங்கலே' என்று இருக்குமே, கவனித்திருக்கிறீர்களா?

பணத்தினால் வசதியை வாங்க முடியும், நிம்மதியை வாங்க முடியாது என்று என் தந்தை சொல்வார். அவர் சொன்னதைத்தான் இந்த வரி உறுதிப்படுத்துகிறது.

நிம்மதி என்பது நம் மனதுக்குள் எப்படி ஏற்படுகிறது என்று கேட்டால் தெள்ளதெளிவான பதில் எதனையும் குறிப்பிட்டுக் கூறிவிட முடியாது. 'திருப்தி' என்ற வார்த்தை எப்படி ஆளுக்கு ஆள் ஒவ்வொரு பொருளைத் தருமோ, அப்படி நிம்மதி என்பதும் மாறுபடும் விஷயம்தான்.

நல்ல வசதியான வாழ்வு; குளுமையான ஏ.ஸி. அறை; எந்த சௌகர்யத்துக்கும் குறைவில்லை. இத்தனையும் கொண்டவர்கள் தூக்க மாத்திரை போட்டும்கூட தூங்காமல் புரண்டு புரண்டு இரவைக் கழிப்பது மிக சகஜமாக நான் பார்க்கும் விஷயம்.

நான் இன்னொன்றையும் கவனித்திருக்கிறேன். மதிய வெயில், கொளுத்தும் சூடு, லோடு மணலை ஏற்றியபடி போகும் லாரியில், அந்த வெப்பத்தை உணரக்கூட செய்யாமல் நிச்சிந்தையாகக் கைகால்களை நீட்டியபடி அசந்து தூங்கிக் கொண்டு போகிறவர்களையும் பார்த்திருக்கிறேன். சற்று வழுக்கினால் கீழே விழுந்து விடக் கூடிய நிலையில், மணல் சூட்டைப் பொருட்படுத்தாமல், தெருவில் வாகனங்களின் இரைச்சல் காதில் விழாமல் அந்த ஆளால் எப்படித் தூங்க முடிகிறது?

அவனுக்கு மட்டும் நிம்மதி எங்கிருந்து வருகிறது?

யோசித்துப் பார்த்தால் ஒன்று புரிகிறது - நிம்மதியைத் தேடும் வழிகளை விட நிம்மதியைத் தொலைக்காமலிருக்கக் கற்பதே நல்லது என்று!

சில சமயங்களில், நமது தலையெழுத்துக்கேற்ப சில சூழ்நிலைகள் ஏற்படுவது உண்டு. நம் முயற்சிகளை மீறி, நமக்கு விதிக்கப்பட்டவை நம்மை எப்படியோ தேடி வந்துவிடும். நல்லதோ, கெட்டதோ - இவற்றைக் தவிர்க்க முடியாது.

ஆனால், நம் பழக்க வழக்கத்தினால் வாழ்வைக் கெடுத்துக் கொண்டு நிம்மதியைத் தொலைக்கும் சந்தர்ப்பங்கள் உருவாவதற்கு நாம்தான் பொறுப்பாளி.

சிலருக்கு யாரையாவது எதற்காவது திட்டிக் கொண்டே இருக்கும் குணம் இருக்கும். தங்களிடம் எவ்வளவுதான் நல்ல விஷயங்கள் இருந்தாலும், இல்லாத ஒன்றைக் குறித்து குறைப்பட்டுக்கொள்ளும் குணமும் இருக்கும். இவர்கள் தங்கள் குத்தல் பேச்சினாலும், சலிப்பு வார்த்தைகளாலும் மற்றவர்களது நிம்மதியைக் குலைத்து விடுகிறார்கள் என்பது ஒரு பக்கம் இருந்தாலும், தங்கள் நிம்மதியை இழக்கவும் தாங்களே காரணமாகி விடுகிறார்கள் என்பதுதான் உண்மை.

சமீபத்தில்கூட மிகவும் வேண்டிய ஒருவரைப் பார்க்கச் சென்றபோது, சுமார் ஒரு மணி நேரம் வேறு எவரையோ திட்டுகிற மாதிரி அவர் என்னைப் பற்றியே என்னிடம் திட்டிப் பேசினார். நானும் அத்தனையும் கேட்டுவிட்டு, ''நீங்கள் சொல்வதுதான் சரி'' என்று கூடச்சேர்ந்து சொல்லி வந்து விட்டேன். வீட்டுக்கு வந்ததும் என் மருமகள் நித்யா கேட்டாள், ''உங்களைப் பற்றி இவ்வளவு பேசினார்களே, உங்களுக்கு வருத்தமாக இல்லையா?'' என்று. நான் சொன்னேன், ''இல்லை'' என்று. ''அவர்களுக்கு யாரையாவது இப்படித் திட்டுவதன் மூலம் ஒரு 'அவுட்லெட்' - அதாவது வடிகால் கிடைக்கிறது என்றால் திட்டிவிட்டுப் போகட்டுமே! இதனால் எனக்கு ஒரு நஷ்டமும் இல்லை'' என்றேன்.

ஆனால், ஒரு விஷயம். என்னைத் திட்டியதன் மூலம் அவர்களுக்கு நிம்மதி தொலைந்து போயிருக்கும் என்றுதான் நினைக்கிறேன். நம் செயல்களின் உண்மை நோக்கங்களையும் விளைவுகளையும் மனசுதான் நன்றாக அறியுமே!

திருப்தி என்ற ஒன்று இல்லாமல் போவதுகூட நிம்மதியை இழக்கக் காரணமாகிவிடுகிறது. இதுவரை சிறப்பான வாழ்க்கையை



'முதல் மரியாதை' படத்தில் சிவாஜி கணேசன், ராதா (1985)

வாழ்ந்து, இனியுள்ள காலத்துக்கும் பயமின்றி வாழ வசதியிருந்தாலும்கூட, ஏதோ ஒரு திருப்தியின்மை பலர் மனதுக்குள்ளும் இருக்கவே செய்கிறது. அருமை பெருமையாய் வாழ்ந்து, வயதாகி துணையை இழந்து தனியாக வாழ நேரிடும் மனிதரிடம்கூட, எங்காவது எவர் வீட்டிலாவது சதாபிஷேகம் போன்ற விசேஷங்கள் நடப்பதாகத் தெரிந்தால், ''அவர் வீட்டிலெல்லாம் நடக்கிறது, நம் வீட்டில் இப்படி ஒரு வைபவம் நடக்க முடியாமல் போய்விட்டதே!'' என்று ஒரு குறை வந்து உட்கார்ந்து கொண்டுவிடுகிறது. நன்றாக வாழ்பவர்களை வாழ்த்த மட்டும் மனமே வருவதில்லை, நாம் இத்தனை நாள் நல்ல வாழ்க்கையை அனுபவித்தும்கூட!

இப்படி எல்லையில்லாத எதிர்பார்ப்புகள், தேவையற்ற ஆசைகள், அடக்க முடியாத வேதனைகள் என்று பலவும் சேர்ந்து நம் மனத்தை பாதிக்கின்றன. இவற்றால் நமக்குள்ளே ஓயாத சிந்தனைகள், ஏதேதோ கோபங்கள், என்னென்னவோ ஏமாற்றங்கள். மனம் அமைதியடைந்து ஓய்வாக உறங்குவது எப்படி முடியும்? நிம்மதியான தூக்கத்தின் சுகத்தை நமது மனமும் உடம்பும் அனுபவிப்பது எப்போது?

ஒரு குழந்தை உறங்குவது போன்ற அமைதி பெரியவர்களுக்கு எப்போதுமே கிடைப்பதில்லை. வளர வளர அறிவும் உடலும் வளர்வதுபோல், தேவையில்லாத சிந்தனைகளும் குணங்களும் கூடவே வளர்ந்து விடுகின்றன. இவற்றை அவ்வப்போது

அடையாளம் கண்டு களைந்து விட்டால், களங்கமில்லாத மனது நிம்மதியை வரவழைக்கும்.

தன்னைப் பற்றி தானே பரிதாபப்பட்டுக் கொள்ளும் 'சுயபரிதாபம்' என்கிற வியாதி இருக்கிறதே, அதுதான் நம் நிம்மதியை அழிக்கும் மிகப் பெரிய விரோதி! 'என்னைப் போல யாருக்குமே கஷ்டம் வந்திருக்காது, உலகத்திலேயே நான்தான் பாவப்பட்ட மனிதன், எனக்கு மட்டும்தான் வாழ்க்கை பூராவுமே ஒரே துன்பமயமாக அமைந்து விட்டது' என்ற பரிதாபப் புலம்பல்களால் ஒரு நன்மையும் இல்லை. துன்பமும் துயரமும் இல்லாத மனிதரே இருக்க மாட்டார்கள். இன்பம் - துன்பம், நிறை - குறை நிறைந்ததுதான் மனித வாழ்வு!

எனவே, இல்லாததைப் பற்றி நினைத்து நினைத்து தாழ்வு மனப்பான்மையோடு ஆற்றாமைப்படுவதைவிட, இருப்பதை நினைத்து சந்தோஷப்படவும் நிறைவடையவும் கற்க வேண்டும். இந்த மாதிரியான ஒரு மாறுதலான சிந்தனை, ஆண்டவன் அருளால் நாம் அடைந்துள்ள நல்ல விஷயங்களைப் பற்றிய மகிழ்ச்சியையும் தன்னம்பிக்கையையும் வளர்க்கும்.

வசதியிலும், பேர் புகழிலும் உயர்ந்திருப்பவர்களை அண்ணாந்து பொறாமைப்படுவதைக் குறைத்துக் கொண்டு, நம்மை விட தாழ்ந்த நிலையில் இருப்பவரைக் கண்டு மனமிரங்கவும், கடவுள் நம்மை அப்படிப் படைக்காமல் இருந்ததற்கு நன்றி சொல்லவும் துவங்குவதுதான் ஆரோக்கியமான செயல். உயர்ந்திருப்பவர்களை முன் மாதிரியாகக் கொண்டு முயற்சி செய்தால், நாமும் தண்ணீரில் மூழ்கிப்போய் விடாமல் படிப்படியாக உயர்ந்து வளர்வது சாத்தியமாகும்.

நிம்மதியைப் பெற நான் முயன்று பார்த்து ஓரளவு வெற்றியும் கண்ட வழி ஒன்று உண்டு. அதுதான் சுய விமர்சனம்.

தேவையில்லாத சிந்தனைகளையும் தீய குணங்களையும் இனம் கண்டு கொள்வது இந்த சுய விமர்சனத்தினால்தான் என்று எனக்கு ஒரு நம்பிக்கை. நம்மை நாமே நன்றாக ஆராய்ந்து பார்த்து, நம் மனதுக்குள் இருக்கும் எண்ணங்களையும் அன்றாடம் நாம் ஈடுபடும் செயல்களையும் பாரபட்சமின்றி விமர்சனம் செய்ய முடிந்துவிட்டால், பெருமளவுக்கு நம் நடத்தை சீரடைந்து விடுகிறது.

தினந்தோறும் இரவில், அந்த நாளின் வேலைகளை முடித்துவிட்டு ஓய்வாக இருக்கும்போது இப்படிப்பட்ட ஒரு விமர்சனத்தை மிக எளிதாக எவரும் செய்யலாம்.

'இன்று யார் யாருடன் பேசினோம்? என்ன பேசினோம்? அதில் எத்தனை நல்ல விஷயங்கள் இருந்தன? நம் வார்த்தைகளினால் எவருக்காவது நன்மையோ, நிம்மதியோ, ஆறுதலோ, சந்தோஷமோ கிடைத்திருக்குமா? நாளை முதல் இந்த நல்ல பேச்சை இன்னும் அதிகம் வளர்த்துக் கொள்ள வேண்டும். இன்னும் அதிகமான நபர்களுக்கு நல்லது செய்யும் விதத்தில் நம் பேச்சும் செயலும் இருக்க வேண்டும். யாரையாவது நம் பேச்சு புண்படுத்தி இருக்குமோ? அப்படியானால் பேசும் முறையை மாற்றிக் கொள்ள வேண்டும்'.

ஒளிவு, மறைவின்றி, கூச்சமின்றி நம்மைப் பற்றிய உண்மையான விமர்சனத்தை நம்மை விடவும் நேர்மையான முறையில் வேறு எவர் அளிக்க முடியும்! இதன்மூலம், வேண்டாதவற்றைக் குறைத்து, மன உறுத்தல் ஏற்படுத்துபவற்றை நீக்கி, நிறைவையும் சந்தோஷத்தையும் அளிக்கக் கூடியவைகளை கவனத்துடன் வளர்த்துக் கொண்டால் 'நிம்மதி' என்கிற பெரிய வரம் நிச்சயம் கிடைக்கும்.

S.P.பாலசுப்பிரமணியம், வைரமுத்து, **கவிதா கிருஷ்ணமூர்த்தி**, R.D.பர்மனுடன்.



# 23. அடுத்தவர் கருத்துக்கு மதிப்பு



என் தந்தையாரைப் பற்றிச் சொல்வதற்கு ஏராளமான விஷயங்கள் இருக்கின்றன.

வாழ்வின் ஒவ்வொரு படியிலும் ஒவ்வொரு விஷயத்திலும் அவரது நினைவு வராத நாளே இல்லை எனலாம். இப்போதும் அவரது பெருந்தன்மையான குணத்தை மீண்டும் நினைவூட்டும் விதமாக அமைந்தது ஒரு சின்ன நிகழ்ச்சி.

ஒரு கலந்துரையாடல். நண்பர் ஒருவர் ஏதோ ஜோக் சொல்ல ஆரம்பிக்க, மற்றொருவர், ''ஓ, அதுவா! எனக்கு ஏற்கனவே தெரியுமே!'' என்று சட்டென்று குறுக்கே புகுந்தார். அதோடு விட்டாரா? ''நீ தப்பாக சொல்கிறாய், அது அப்படியல்ல'' என்று திருத்தம் வேறு செய்தார்.

ஜோக் சொல்லத் துவங்கிய நண்பரின் முகம் ஒரு நிமிடத்தில் தொங்கிப் போயிற்று. சிரித்து மகிழ்ந்து இனிமையாக இருந்திருக்க வேண்டிய அந்த நேரம், ஒருசில நிமிடங்களுக்கு கனமான மௌனத்தைப் போர்த்திக் கொண்டது.

அவரை முழுவதும் பேசவிட்டு ஜோக்கை எல்லாரும் ரசித்திருக்கலாமே என்றுதான் எனக்குத் தோன்றியது. ஏற்கனவே கேள்விப்பட்ட விஷயமாக இருந்திருந்தாலும், அவர் முடிக்கும் வரை காத்திருந்து பிறகு 'நான்கூட கேட்டிருக்கிறேன்' என்று நாசூக்காகக் குறிப்பிட்டிருக்கலாமே!

அல்லது, பத்து பேருக்கு நடுவில் அவர் சொல்லும்போது, 'நமக்கு மட்டும்தானே தெரியும், மற்றவர்களும் இப்போது தெரிந்து கொள்ளட்டுமே, மற்றவர்கள் சிரிப்பதைப் பார்த்து ரசிக்கும் இன்பத்தைக் கெடுக்க வேண்டாமே' என்று பெருந்தன்மையாய்

அவரும்கூட சிரித்துவிட்டுப் போயிருக்கலாமே! இதனால் என்ன குறைந்துவிடப் போகிறது!

இங்கேதான் தந்தையின் நினைவு வந்தது.

யாராவது கோபத்தில் குறையாக ஏதாவது சொன்னால்கூட, அவர்களைப் பேசவிட்டு முழுமையாகக் கேட்டுக் கொள்வார். அவசரத்திலோ அல்லது கோபத்தில் வேண்டுமென்றேதானோ - அந்த நபர் தவறாகச் சொல்லிவிட்டாலும், அவர் முடிக்கும் வரை பொறுத்திருந்துவிட்டுப் பிறகு சொல்வார், ''நீங்கள் இப்படிச் சொல்கிறீர்கள். ஆனால் உண்மையில் நடந்தது வேறு. அதை நீங்கள் கோபத்தில் இருந்தால்தான் அப்போதே சொல்லவில்லை'' என்பார்.

இதேபோல், ஒருவர் வந்து ஒரு கருத்தைச் சொல்லிவிட்டுப் போவார். இன்னொருவர் வந்து அதே விஷயத்தைப் பற்றி பேச ஆரம்பித்தால், 'எனக்குத் தெரியும்' என்று வெட்டிவிட மாட்டார். இவர் கோணத்திலிருந்து அந்த விஷயத்தை எப்படிச் சொல்கிறார் என்று பார்ப்பார். இதையே பத்து பேர்கள் வந்து சொன்னாலும், அத்தனை பேரிடமும் முதல் முறையாகக் கேட்கிற மாதிரி கேட்டுக் கொள்வார். கடைசியாக மேலும் விசாரித்துவிட்டு வர நம்மையும் அனுப்புவார்.

ஒரு இடத்திலிருந்து மட்டும் கேள்விப்படும் செய்தியைக் கொண்டு ஒரு முடிவுக்கு வந்துவிட மாட்டார். பலரிடம் கேட்டுத் தெரிந்து கொள்வார்.

ஸ்டுடியோவில் காலையில் படப்பிடிப்பு ஆரம்பமாகும் நேரத்தைப் பற்றி விசாரிப்பார். ''பத்து மணி இருக்கும், அப்போது முதல் ஷாட் எடுத்தார்கள்'' என்று நாம் சொன்னால், ''பத்து மணியா?



நாகிரெட்டியாருடன் ஏவி.எம்.

இருக்காதே, பதினோரு மணி ஆகிவிட்டது போலிருக்கிதே!'' என்பார். நமக்கு சந்தேகம் வந்துவிடும்! உடனே போய் சரியாக விசாரித்துப் பார்த்தால் அவர் சொன்னதுதான் சரியாக இருக்கும்!

நம்மைக் கேட்பதற்கு முன்பே பலரிடம் கேட்டு உறுதிப்படுத்தி வைத்திருப்பார் என்பதால், அவரிடம் விஷயம் கூறும் எவருமே சற்று ஜாக்கிரதையாகத்தான் இருப்பார்கள். தவறு ஏற்பட்டு விட்டதென்றால் அவர் வாயிலிருந்து வரும் வார்த்தைகள், ''என்னப்பா இது? கொஞ்சம் அக்கறையாக இருங்கள்!'' என்பவைதான். இவை போதும், நம்மை உறுத்தலுடன் தலைகுனிய வைக்க!

அடுத்தவர்களை பேசவிட்டு கருத்தை சேகரிக்கும் கலை அவரிடம் நன்றாகவே இருந்தது. ,பொறுமையாகக் கேட்டு, மற்றவர்களைப் பேச வைத்து விஷயங்களை கிரகித்துக் கொள்வதில் அவர் கைதேர்ந்த திறமைசாலி. அத்தனை விஷயங்களையும் அவர் எந்த விதத்தில் எடுத்துக் கொள்கிறார் என்பதும் நமக்கு எளிதில் பிடிபட்டு விடாத ஒரு உத்தி!

ஒரு தரம், சீட்டுக் கம்பெனி வைத்துள்ள என் நண்பர் ஒருவர் தந்தையிடம் பேச வந்தார். ''அரை மணி நேரம் அவரோடு பேச சந்தர்ப்பம் கிடைத்தால் போதும், எப்படியாவது அவரை என் கம்பெனியில் சீட்டு சேர வைத்துவிட என்னால் முடியும்'' என்றார். இரண்டு மணி நேரத்துக்கும் மேலாக தன் கம்பெனியில் சீட்டு சேர்வதற்கான விவரங்களை தந்தையிடம் எடுத்துக் கூறினார். அத்தனை நேரமும் குறுக்கே பேசாமல் கேட்ட தந்தை, அவர் பேசி முடித்ததும், அந்தச் சீட்டுக் கம்பெனியின் செயல்பாடுகளில் காணப்பட்ட குறைகளை விளக்கமாக விவரித்து, ''இந்த மாதிரி கணக்கின் அடிப்படையில் கம்பெனி நடந்தால் நிச்சயம் நஷ்டம்தான் ஏற்படும்'' என்றும் சொன்னார்! எதிராளியைப் பேசவிட்டு, விஷயத்தைப் புரிந்து கொண்டு, உடனே தன் கருத்தையும் தவறாமல் சொல்லி விடுகிற திறமை அவருக்கு இருந்தது.

எனவேதான், சொல்கிற ஆசாமியின் தராதரத்தை வைத்து சொல்லப்படும் செய்தியை எடைபோட மாட்டார். சொல்லப்படும் விஷயம்தான் முக்கியம் என்பது அவர் எண்ணம்.

எல்லார் கருத்தும் நல்ல கருத்துதான், நாம் எதை ஏற்றுக் கொள்கிறோம் என்பது நம்முடைய தேவையைப் பொறுத்தது என்பார். இதேபோல் எல்லாத் தொழிலும் நல்ல தொழில்தான் என்பது இவர் அபிப்ராயம்.

''சினிமாத் தொழில் 'ரிஸ்க்' கான தொழில்தான். மற்ற எந்தத் தொழிலிலும் இருப்பது போலவே இதிலும் நல்லது கெட்டது இரண்டும் உண்டு; நல்லவர்களும், குணத்தில் குறைந்தவர்களும்கூட கலந்துதான் இந்தத்துறையில் இருக்கிறார்கள். வெற்றி தோல்வியும்கூட மற்றெந்த துறையிலும் உள்ளதைப் போலத்தான்'' என்பார்.

தொழில் எதுவானாலும் அதில் முழு ஈடுபாடு, அக்கறை இல்லாவிட்டால் அறிவுக்கோ திறமைக்கோ மதிப்பிருக்காது என்றும் தந்தையார் உறுதியாகக் குறிப்பிடுவார். ''வாழ்வில் நல்லவர்களையும் தீயவர்களையும் கலந்துதான் சந்திக்க வேண்டி வரும்; மாற்றுக் கருத்துடையவர்களை சந்திக்க நேரிடும்போது மிரண்டுவிடக் கூடாது.''

தன் எண்ணம்தான் உயர்ந்தது என்று வீண் பிடிவாதம் பிடிக்காமல், மாற்றுக் கருத்தை வெறும் வீம்புக்காக எதிர்க்காமல், தன் நினைப்பையும் தயங்காமல் மாற்றிக் கொண்டுவிடும் அவர் குணம் எனக்கு மிகவும் பிடித்தமான ஒன்று; நான் பின்பற்ற முனைந்து கொண்டிருக்கும் ஒன்று.

பத்திரிகை ஆசிரியர் சாரதியுடன் ஏவி.எம்.



# 24. நம் முதுகு நமக்குத் தெரியாது



**எ**ங்கள் தகப்பனாரின் நண்பர் ஒருவர் இருக்கிறார். பெயர் சொல்வதைத் தவிர்க்க விரும்புகிறேன்.

அவர் வந்து பேச ஆரம்பித்தால் லேசில் நிறுத்த மாட்டார். ''என்னடா சரவணா!'' என்று துவங்குவார். அவ்வளவுதான்! பிறகு மணிக்கணக்காகப் பேசிக் கொண்டே போவார். அவர் பேச்சை எதுவுமே தடை செய்ய முடியாது.

இடையில் யார் வந்து போனாலும் கவலைப்பட மாட்டார். டெலிபோன் மணி ஒலித்தால்கூட, அதில் நான் பேசி முடிக்கும் நேரம்தான் அவர் சும்மா இருப்பார். பிறகு மறுபடி பேச்சைத் தொடர ஆரம்பித்து விடுவார். நான் கவனிக்கிறேனா, புரிந்து கொள்கிறேனா, அவர் பேச்சை ஒப்புக் கொள்கிறேனா என்றெல்லாம் அவர் கவலையே பட மாட்டார்.

இதற்கென்ன காரணம்? தலைமுறை இடைவெளிதான் என்று கருதுகிறேன்.

அவர் என் தந்தையின் வயதொத்தவர், அவருடைய நண்பர். அவர் காலத்திய விஷயங்கள் பல நம் காலத்துக்குப் பழைய செய்திகளாகப் போயிருக்கும். எனவே, அவர் நமக்கு போரடிக்கலாம். ஆனாலும் அவர் பேசுவதைக் கேட்டுக் கொண்டேயிருப்பேன் நான், முகம் சுளிக்காமல்.

இதைக் கவனித்த தந்தையின் இன்னொரு நண்பர், ''இவன் பேசுவதை எப்படி உன்னால் கேட்டுக் கொண்டு உட்கார்ந்திருக்க

முடிகிறது? இதை எப்படி சகித்துக் கொள்கிறாய்?'' என்று கேட்டார்.

நான் கூறினேன், ''எங்க அப்பச்சி எங்களுக்கு எல்லா வசதிகளும் செய்து வைத்துவிட்டுப் போயிருக்கிறார். நிறைய பண வசதி, அமைதியாக வாழ வசதி, வியாபார முன்னேற்றத்துக்கான வசதி அத்தனையும் அப்பச்சி கொடுத்துவிட்டுப் போனது. இதையெல்லாம் சந்தோஷமாக அனுபவிக்கிறேனே, அதே மாதிரிதான் இந்த நண்பரும். இவரையும் அப்பச்சிதான் அறிமுகப்படுத்தினார். இவர் பேச்சையும் நான் முகம் கோணாமல் ஏற்றுக் கொண்டால்தான் சரியாக இருக்கும். இவரை மறுத்துப் பேசினால் அது அப்பச்சியை எதிர்த்துப் பேசுகிற மாதிரி ஆகிவிடாதா?''

உண்மையில் நான் இப்படித்தான் நினைக்கிறேன். பெற்றோர் விட்டுப் போனதில் நமக்கு வசதியானவற்றை மட்டும் அனுபவித்துவிட்டு, சிரமமானவற்றை ஏற்றுக் கொள்ள முடியாது என்று சொல்வது நியாயமல்ல!

என்னிடம் பலர் பலமுறை கேட்டிருக்கிறார்கள், ''நீ எப்படி எல்லா வயதினருடனும் சலிப்பில்லாமல் பழகுகிறாய்?'' என்று.

சிறியவரோ, நம் வயதினரோ, பெரியவரோ - யாருடனும் பழகுவதற்கு நம் மனம்தான் காரணம் என்று நினைக்கிறேன். நம் உருவத்துக்கு வயதாகலாமே தவிர, உள்ளத்துக்கு வயது வரம்பு கிடையாது என்பது என் கருத்து. இந்த குணம் என் பாட்டியிடமிருந்து எனக்குக் கிடைத்த சொத்து.

தன் வாழ்வில் கடைசி பன்னிரண்டு அல்லது பதிமூன்று வருடங்களை என்னுடன் செலவிட்டவர் என் பாட்டி. கண்பார்வை



பேரக் குழந்தைகளுடன் எனது பாட்டி.

உள்ளவரை புத்தகம் படித்து, பார்வை சற்று குறைந்து படிக்க முடியாமல் போனதும் தொலைக்காட்சியில் கவனத்தைத் திருப்பினார்கள். இரவில் காட்டப்படும் பல நிகழ்ச்சிகளையும். கிரிக்கெட் போன்ற விளையாட்டு நிகழ்ச்சிகளையும்கூட விடாமல் பார்ப்பார்.

''இதெல்லாம் பார்த்தால் உங்களுக்கு என்ன பாட்டி புரிகிறது?'' என்று கேட்டால், ''புரியாவிட்டால் என்ன! நிகழ்ச்சிக்கு நடுநடுவே விளம்பரமெல்லாம் வருகிறதே, அதெல்லாம் பார்க்க எனக்கப் பிடிக்கிறது. பொழுது நன்றாகப் போகிறது!'' என்பார்.

இரவில் தூக்கம் வரவில்லை என்பதற்காகப் புலம்பி மற்றவர்களின் தூக்கத்தையும் கெடுக்கும் மனிதர்கள் இருக்கும்போது, டி.வி.பார்த்தாவது பொழுதைப் போக்கி, தூக்கம் வரவில்லை என்ற குறையைப் பெரிதுபடுத்தாமல் இருந்த பாட்டியின் உற்சாக குணம் எனக்கு மிகவும் பிடிக்கும். இத்தனைக்குப் பிறகும், காலையில் நான் எழுந்து வந்ததும் முதல் 'குட்மார்னிங்' பாட்டியிடமிருந்துதான் வரும்!

ஒருமுறை எல்லோருமாகச் சேர்ந்து புகைப்படம் எடுத்துக் கொண்டிருந்தோம். தமாஷாகத் தலையில் ஒரு தொப்பி போட்டு காரின் மேல் ஏறியபடி போட்டோ எடுத்தோம். பாட்டியும் கஷ்டப்பட்டு காரின் மேல் ஏறி உட்கார்ந்து, ''எனக்கும் ஒரு தொப்பி கொடு'' என்று கேட்டு வாங்கி, அதைப் போட்டபடி புகைப்படம் எடுத்துக் கொண்டார்கள்! பிரச்னைகளைத் தாண்டி அவர்களால் மகிழ்ச்சியாக இருக்க முடிந்ததற்குக் காரணம் அவர்கள் மனதை எப்போதும் இளமையாக வைத்துக் கொண்டதுதான். இப்படிப்பட்ட குணத்தோடு பழகத் துவங்கி விட்டோம் என்றால், யாருடன் பேசினாலும் பிரச்னையே இருக்காது; தலைமுறை இடைவெளிக்கு இடமே இருக்காது என்பதை நான் பாட்டியிடமிருந்துதான் கற்றேன்.

இந்தத் தலைமுறை இடைவெளி பற்றிப் பேசும்போது எனது மாமனார் திரு.எஸ்.பி.அருணகிரி அவர்களின் நினைவும் வருகிறது. அவருக்கு அறுபது வயதாக இருக்கும்போது என் மாமியார் காலமாகிவிட்டார். அப்போது முதல் என் மாமனாருக்குத் தனிமை உணர்ச்சி ஏற்பட்டு விட்டது. என்னைப் பார்க்கும் போதெல்லாம் உட்கார வைத்துப் பேச ஆரம்பித்து விடுவார். சில சமயம் இரண்டு மணி நேரம்கூட பேசுவார்! பேச்சில் பல விஷயங்களும் கலந்திருக்கும்.

என் மனைவி லட்சுமி கூட கேட்பாள், ''எப்படி எங்க அப்பா பேச்சைப் பொறுமையாகக் கேட்கிறீர்கள்?'' என்று.



மாமனார் S.P.அருணகிரியும், **மாமியார் சுந்தரி அம்மாளும்**

''கொஞ்சம் வயதாகிவிட்டால் எல்லா மனிதர்களுமே குழந்தை மாதிரிதான். உங்க அப்பாவும் குழந்தைத்தனமாகத்தான் பல பிரச்னைகளைக் கிளப்புகிறார், சண்டை போடுகிறார். குழந்தைகள் பேசும்போது நாம் ஆர்வமாகத்தானே கேட்கிறோம்? அதில் சலிப்பு அடைகிறோமா? நமக்கு பெரியவர்கள் எவ்வளவோ நன்மை செய்திருக்கிறார்கள். அதையெல்லாம் அனுபவிக்கும் நமக்கு இதையும் ஏற்கும் குணம் வேண்டும்'' என்று நான் பதில் சொல்வேன்.

உண்மை அதுதானே!

நமக்கும் ஒருநாள் வயதாகும். நாமும் ஒருநாள் தனிமையை உணரும் காலம் வரலாம். யாராவது வர மாட்டார்களா, அவர்களோடு மனம் விட்டுப் பேசி நம் எண்ணங்களையும் அனுபவங்களையும் பகிர்ந்து கொள்ள மாட்டோமா என்று ஏக்கம் தோன்றலாம். அப்போது யாரும் நம் அருகில் வர மாட்டேன் என்று விலகிப் போனால் நம் நிலை என்ன?

ஆகவே, இப்போது நாம் பொறுமையைக் கையாள்வது மிகவும் அவசியம். கூடவே ஒரு சின்னப் பாடத்தையும் நாம் கற்றுக் கொண்டால் நல்லது. இப்போது வயதானவர்கள் பேசும்போது நமக்கு எப்படி இருக்கிறதோ, அப்படி நாளை மற்றவர்களும் நம்மைப் பற்றி நினைக்க இடம் கொடுக்காமல் இருக்கப் பழக வேண்டும்.

வயதான பிறகு நாம் பேசுவதைக் குறைத்துக் கொள்ள வேண்டும் என்று இப்போதே உறுதி எடுத்துக் கொள்ள வேண்டும்.

வயதான பிறகு என்ன, இப்போதே கூட நம்மில் பலர் அதிகமாகப் பேசி போரடித்துக் கொண்டுதான் இருக்கிறோம்! சில சமயம் நாம் பேசுவது நம் திருப்திக்காகத்தான் பேசுகிறோம்; எதிராளிக்கு அது தேவையா இல்லையா என்று சற்றும் யோசிக்காமல்! அவர் முகத்தைப்

பார்த்து அது அவருக்கு அலுப்பாக இருக்கிறதா அல்லது சுவாரஸ்யமாக ரசிக்கிறாரா என்பதை ஊகிக்க முயற்சி செய்வதேயில்லை.

இப்படி நம்மிடம் இருக்கும் பலவீனங்களே அதிகம் என்னும்போது, வயதான பெரியவர்களைக் குறை சொல்வது தவறுதானே!

என்னைப் பொறுத்தவரை, என் தந்தையாருடைய திறமைகளையும், அவரது பணியின் சிறப்பையும், அவர் செய்த தர்ம காரியங்களைப் பற்றியும் எடுத்துப் பேசத் துவங்கினால், பெரும்பாலும் நான் எதிர்பார்ப்பதைவிட அதிகமாகப் பேசிவிடுகிறேன்!

முடிவாக ஒரு வார்த்தை. நம் முதுகு நமக்குத் தெரியாது. மற்றவர் களின் குணங்களை ஆராயும்போது அதில் நம் முதுகில் இருக்கக்கூடிய அழுக்குகள் தெரிகின்றனவா என்று பார்த்து, தெரிந்தால் அதைக் களைய இப்போதே முனைவது நமக்கும் நமது சந்ததிக்குமான தலைமுறை இடைவெளியைக் குறைக்க வெகுவாக உதவும்.

ஏவி.எம், R. வெங்கட்ராமன், காமராஜர்



# 25. செல்வமும் செல்வாக்கும்



A.கணேசன்

பணம் மட்டுமே வாழ்க்கையாகிவிட முடியாது, வாழ்க்கைக்குத் தேவையான எத்தனையோ அம்சங்களில் பணமும் ஒன்று என்பது ஒரு அடிப்படை வாழ்வியல் பாடம்.

பணத்தினால் எதையும் சாதிக்க முடியும் என்று இறுமாப்புடன் யாராவது பேசினால், அன்பு, பாசம், நட்பு போன்றவை கொண்ட உறவுகளை பணத்தினால் வாங்க முடியாது என்று அவரை மறுத்துப் பேசும் வழக்கம் நம்மில் பலருக்கு உண்டு.

பணத்தால் மட்டும் பெற முடியாத மற்றொரு முக்கியமான விஷயம் - செல்வாக்கு.

நான் இப்படிச் சொல்வதில் சிலருக்கு உடன்பாடு இல்லாமல் இருக்கலாம். என்றாலும், நான் பார்த்தவரை, என் அறிவுக்கு எட்டியவரை, செல்வாக்கைப் பெற காசு, பணம் மட்டுமே தேவை என்பது தவறு.

கார், பங்களா, வசதிகள், ஆள், படை என்று எத்தனை செழிப்பாக வாழ்பவராக இருந்தாலும், சமூகத்தில் நல்ல மதிப்பு இல்லையென்றால் அவரை நெருங்கவே மக்கள் தயங்குவார்கள்.

எந்த வசதியும் இல்லாத, பொருளாதாரப் பின்னணியே இல்லாத ஒரு பள்ளிக்கூட ஆசிரியருக்கு மிகுந்த செல்வாக்கு இருப்பதைப் பொதுவாக அனைவரும் பார்த்திருக்கலாம். அதிலும், நகரங்களைவிட சிறிய ஊர்களிலும் கிராமங்களிலும் கல்வி போதிக்கும் ஆசிரியர்களுக்குக் கிடைக்கும் மரியாதை நிச்சயம் அதிகம்.

ஏழை வாத்தியார்தான் என்றாலும், மிகப் பிரபலமாக இருப்பார். அவரிடம் என்ன சொத்து இருந்துவிடப் போகிறது! அப்படியானால் அவரைப் பார்த்தாலே எழுந்து நின்று மரியாதை செய்யும் அளவுக்கு, அவர் வாய் திறந்து கேட்கும் முன்பே காரியமாற்றும் அளவுக்கு மக்களை அவரிடம் இழுத்திருப்பது எது?

அவரது செல்வாக்குத்தான்! அது பணத்தினாலோ, பகட்டினாலோ வாங்கப்பட்டதல்ல. சிறந்த கல்வியறிவும், சீரிய ஒழுக்கமும், சமுதாயத்தை வழிநடத்திச் செல்லும் ஒப்பற்ற குணத்தினாலும் அவருக்குக் கிடைத்த மதிப்புதான் இந்த செல்வாக்குக்குக் காரணம்.

தமிழக அமைச்சராக இருந்த மதிப்புக்குரிய திரு.க.இராசாராம் அவர்கள் ஒருமுறை என்னிடம் சொன்னார், ''செல்வம் இருந்தால் வசதிகள் வரலாம், செல்வாக்கு வந்துவிடாது. ஆனால் செல்வாக்கு பெற்று விட்டோம் என்றால் செல்வம் தானாகத் தேடிவரும்!''

மறுக்க முடியாத வார்த்தைகள் இவை! அவரது கருத்தை உறுதிப் படுத்துகிற மாதிரி நான் பல எடுத்துக்காட்டுகளைச் சந்தித்திருக்கிறேன்.

சாதாரண சில மனிதர்களுக்கு மதிப்பும் மரியாதையும் பொதுமக்களிடையே அதிகம் காணப்படுவதற்குக் காரணமாக நான் கருதுவது பொதுஜனத் தொடர்பு என்கிற உறவைத்தான்.



கிட்டத்தட்ட பதினெட்டு வருடங்கள் தபால்காரராகப் பணியாற்றிய ஒரு நபரைப் பற்றி உங்களிடம் கூற விரும்புகிறேன். கடிதங்களை இயந்திர கதியில் பட்டுவாடா செய்துவிட்டு போகும் சாதாரண தபால்காரரில்லை இவர். ஒவ்வொரு வீட்டிலும் உள்ளவர்களைப் பற்றி நன்கு அறிந்து கொண்டு, தனிப்பட்ட முறையில் அவர்களின் நலனில் அக்கறை காண்பித்து. தளறாத இன்முகத்துடன் தன் கடமையைச் செய்து வந்த இவர் அந்தப் பகுதியில் நல்ல பெயருடன் ஓரளவு பிரபலமாகவும் இருந்தார். பிறகு, பகுதி நேர உதவியாளராக ஒரு கட்டிடக் காண்டிராக்டரிடம் வேலை பார்த்து, பின்னர் தானே காண்டிராக்ட் தொழிலை மேற்கொண்டார். இத்தனை வருட செல்வாக்கு அவருக்கு மிகுந்த நற்பலனைக் கொடுத்தது. அவரது ஒழுக்கத்திலும் நேர்மையிலும் நம்பிக்கை கொண்டு பொதுமக்கள் காட்டிய ஆதரவினால், தொழிலில் மிகப் பெரிய வெற்றிகளைச் சந்தித்தார்.

இன்று அவர் ஒரு சிறந்த தொழிலதிபர். பல அடுக்குமாடிக் கட்டிடங்களுக்கு சொந்தக்காரர்! அவர்தான் A. கணேசன்.

இவரது கதையில், செல்வாக்குத்தான் முதலில் வந்தது. அதன் காரணமாக பிறகுதான் செல்வம் இவரைத் தேடி வந்தது!

நேர் மாறான ஒரு பணக்காரரைப் பற்றியும் குறிப்பிட விரும்புகிறேன்.

தமிழகத்தின் பெரிய பிரமுகர்களுள் ஒருவர். குறை என்று சொல்ல ஏதுமில்லாத, உயர்வுக்குத் தேவையான பல அம்சங்களைக் கொண்டவர்.

இதற்கு காரணமாக நான் கருதுவது, தொழில் தொடர்பாகவோ அல்லது நட்புறவு ரீதியிலோ எந்தவிதமான செல்வாக்கும் பெறாமல் இருந்ததுதான்! 'நாலு பேருடன் பழகத் தெரியவில்லை' என்று பெரியவர்கள் சொல்வார்களே, அப்படிப்பட்ட குணம் படைத்தவர்.

தன்னைச் சுற்றிய உலகில் எவருடனும் நல்ல தொடர்பு இல்லாததால், வெளியுலக நிகழ்வுகளை இவர் அறிய வாய்ப்பில்லாமல் போய்விட்டது.

எந்தத் தொழிலில் ஈடுபட்டவருக்கும் அந்தத் தொழில் பற்றிய முழு அறிவு முதலில் அவசியம். பிறகு போகப்போக, தொழிலில் அபிவிருத்தி ஏற்பட, அவ்வப்போது உண்டாகும் மாற்றங்களைப் பற்றியும் முன்னேற்றங்களைப் பற்றியும் அறிந்து கொள்வது அவசியம். காலத்துக்கேற்ப தொழிலில் நுணுக்கங்களைப் புகுத்தி, எதற்கு அதிக வரவேற்பு இருக்கிறதோ அதில் கவனம் செலுத்தி வியாபாத்தைப்



இந்தியன் வங்கித் தலைவர் M.கோபால கிருஷ்ணனுடன்

பெருக்க முயற்சிப்பதுதானே திறமையான தொழிலறிவுக்குச் சான்று! ஆனால் நான் குறிப்பிட்ட நபருக்கு இதில்தான் குறை இருந்தது. வரவேற்பில்லாத விஷயத்தை நேரம், காலம் அறியாமல் உற்பத்தி செய்ததோடு, மார்க்கெட்டில் நல்ல மதிப்புப் பெற துவங்கியிருந்த ஒரு விஷயத்தை மதிப்பறியாமல் ஒதுக்கி விட்டார். இரு வகைகளிலும் கணக்கு பிசகியதால் ஏகப்பட்ட நஷ்டமும் வேதனையும்தான் மிச்சம். தன் திறமையை உணர்ந்து, நடைமுறைக்கேற்ப செயல்பாட்டை மாற்றிக் கொண்டிருந்தால், இந்த மனிதர் சாதித்திருக்கக் கூடியது ஏராளம்! அத்தனையையும், பொதுஜனத் தொடர்பின்மையால் கோட்டை விட்டாரே என்கிற ஆதங்கம் எனக்கு எப்போதும் உண்டு!

மக்கள் தொடர்பு என்றால் பொதுமக்களிடம் நேரடியாகத் தொடர்பு கொண்டவர்களாகத்தான் இருக்க வேண்டும் என்பதல்ல. மக்களின் பிரதிநிதியாக ஒரு சிலருடனாவது நட்புறவும், யாரும் எளிதில் அணுகிப் பழகும் வகையில் இன்முகமும், எளிமையும் கொண்டு வாழ்வது நிறைய நண்பர்களையும் நல்ல மனிதர்களின் அறிமுகத்தையும் பெற்றுத்தரும்.

இந்தியன் வங்கியின் சேர்மனாக உள்ள திரு.எம்.கோபாலகிருஷ்ணன் அவர்கள் இப்படிப்பட்ட நல்ல குணத்துக்கு உதாரணமாகத் திகழ்பவர். அத்தனை பெரிய பதவியில் அமர்ந்து கொண்டு தன்னை ஒரு கூட்டுக்குள் அடைத்துக் கொள்ளாமல், சுதந்திரமாக வெளியில் வந்து எந்த நிகழ்ச்சியிலும், விழாவிலும், சமுதாயத்துக்கு நன்மை செய்யும் எந்த ஆக்கபூர்வமான செயலிலும் தன்னை மதித்து அணுகுபவர்களின் அழைப்பை ஏற்று

பங்கேற்கிறார். தன்னால் இயன்றதை உடனடியாகச் செயலிலும் காட்டுகிறார்; அனாவசிய பந்தாவோ, வீண் உபசாரங்களோ எதிர்பார்க்காமல் பொதுமக்களுடன் கலந்து பழகுகிறார்.

இந்த நல்ல மனிதரால், பொதுமக்களுக்கு எத்தனை உதவி கிடைக்கிறது என்பதோடு, அவர் சார்ந்திருக்கும் வங்கிக்கும் பலன் கிடைப்பதை நாம் கண்கூடாகப் பார்த்து வருகிறோம்!

மக்களுடன் பழகுவதற்கு வயதோ, அந்தஸ்தோ, பதவியோ, பணமோ எதுவுமே தேவையில்லை, தடையுமில்லை. அவரவரும் தாங்கள் சந்திக்கும் பழகும் மனிதர்களிடம் தொடர்பைத் துவங்கினாலே போதும், இந்த நட்புறவுச் சங்கிலி வளர்ந்து கொண்டே போகும்.

அறிமுகமானவர்களை சந்திக்கும்போது, 'எப்படியிருக்கிறீர்கள்? உங்கள் வீட்டில் எல்லாரும் நலமா?'' என்று அக்கறையாக விசாரிப்பது அவர்களுடன் இருக்கும் அறிமுகத்தை பலப்படுத்தும்.

சிலருக்கு இப்படியெல்லாம் பேசிப்பழக வேண்டும் என்ற விருப்பம் இருக்கும், ஆனால் கூச்சத்தினாலோ தயக்கத்தினாலோ வாய் திறக்காமல் இருந்து விடுவார்கள். இப்படிப்பட்டவர்கள் சகஜமாகப் பேசிப்பழகத் தங்களைத் தயார் செய்து கொள்ள வேண்டும். மனதுக்குள் வார்த்தைகளைத் தேர்தெடுத்து, தன்னம்பிக்கையோடு தீர்மானமாகப் பேசிப் பழக வேண்டும். 'முயன்றுதான் பார்க்கிறேன் ஆனால், முடியவில்லையே!' என்று சொல்லும் இவர்களுக்காகத்தான், 'எஃபக்டிவ் பப்ளிக் ஸ்பீக்கிங் (Effective Public Speaking என்ற பேச்சுப் பயிற்சி வகுப்புக்கள் நடத்துகிறார்கள்

பேச்சுப் பயிற்சி என்றால், ஏதோ பிரசங்கம் செய்வதற்குத்தான் பயன்படும் என்றில்லை. மக்கள் கூட்டத்தில் மேடை மேல் ஏறி தயக்கமின்றி, கூச்சமின்றி பேசும் அளவுக்கு நம்மைத் தயார் செய்யும் பயிற்சிதான் இது. நானும் சில நண்பர்களும் இந்தப் பயிற்சி வகுப்புகளில் கலந்து கொண்டுள்ளோம். பயிற்சியின் முதல் நாளன்று தங்கள் தொழிலைப் பற்றிக்கூட சரியாகச் சொல்ல முடியாமல் தடங்கலோடு பேசிய சிலர், இறுதி நாளில் பேச்சுக்கான பரிசையே பெற்றார்கள் என்றால் இந்தப் பயிற்சியின் நன்மையை நீங்களே ஊகித்துக் கொள்ளலாம்!

உங்களில் எவராவது இந்தப் பயிற்சி பெற விரும்பினால் தொடர்பு கொள்ள , வேண்டிய முகவரி:

டைரக்டர், எஃபக்டிவ் பப்ளிக் ஸ்பீக்கிங், 'ரவி', 40 வண்ணான்துறைத் தெரு, சென்னை -20.

அரிமா சங்கம், ரோட்டரி சங்கம் போன்ற சமூக சேவை அமைப்புக்களிலும் உறுப்பினராவது பலதரப்பட்ட மனிதர்களையும் சந்தித்துப் பழக வாய்ப்பு ஏற்படுத்தும்.

மற்ற துறைகளில் நடத்தப்படும் கூட்டங்களில் கலந்து கொள்கிறோமோ இல்லையோ, நம் வேலை சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகளிலாவது பங்கேற்பது நிச்சயம் நம் துறையில் ஏற்பட்டுள்ள சமீபத்திய மாற்றங்களைப் பற்றி அறிய உதவும். மாற்றங்களுக்கேற்றபடி நம் பணியை சீரமைத்துக் கொள்ளவில்லையானால், ஒரே இடத்தில் தேங்கி ஊறிய குட்டை நீர் போல நாமும் பயனற்று பாசி பிடித்துப்போய் விடுவோம்!

பெரிய நிறுவனங்களை நடத்துபவர்கள் பல சமயங்களில், நவீன தொழில் நுட்பங்களை அறிந்து பயிற்சி பெற வெளியூருக்கோ, வெளிநாட்டுக்கோ தங்களின் பிரதிநிதியை அனுப்புவார்கள். இதனைத் தவறாக நான் குறிப்பிடவில்லை. இது மாதிரி சந்தர்ப்பங்களில் பெரும்பாலும், பயிற்சி பெற்றுத் திரும்பி வரும் நபர் வேறு கம்பெனியில் சேர்ந்து விடுவார் அல்லது தானே அந்தத் தொழிலைத் துவங்கி விடுவார். இவரைப் பயிற்சிக்கு செலவழித்து அனுப்பிய நிறுவனத்துக்குக் கடைசியில் ஒரு பலனும் கிடைப்பதில்லை!

நண்பர் திரு.தீனதயாளு தோல் ஏற்றுமதித் தொழிலில் சிறந்து விளங்கியவர். ''தொழிலில் நாமே நேரடியாக ஈடுபட வேண்டும். தொழில் சம்பந்தமான எந்தத் தகவலையும் அறிந்து வைத்திருப்பதும்,

**இந்தியாவிலேயே வேறு எங்கும் இல்லாத ஸ்டூடியோ தொழிலாளர்களுக்கான ஏவி.எம். தொழிலாளர் குடியிருப்பைத் துவக்கி வைத்த அறிஞர் அண்ணாவின் பேச்சை ரசிக்கும் ஏவி.எம், இயக்குனர் பஞ்சு, கலைஞர்.**



வியாபாரத்தில் நேரடித் தொடர்பு வைத்திருப்பதும் மிக அவசியம்'' என்பார் இவர்.

சினிமாத் தொழிலிலும் கூட, சிறந்த வெற்றிகளைப் பெற்று முன்னனியில் இருப்பவர்களில் பெரும்பாலானவர்கள், மக்கள் தொடர்பில் சிறந்தவர்கள்தான். வானொலியில் 'இன்று ஒரு தகவல்' நிகழ்ச்சி அளித்து வரும் திரு.தென்கச்சி சுவாமிநாதனும் சொல்கிறார், வெளிநாடுகளில் வெற்றிகரமாகத் தொழிலதிபர்களாக விளங்குபவர்களில் பலரும் பொதுஜனத் தொடர்பில் சாமர்த்தியசாலிகள் என்று.

நல்ல தொடர்பினால், இத்தனை மதிப்பையும் மரியாதையையும், சம்பாதிப்பதுகூட முக்கியமில்லை, இப்படி சம்பாதிப்பதை நிரந்தரமாகக் காப்பாற்றிக் கொள்வதுதான் மிக மிக முக்கியம்.

அறிஞர் அண்ணா முன்பொரு சமயம், ''எந்தவொரு குடும்பமோ, நிறுவனமோ, கட்சியோ பிறரால் கலைந்து போகவே முடியாது. கலைப்பதற்கு அந்தந்த குடும்பம், நிறுவனம், கட்சிதான் காரணம்'' என்கிற மாதிரி கருத்துத் தெரிவித்திருந்தார். இது நமது பொதுமக்கள் தொடர்பு உள்ளிட்ட எந்த குணத்துக்கும் பொருந்தும்!

பொது நிகழ்ச்சியில் கலந்து கொள்ளப் போய்விட்டு, அங்கே சிடுசிடுவென்ற முகத்துடன் உட்கார்ந்திருப்பது நன்றாகவா இருக்கும்! குறிப்பாக, யாருடனாவது மனவேறுபாடு, கோபம், வருத்தம் ஏற்படுகிறது என்றால் அதைக் காண்பிக்க வேண்டுமென்று முகத்தை 'உம்' மென்று வைத்து, வலுக்கட்டாயமாக ஒரு இறுக்கமான முகபாவனையை வெளிப்படுத்துவது பலருக்கு இருக்கும் குணம். இந்த வேண்டாத குணத்தினால், 'அவனை நம்பவே முடியாது, திடீர் திடீரென்று மூட் மாறிவிடும்!'' என்றுதான் விமர்சனங்கள் எழும்! சிரமப்பட்டு பெற்ற செல்வாக்கை இழக்க இதைவிட வேறு என்ன தேவை!

'புறம் பேசுவது' என்பார்களே, அப்படி எவரைப் பற்றியாவது பின்னால் பேசும் பழக்கமும் செல்வாக்கின் எதிரிதான். புரட்சித் தலைவர் எம்.ஜி.ஆர். அவர்கள் சொல்வார்கள், ''அனாவசியமாகப் பிறரைப் பற்றி அவர்கள் இல்லாத நேரத்தில் பேசுவது தவறு. யாரிடம் பேசுகிறோமோ அவர் மூலமாக சம்பந்தப்பட்டவருக்கு விஷயம் போகாது என்பது என்ன நிச்சயம்! நாமாகப் பேசவில்லை, பேசும்படி யாரோ தூண்டி விட்டு விட்டார்கள் என்றோ, என் வாயைக் கிண்டி பேச்சை' வரவழைத்தார்கள் என்பதோ, நான் ஒன்றுமே சொல்லவில்லை அவர் சொன்னதைக் கேட்டு ஆமோதித்தேன்

அவ்வளவுதான் என்பதோகூட தவறுதான். நாம்தான் பேசினோம் என்கிற பெயர் எந்த வகையிலும் வராமல் கவனமாக இருக்க வேண்டும். ''அதோ போகிறான் பார், அவன் பெரிய ஃப்ராடு!'' என்றெல்லாம் இஷ்டத்துக்குப் பேசுவதால் தேவையில்லாத எதிரிகளைத்தான் சம்பாதிக்கிறோம்''.

இந்த வார்த்தைகளை நான் மறப்பதேயில்லை.

அடுத்தவர் மீது வரும் பொறாமை என்னும் உணர்வும் செல்வாக்குக்கு எதிரான ஒரு குணம். யாருக்காவது பாராட்டு விழா என்றால், அதில் கலந்து கொள்வது நமது கௌரவத்தை உயர்த்தி மதிப்பைக் கூட்ட வேண்டுமே தவிர, 'அவனுக்குப் போய் இத்தனை பாராட்டா! அப்படியென்ன கிழித்து விட்டான்!' என்கிற ஆங்காரத்துடன் வெறுப்புப் பார்வை பார்ப்பது நல்ல மனிதருக்கு அழகல்ல. ஒரே துறையிலுள்ள மனிதர்களுக்குள் இப்படிப்பட்ட பொறாமை உணர்வுகள் சகஜம். இதைத் தவிர்த்து, சபை நடுவே கௌரவிக்கப்படுபவரை நாமும் உள்ளன்போடு பாராட்டக் கற்றால், அது நம் மனதுக்கும் ஆரோக்கியம் தரும், நம்மைப் பற்றிய மக்களின் எண்ணத்தையும் உயர்த்தும்.

சிந்தனையும், உழைப்பும், ஈடுபாடும் கொண்டு கவனத்துடன் ஒரு செல்வாக்கை வளர்த்துக் கொள்ள பல காலம் பிடிக்கும். அதை நல்ல விதமாகத் தக்க வைத்துக் கொள்வதே புத்திசாலித்தனம். தேவையில்லாத தீய குணங்களால் இதனை இழந்துவிட்டால், பின் மறுபடி தேடுவது மிக மிக கடினம்.

கண்ணாடிப் பாத்திரம் செய்வதற்குத்தான் நேரமாகுமே தவிர, போட்டு உடைக்க ஒருசில வினாடிகள் போதும்!

8.8.80 அன்று ஏவி.எம். மறைந்த முதலாவது ஆண்டை நினைவு கூர்ந்து அன்னாரின் படத்தை கம்பன் விழாவில் எம்.ஜி.ஆர். திறந்து வைத்த போது ஜோதி வெங்கடாசலம், மு.மு. இஸ்மாயீல்



# 26. எளிமைக்கு ஒரு மரியாதை



மரியாதை என்பது கடைகளில் கிடைக்கக்கூடிய பொருளோ, வலியச் சென்று கேட்டுப் பெறும் விஷயமோ அல்ல என்பதை நாம் அறிவோம்.

வயதின் காரணமாகவும், பதவியின் பொருட்டும் வரக்கூடிய மரியாதையை முழுமையான ஒன்று என்று கூறிவிட முடியாது. வயதுக்கும் பொறுப்புக்கும் தகுந்தபடி நடத்தை அமையாமல் போனால், அல்லது பதவியே பறிபோனால் - இந்த மரியாதையும் இருந்த இடம் தெரியாமல் மறைந்து ஓடிப்போய்விடும்.

மரியாதை என்பது நமது வளர்ச்சியினாலோ, நல்ல பெயரினாலோ, திறமையான நிர்வாகத்தினாலோ, அன்பினாலோ மற்றவர்கள் மனதில் தானாக உண்டாக வேண்டிய ஒரு பண்பு. மரியாதையைக் காட்டும் விதமாக எதிரில் ஒருவர் நின்றவாறு நம்மோடு பேசினார் என்றால், அவரை உட்காரச் சொல்லி பேச்சைத் தொடரும்போது அவருக்கு நம்மிடம் உள்ள மரியாதை பன்மடங்கு பெருகுவதைப் பலரும் அனுபவித்திருப்பீர்கள்.

'நான் பெரியவன், எனவே நீ நின்றுதான் பேச வேண்டும்' என்கிற தோரணையில் அதிகாரத்தோடு நடந்து கொண்டால், பேசி முடிந்து நகர்ந்து அப்பால் போன உடனேயே அவன் நினைத்துக் கொள்வான், 'பெரிய இவரா இந்த ஆள்! கொஞ்சம்கூட மரியாதையே தெரியவில்லையே!' என்று, கிண்டலும் எரிச்சலும்தான் அவனிடம் காணப்படும். நாம் முதலில் அவர்களுக்கு மரியாதை கொடுத்து விட்டால் அவர்களிடமிருந்து தானாக மரியாதை நம்மைத் தேடி வந்துவிடும்.



S.S.வாசன், ஏவி.எம்.

எல்லா நல்ல குணங்களுக்கும் சிகரம் வைத்த மாதிரி எளிமை என்ற ஒன்று எங்கு இருக்கிறதோ அங்கு மரியாதை தானாக நம்மிடம் வந்து சேரும் என்பது உறுதி. நாம் வளர வளர எவ்வளவுக்கெவ்வளவு சாதாரணமாக, எளிமையாக இருக்கிறோமோ அவ்வளவுக்கவ்வளவு நம்மிடம் மற்றவருக்கு மரியாதை அதிகரிக்கும். பல பெரியவர்களிடம் நான் இப்படிப்பட்ட எளிமையைக் கண்டிருக்கிறேன்.

திரை உலகத்தின் மேதைகளுள் ஒருவரான திரு.எஸ்.எஸ்.வாசன் அவர்கள், 'ஆனந்த விகடன்' பத்திரிகை மூலம் பல எழுத்தாளர்களை அறிமுகப்படுத்தி, ஊக்குவித்து, அவர்கள் முன்னணிக்கு வர வழி செய்தார். 'ஜெமினி' நிறுவனத்தின் மூலம் பட உலகில் பல வெற்றிகளையும் சாதனைகளையும் அளித்தவர். 'சந்திரலேகா' படத்தின் வாயிலாக முதன் முதலாக வட நாட்டில் நம் தமிழ்ப்படப் பெருமை பரவக் காரணமாக இருந்தார். முதன் முதலில் 'கலர்'ப்பட லேபரட்டரி துவங்கியவர்.

என் தந்தை தன் குருவாக மதித்த இந்த சாதனையாளர், சாதாரண முக்கால் சட்டையும் நான்கு முழ வேட்டியும்தான் இறுதிவரை அணிந்து வந்தார்.

இவரைப்போல என் தந்தையாரும், திரையுலக மேதைகளுள் ஒருவர் என்று மதிக்கப்படுபவர். 'ஏ.வி.எம்.' நிறுவனத்தை பலமான அஸ்திவாரத்துடன் நிறுவி, இன்னும் பல தலைமுறைகளுக்கு நாங்கள் வசதியாக அதனை நடத்த வழி செய்து கொடுத்தவர். முதல் முதலில் தமிழ்ப்படத்தில் 'பிளேபாக்' 'டப்பிங்' ஆகிய பின்னணி பாட்டும் பேச்சும் இணைப்பதைத் துவங்கியவர். ஆடல் பாடல் இல்லாமல் படம் எடுத்தவர். குழந்தைகளுக்காக 'ஹம் பஞ்சி எக் டால்கே' என்ற படம் எடுத்து தங்கப்பதக்கம் பெற்றவர். இசைத்தட்டுக்கள் தயாரிப்பதில்

புதிய உத்திகளைக் கையாண்டு வெற்றியடைந்தவர். இப்படி இன்னும் எத்தனையோ சாதனைகளைச் செய்த எங்கள் அப்பச்சி, கதர் சட்டையும், கதர் வேட்டியும் அணிந்து, எளிய வாழ்வு வாழ்ந்து, எவருக்கும் மரியாதை கொடுத்து, கை கூப்பி வணங்கி, கை கட்டியபடிதான் நிற்பார்!

மற்றுமொரு மேதையான திரு. நாகி ரெட்டியார் அவர்கள் 'விஜயா' என்னும் நிறுவனத்தை ஸ்தாபித்து இன்றளவும் நடத்தி வருபவர். பல வெற்றிப் படங்களைத் தயாரித்தது முதல், திருமணக்கூடங்கள், மருத்துவமனை என்று பல துறைகளிலும் முத்திரை பதித்தவர். ஆரம்ப காலத்தில் துவங்கிய அச்சகத்தை சிறப்பான முறையில் வளர்த்து, கண்பார்வையற்றவர்களுக்காக, 'ப்ரெயில்' முறை புத்தகங்களை அச்சடிப்பது வரை சாதனைப் பட்டியல் தொடருகிறது. 'சந்தமாமா' (தமிழில் - அம்புலிமாமா) குழந்தைகளுக்கான புத்தகத்தைப் பல மொழிகளில் வெளியிட்டு வருவதை அறியாதவர் யார்! இன்றும்கூட அதே சுறுசுறுப்புடன், ஈடுபாட்டின் ஒரு கலைக்களஞ்சியமாகவே திகழும், திரு.நாகிரெட்டியார் அவர்களும் எளிமையான வேட்டி, சட்டை அணிந்துதான் காட்சியளிக்கிறார்! தோற்றத்தில் எளிமை, உழைப்பிலும் மரியாதையிலும் மேன்மை என்ற வாழ்க்கை முறைக்கு உதாரணமாகத் திகழ்கிறார்!

இந்த மூவருக்கும் இல்லாத மரியாதையா! இவர்களின் சாதனைகளைக் கண்டு இந்தியா முழுவதுமே மதிப்பும் மரியாதையும்

நாகிரெட்டியார், ORWO.ஜெர்மன் பிரதிநிதிகளுடன் ஏவி.எம்.



கொண்டிருந்ததை நாடே அறியும். பெரும்பாலும் பகட்டுக்கே முக்கியத்துவம் கொடுக்கும் திரைப்பட உலகில் பகட்டின் சாயல் கூட இல்லாமல் இப்படிப்பட்ட பெரியவர்கள் தங்கள் அடக்கத்தாலும் எளிமையாலும் அதிக மரியாதையைப் பெற்றார்கள். ஆடம்பரமாக தடபுடல் வாழ்க்கை வாழ்ந்தால்தான் மரியாதை கிடைக்கும் என்பது உண்மையான வாதம் இல்லை என்பதை இம்மேதைகளின் வாழ்க்கையைப் பார்த்தே புரிந்து கொள்ளலாம்.

நடை, உடை, பாவனைகளைவிட சாதனைகளும் எளிமையான வாழ்வு முறையுமே நல்ல மரியாதைக்கு அழைப்பு விடுக்கும். ஒரு மனிதன் தன்னிடம் பணம் இருக்கிறது என்பதற்காக பகட்டாகவோ, அனாவசிய பந்தாவுடனோ வாழ்ந்தால் அது அவனது வளர்ச்சிக்கு உதவாது.

பணமும் பகட்டும் அளவுக்கு மிஞ்சி வெளியே தெரிவது, இல்லாதவர்களின் ஏக்கத்தையும் பொறாமையையும் தூண்டிவிட்டு விடும். பணத்தினால் வரும் சுக சௌகர்யங்களை அனுபவிப்பது தவறு என்று நான் சொல்லவில்லை. அப்படிச் சொல்வது நியாயமும் அல்ல. அனுபவிப்பதை அடிக்கடி வெளி உலகத்துக்கு உணர்த்திக் கொண்டே இருக்க வேண்டிய அவசியம் இல்லை என்றுதான் சொல்கிறேன்.

கையில் துப்பாக்கி வைத்திருப்பவர் சுட முடியும் என்பதால் சுட்டுக் கொண்டே இருக்க முடியுமா? தேவைப்பட்டாலொழிய இதைப் பயன்படுத்துவது இல்லையே! இதேபோல்தான், வசதியை அடிக்கடி வெளியாருக்குக் காட்டிக் கொண்டே இருப்பது தேவையில்லாதது.

வசதி படைத்தவர்களின் வீட்டுத் திருமணங்களும் மற்ற விசேஷங்களும் பெரும்பாலும் மிகப் பெரிய பொருட்செலவில்தான் நடக்கின்றன. இவை போன்ற ஒருசில சந்தர்ப்பங்களில் எளிமையை முழுவதுமாகக் கடைபிடிக்க இயலாமல் போனாலும், நாம்

**பேராசிரியர் டாக்டர் ந.சஞ்சீவி.**





Mபாலசுப்பிரமணியன் திருமணத்தின் போது நடைபெற்ற 22 திருமணத தம்பதிகளுடன் Mபாலசுப்பிரமணியன், லலிதா பாலசுப்பிரமணியன், ராஜேஸ்வரி மெய்யப்பன், ஏவி.எம்.

செலவழிக்கும் பொருள் பலருக்கும் பயன்பட்டால் அதுவே குற்ற உணர்வைத் தவிர்த்து ஒரு நிறைவைக் கொடுக்கும்.

என் தம்பி பாலசுப்ரமணியன் (பாலு) திருமணத்துக்காக எங்கள் ஸ்டூடியோ வளாகத்தில் புது திருமணக்கூடம் நிர்மாணிக்கப்பட்டது. அதன் ஒவ்வொரு அங்குலமும், என் தாயார் திருமதி எ.வி.எம். ராஜேஸ்வரியும் தந்தையும் தெரிவித்த ஆலோசனைகளின் பேரில் மிகுந்த கவனத்துடன் அமைக்கப்பட்டு அழகாக ஏற்பாடாகியிருந்தது. தந்தையின் பல நண்பர்களும் அந்தக் கூடத்தை வந்து பார்வையிட்டுவிட்டுத் தங்கள் பாராட்டுக்களைத் தெரிவித்தார்கள்.

மறைந்த தமிழ் அறிஞர் பேராசிரியர் நா.சஞ்சீவி அவர்களும் அப்பச்சியின் அழைப்புக்கிணங்க வந்து பார்த்தார். பாராட்டினார். பிறகு கேட்டார், 'இவ்வளவு பெரிய கூடம் எதற்காக இப்போது கட்டப்பட்டிருக்கிறது?''

காரணத்தைச் சொன்னதும் நம்ப முடியாமல், ''ஒரே ஒரு திருமணம் நடப்பதற்கா இத்தனை ஏற்பாடுகள்?'' என்று பல முறை கேட்டார். பிறகு தந்தையிடம் ஒரு யோசனை தெரிவித்தார்.

''இதே இடத்தில் உங்கள் வீட்டுத் திருமணத்தோடு வேறு சில கல்யாணங்களையும் நடத்தினால் நன்றாக இருக்கும்'' என்று அவர் கூறிய யோசனையை தந்தை உடனடியாக ஏற்றார்.

தம்பி பாலுவின் திருமணத்தன்று வேறு 22 திருமணங்களும் அதே இடத்தில் சிறப்பாக நடந்தேறின! அத்தனை ஜோடிகளுக்கும் புடவை, வேட்டி, தாலி, குடித்தனத்துக்குத் தேவையான பொருட்கள் இவற்றோடு அவர்கள் வீட்டு மனிதர்கள் இவ்விசேஷத்தில் கலந்து கொள்ளவும் வசதி செய்து தரப்பட்டது. அவ்வளவாக வசதியில்லாத அந்த இருபத்தியிரண்டு ஜோடிகளுக்கும் இத்தனை கோலாகலமாகத்

திருமண நிகழ்ச்சி நடைபெற்றது, நாங்கள் செலவழித்த பொருள் வீணாகவில்லை என்ற நிறைவை ஏற்படுத்தியது.

அது முதல் இப்படிப்பட்ட எந்த வைபவமாக இருந்தாலும் அதனுடன் இணைந்து வசதியற்றவர்கள், நலிந்தவர்கள் ஆகியவர்களுக்கான அன்னதானமோ வேறு உதவிகளோ செய்வதை ஒரு வழக்கமாகவே கொண்டிருக்கிறோம்.

பிறந்த நாள், மண நாள் என்ற எந்த சிறப்பு தினத்தையும் இப்படி ஒரு தர்ம காரியத்துடன் கொண்டாடுவது மிகுந்த மனநிறைவைத் தருகிறது. நம் கொண்டாட்டங்கள் எளிமையை உணர்த்தச் செய்கின்றன. அவற்றால் நல்ல பலன்களை ஏழை எளிய மக்கள் பெறவும் செய்கிறார்கள்.

இத்தகைய ஒரு நல்ல செயலை நடிகர் திரு. ஜெய்சங்கரும் பல ஆண்டுகளாகச் செய்து வருகிறார். அனாதை இல்லங்கள், கருணை இல்லங்கள் போன்றவற்றுக்குத் தன்னால் இயன்றதைச் செய்வதோடு மட்டும் நின்று விடாமல், தன் சக நடிக நடிகையர்களையும் மற்ற திரையுலக நண்பர்களையும் இது போன்ற பணிகளில் ஈடுபடும்படி தூண்டியும் ஊக்குவித்தும் வருவதை நான் மகிழ்ச்சியுடன் பாராட்டுகிறேன்.

பணமும் பகட்டும் அதிகம் வெளியே தெரிவது ஆடம்பரத்தைப் பறைசாற்றும் என்கிறேனே தவிர, தர்மகாரியம் செய்யும் போது 'எளிமை'யைக் கடைபிடியுங்கள் என்று நான் சொல்லவில்லை! வசதிக்கேற்ப தர்மம் செய்வதுதான் நல்லது.

நடிகர் ஜெய்சங்கருடன்





ரஞ்சினி முருகன், M முருகன், A வீரப்பன், மீனா வீரப்பன், M.குமரன், ராஜேஸ்வரி மெய்யப்பன், ஏவி.எம்.

கோலாகலமான கொண்டாட்டங்களைவிட எளிய முறையிலான இப்படிப்பட்ட பகிர்தல் வரவேற்கப்பட வேண்டிய விஷயம்.

நண்பரின் சிறந்த யோசனையை திறந்த மனத்துடன் ஏற்ற என் தந்தையைப் போலவே திரு. நாகி ரெட்டியார் அவர்களும் எளிமையை செயலில் காட்டியதைப் பலமுறை நானே பார்த்திருக்கிறேன்.

என் மூத்த சகோதரர் முருகன் - அண்ணி ரஞ்சனி முருகன் அவர்களுக்கும், சகோதரி மீனா - மைத்துனர் திரு. வீரப்பன் அவர்களுக்கும் ஒரே நேரத்தில் திருமணங்கள் நடைபெற்றபோது, திரு. நாகி ரெட்டியார் அவர்களின் எளிமையைப் புரிந்து கொள்ளும்படியான சம்பவம் ஒன்று நடந்தது.

தந்தையாரின் ஏற்பாடுகளைப் பற்றியும், திட்டமிடுதல் பற்றியும் பலமுறை கூறியிருக்கிறேன். திருமணத்துக்கான ஒவ்வொரு கட்டத்தையும் அற்புதமாகப் பிளான் செய்து இம்முறையும் தீர்மானித்தார். யார் யார் அழைக்கப்பட வேண்டும், எப்படி வரவேற்பு இருக்க வேண்டும், சாப்பாடு எங்கே எப்படி அமைய வேண்டும் என்று மிகத் துல்லியமாக ஒரு திட்டம். இலையை எப்படிப் போடுவது, அதில் பதார்த்தங்களை எந்த வரிசையில் எவ்வளவு வைக்க வேண்டும், எது எதற்கு எப்படிப்பட்ட கரண்டிகளை உபயோகிக்க வேண்டும் என்ற விவரங்கள்கூட தயாரித்து, திருமணத்துக்கு சில நாட்கள் முன்பு ஒரு ஒத்திகைகூட நடத்தப்பட்டு விட்டது!

மண நாளும் வந்தது. சாப்பாட்டுக் கூடத்தில் முதல் பந்தி திட்டமிட்டபடி நடந்து முடிந்து அடுத்த பந்திக்காக விருந்தினர் காத்திருக்கிறார்கள். சாப்பாடும் தயாராக இருக்கிறது.

ஆனால் ஒரு பிரச்னை, முதல் பந்தியின் இலைகள் இன்னமும் எடுக்கப் படவில்லை. இலை எடுப்பதற்காக நியமிக்கப்பட்ட ஆட்கள்

துரிதமாக வேலை செய்தும் அவ்வளவு சீக்கிரம் வேலை நடக்கவில்லை. திட்டமிடுதலில் இந்த ஒரு விஷயம் மட்டும் விடுபட்டுப் போயிருக்கிறது! அந்த ஆட்களைத் தவிர மற்ற எல்லாரும் வேடிக்கை பார்த்தபடி நின்று கொண்டிருக்க, விருந்தினரும் காத்திருக்க எல்லாருக்கும் ஏதோ ஒரு தர்மசங்கடம்!

சாப்பாட்டுக் கூட்டத்தில் மேற்பார்வை செய்து கொண்டிருந்த நாகி ரெட்டியார் அவர்கள் ஒரு நிமிடத்தில் நிலைமையை கவனித்து விட்டார். அவ்வளவுதான்! வேட்டியை மடித்துக் கட்டியபடி பரபரவென்று தானே எச்சில் இலைகளை எடுக்கத் துவங்கி விட்டார்! அதுவரை தயக்கத்தோடு நின்றிருந்த மற்றவர்கள், இவ்வளவு பெரிய மனிதரே இந்த வேலையைச் செய்யும்போது நாமும் செய்வதில் தவறில்லை என்று நினைத்து அவரைத் தொடர்ந்தார்கள்.

என்ன ஒரு எளிமை பார்த்தீர்களா! எந்த வேலையும் கௌரவமானதுதான் என்று கருதி மனப்பூர்வமாக ஈடுபட்டு உழைத்ததால்தான் அவரால் 'விஜயா' என்ற பெரிய நிறுவனத்தைத் துவங்கி, வளர்த்து வர முடிந்தது! எச்சில் இலைகளை எடுத்ததால் அவரது கௌரவம் குறைந்து போய் விட்டதா? இல்லை. மாறாக, ஆயிரம் மடங்கு பெரிதாகி மிகப்பெரிய மரியாதையைத்தான் பெற்றுக் கொடுத்தது.

என் தந்தையின் அன்புக்கும் மரியாதைக்கும் உரிய இவரை இன்றும்கூட அதே எளிமையான ஒரு மனிதராகத்தான் பார்க்கிறேன். ஸ்டுடியோவிலேயோ மற்ற தன் நிறுவனங்களிலோ ஏதாவது கட்டிட வேலை நடந்தால், அங்கு வந்து ஆட்களோடு ஆளாக நின்று

**'ஹம் பஞ்சி ஏக் டால்கே' இந்திப் படத்திற்காக ஜனாதிபதி ராஜேந்திர பிரசாத்திடமிருந்து நேருவின் முதல் தங்கப் பதக்கத்தைப் பெறுகிறார் ஏவி.எம். (1957)**





முதல் டப்பிங் படம் 'ஹரிச்சந்திரா' வில் ஒரு காட்சி (1944)

ஆலோசனை தெரிவித்து, மேற்பார்வை பார்த்து, அவர்களோடு கலந்து உழைப்பதையும் பார்த்து பெருமிதப்படுகிறேன்.

திரையுலகம் பளபளப்பானது; ஆரவாரமும் ஆர்பாட்டமும் மிகுந்தது; பணச் செழிப்பைப் பகட்டாகக் காட்டிக் கொள்ளும் தன்மையுடையது என்றுதான் பலரும் சொல்வார்கள்.

ஜரிகைக்கரையிட்ட வேட்டியும், பட்டு ஜிப்பாவும், புலி நகமிட்ட தங்கச் சங்கிலியும், விரல்களை மிஞ்சிய மோதிரங்களும், மேஜை கொள்ளாத தொலைபேசிகளும், அவற்றில் பேசும் பந்தாப் பேச்சுக்களும் திரையுலகப் பிரமுகர்களின் சின்னங்களாக உலவி வருகின்றன.

இவற்றுக்கு மத்தியில் இமாலய சாதனை படைத்த அரிய பெரிய மனிதர்களின் எளிமையை அவர்களது பேச்சு, நடைமுறை வாழ்க்கை, செயல்களில் காணும்போது எழுந்து நின்று அவர்களை வணங்கி மரியாதை செய்யவே தோன்றுகிறது.

M.K.சீனிவாசன், ஏவி.எம், T.பார்த்தசாரதி ஐயங்கார், நாகிரெட்டியார்.



# 27. உயர்ந்த உள்ளம்



எங்கள் சக ஸ்டுடியோ, உரிமையாளரான ஒரு நண்பர் என்னிடம் சமீபத்தில் கேட்டார். ''உங்களுக்கு எப்படி இவ்வளவு சிறந்த உதவியாளர்களும் தொழிலாளர்களும் கிடைத்திருக்கிறார்கள்?'' என்று.

இவர் மட்டுமல்ல, இன்னும் பலரும், எப்படி தந்தை நிறுவிய இந்த ஸ்தாபனத்தை நீங்கள் அதே மாதிரி நடத்திவர முடிகிறது என்று என்னிடமும் என் சகோதரர்களிடமும் கேட்டிருக்கிறார்கள்.

எங்களுக்கும் எங்கள் நிறுவனங்களைச் சார்ந்தவர்களுக்கும் கிடைத்திருக்கும் இந்தப் பாராட்டுக்குக் காரணம் என் தந்தையார்தான் என்பது என் அபிப்ராயம்.



T.P.பால சுப்பிரமணியம்



ஆவிச்சி மேல் நிலைப் பள்ளி

அவர்தான், தொழிலாளர்களை எப்படிப் பேண வேண்டும் என்று கற்றுக் கொடுத்து, அதன்படி நடந்தும் காட்டியவர். 'விசுவாசம்' என்ற வார்த்தைக்குப் பொருள் முதலாளி - தொழிலாளி இருவரிடமிருந்தும் வர வேண்டும் என்பது அவர் உணர்த்திய பாடம்.

தந்தை வழி சொத்தாக எங்களுக்குக் கிடைத்திருப்பவை பற்றி உலகம் நன்கு அறியும். காசு, பணம், பேர், புகழ் என்று பட்டியல் நீளும். ஆனால் இதில் அடங்காத அற்புதச்சொத்தாக அவர் விட்டுச் சென்றிருப்பது, இப்படி எல்லாரும் பாராட்டும் விதத்தில் அமைந்துள்ள அற்புதமான மனிதர்கள் கொண்ட சுற்றம்.

தன்கீழ் பணிபுரிந்த அத்தனை பேர்களின் பெயர், குடும்பம், பிரச்னைகள் என்று எல்லாவிதமான விவரங்களையம் அறிந்து வைத்திருப்பார் தந்தை. எவராவது கடன் கேட்டு வந்தால்கூட, 'உனக்கு எத்தனை குழந்தைகள்? குடும்பக் கட்டுப்பாடு செய்து கொண்டாயா?' என்றெல்லாம் அக்கறையாக விசாரிப்பார். இந்தக் கேள்விக்கு 'இல்லை' என்ற பதில் வந்தால், ''ஏன் இன்னும் செய்து கொள்ளவில்லை? இதில் பயப்பட ஒன்றுமே இல்லை. நான்கூட செய்து கொண்டிருக்கிறேன்'' என்று தைரியம் கூறி, உடனே டாக்டருக்கு போன் செய்து அந்த நபரை அனுப்பி வைப்பார். சிகிச்சைக்கான பணமும் தானே கொடுப்பார். குடும்பக் கட்டுப்பாடு செய்து கொண்டால்தான் கடன் தர முடியும் என்றும்கூட சொல்லியிருக்கிறார்!

தொழிலாளர்களின் குடும்பத்தைத் தன் குடும்பம் போலவே நினைத்து அவர்கள் சுக துக்கங்களைக் கேட்டு அறிந்து, தன்னால் இயன்ற உதவிகளைச் செய்வார்.

டி.வி.எஸ்.ஸ்தாபனத்தைச் சேர்ந்த மறைந்த திரு. டி.எஸ்.கிருஷ்ணா அவர்களைப் பற்றி தந்தையார் எப்போதும் சிலாகித்துப் பேசுவார். தங்களுக்குச் சொந்தமான தொழிற்சாலையில், அவர் ஒரு சாதாரண தொழிலாளியைப் போல வேலை செய்வதைப் பற்றிக் கூறி, 'இப்படித்தான் பணியாளர்களுடன் சேர்ந்து வேலை செய்ய வேண்டும்' என்பார்.

ஏ.வி.எம். நிறுவன ஊழியர்களுக்காக ஒரு காலனியையே உருவாக்கினார் தந்தை. சாதாரண உதவியாளராக இருந்தபோது அந்தக் காலனியில் வீடு கட்டிக் குடிபோன திரு.எஸ்.பி.முத்துராமன், இன்று பெரிய இயக்குனராக ஆன பிறகும்கூட அதே வீட்டில்தால் வசிக்கிறார் என்பதை இங்கு குறிப்பிட்டேயாக வேண்டும்!

தந்தையாரிடம், சென்னையில் மாம்பலம், மைலாப்பூர் போன்ற நாகரிகமான இடத்தில் பெரிய பள்ளிக்கூடம் கட்டும்படி பலரும் ஆலோசனை கூறினார்கள். ஆனால் அவர் அந்த யோசனையை ஏற்கவில்லை. அவ்வளவாக வளராத கோடம்பாக்கம் சாலிகிராமத்தில்தான் 'ஆவிச்சி உயர்நிலைப் பள்ளி' என்று தன் தந்தையின் நினைவாக பள்ளிக்கூடம் எழுப்பினார்.

''நான் இந்த இடத்தில் தொழில் செய்துதான் பணம் சம்பாதிக்கிறேன். என் தொழிலாளர்களும் அவர்களது குடும்பங்களும் இங்கேதான் இருக்கிறார்கள். அதனால் இங்கே கட்டுவதுதான் அவர்களுக்குப் பயன்படும்'' என்று சொல்லி, பெருந்தலைவர் காமராஜரையும், திரு.பக்தவத்சலம் அவர்களையும் அழைத்து பள்ளிக்கூடத்தைத் திறக்கச் செய்தார்.

ஏவி.மெய்யப்பன் மெட்ரிக்குலேசன் மேல்நிலைப் பள்ளி



அந்நாட்களில், சுமார் இருபத்தைந்து வருடங்களுக்கு முன்பு, தெருத்தெருவாகச் சென்று தண்டோரா போட்டும்கூட அதிகமாக மாணவர்கள் இந்தப் பள்ளிக்கு வரவில்லை. முதலில் வெறும் ஆறு மாணவர்கள்தான் சேர்ந்தார்கள். கூறைக் கொட்டகையில் துவங்கப்பட்ட இப்பள்ளியில் இன்று ஆயிரக்கணக்கான மாணவர்கள்! அட்மிஷன் சமயத்தில் நெரிசல் தாங்க முடியாமல் இருக்கிறது!

தன் தந்தையின் பெயரால் அப்பச்சி ஆரம்பித்ததைப் போல நாங்களும் எங்கள் தந்தையின் பெயரால் 'ஏ.வி.மெய்யப்பன் மெட்ரிகுலேஷன் பள்ளி' துவங்கி இருக்கிறோம்.

தொழிலாளர்களுக்கு நூல் நிலையம், நலவாழ்வு மையங்கள், திருமணக்கூடம் என்று பல விதங்களிலும் தந்தை அவர்கள் மீது அக்கறையோடு செயல்பட்டாலும், நல்ல மனிதர்கள் அமையாமல் போயிருந்தால் இத்தனையும் வீணாகத்தான் போயிருக்கும், அல்லது உருவாகியிருக்கவே முடியாது.

ஒன்றிரண்டு பேர்களை உதாரணத்துக்கு அறிமுகப்படுத்துகிறேன்.

தந்தையாரின் கடைசி காலம் வரை அவரது முக்கிய உதவியாளராக, வலது கரமாகத் திகழ்ந்தவர். திரு. டி.பி.பாலு அவர்கள். தான் சொல்ல வேண்டிய குறிப்புகளையும், எழுத வேண்டிய கடிதங்களையும் டேப்பில் பதிவு செய்து இவரிடம்தான் கொடுப்பார் தந்தை. இவை உடனே டேப்பிலிருந்து பேப்பரில் மாறி செயலாக உருவாகும் பொறுப்பை மிகத் திறமையாகச் செய்தவர் திரு.பாலு.

வெற்றிகரமான பெரிய மனிதர்களிடம் பணிபுரிபவர்களுக்குத் திறமையோடு நேர்மையும், ஒழுக்கமும் மிக அவசியம். அதிலும், ரகசியங்களைக் காப்பதிலும், உண்மையை ஒளிக்காமல் எடுத்துரைப்பதிலும் அதிக கவனம் தேவை. இந்த குணங்களின் மொத்தக் குத்தகையாகத் திகழ்ந்தார் திரு. பாலு.

அவரிடம் அவ்வப்போது, 'இந்த பைலை எடுத்து உள்ளே வை' என்றும் 'இது பத்திரமாக இருக்கணும்' என்றும் பல கோப்புகள், கடிதங்கள், மற்ற பொருட்களைக் கொடுத்து வந்திருக்கிறார் தந்தை. இவை பற்றி எங்கள்யாருக்கும் எதுவும் தெரியாது. தந்தையின் மறைவுக்குப் பின் சில நாட்கள் கழித்து பாலு அவர்கள் என்னிடம் தயங்கியபடி ஒரு பெரிய பாக்கெட்டைக் கொண்டு வந்தார்.

''இவையெல்லாம் என்னிடம் உங்கள் தந்தை கொடுத்து வைத்திருந்தார். யாரிடம் தருவது என்று தெரியவில்லை, அதனால் உங்களிடம் ஒப்படைக்கிறேன்'' என்றார்.

எங்கள் நிறுவனத்தின் நிர்வாக மேலாளர், 'ஜி.ஆர்' அவர்களை உடன் வைத்துக்கொண்டு அந்தப் பாக்கெட்டைப் பிரித்தபோது, உள்ளே இருந்தவை மிக முக்கியமானவை என்று புரிந்தது.

சாட்சி ஏதுமின்றி கொடுக்கப்பட்டவைகளை அப்படியே பாலு அவுர்கள் ஒப்படைத்திருக்க வேண்டிய அவசியம் என்ன? மனச்சாட்சியே சாட்சியாக நடந்து கொண்டவரின் நேர்மைக்கும் விசுவாசத்துக்கும் இது ஒரு சின்ன உதாரணம்தான்.

என் தந்தை காலத்தில் மட்டுமல்ல, எனக்கும் பல விதங்களிலும் உதவி, தந்தையின் நிர்வாக வழிமுறைகளை எனக்குப் புரியவைத்து, ஒவ்வொரு விஷயத்திலும் தெளிவான செயல்பாட்டுக்குக் காரணமான திரு. பாலு, என் மகளின் திருமணத்துக்கான ஏற்பாடுகளைக் கவனிப்பதிலும் எனக்கு உதவினார். ஆனால், திருமண விழா நடப்பதற்கு ஒரு வாரம் முன்பு மறைந்து போய் விட்டார்.

பெருந்தன்மையில் இந்த மனிதரைப் போன்றே சிறந்து நிற்கும் மற்றொருவர் திரு.எஸ்.பி.அர்ஜுனன் அவர்கள். என் தகப்பனாருக்கு உதவியாளராக இருந்து தற்போது என்னுடன் பணியாற்றி வருபவர். புதுமையான விதத்தில் விளம்பரங்கள் செய்ய புதுப்புது ஐடியாக்கள் எப்போதும் வைத்திருப்பார். அதிகம் பேசாத நபர்.

வெகு காலமாகப் பணிபுரிந்து வரும் இவருக்குத் தனிப்பட்ட முறையில் ஏதாவது செய்ய வேண்டும் என்று திடீரென்று தோன்றிற்று. அவரை அழைத்து, என் விருப்பத்தைத் தெரிவித்தேன்.

''இந்த அலுவலகத்தில் வேலை செய்கிறீர்கள் என்பதற்காக இப்படிக் கேட்கவில்லை. இத்தனை வருஷம் பழகிய நெருக்கத்தினால்

S.P.அர்ஜுனன்



N கிருஷ்ணன்



ஏதாவது செய்ய வேண்டும் என்று நினைக்கிறேன். ஐயாயிரம் அல்லது பத்தாயிரம் ரூபாய்க்குச் செக் எழுதி உங்களிடம் தந்துவிடுவது ரொம்ப சுலபம்தான். ஆனால் நான் சொல்வது வெறும் பணமல்ல. உங்களுக்குத் தேவையான விஷயம் ஏதாவது இருந்தால் சொல்லுங்கள், வாங்கித் தருவது எனக்கு சந்தோஷத்தைக் கொடுக்கும். அல்லது, என்னால் ஏதாவது காரியம் ஆக வேண்டியது இருந்தால் தெரிவியுங்கள், கட்டாயம் செய்கிறேன். இதை நீங்கள் உடனே குறிப்பிட வேண்டிய அவசியமில்லை. நன்றாக யோசித்துவிட்டுப் பிறகு கூறுங்கள். ஆனால் ஏதாவது என்னிடம் நீங்கள் கேட்கத்தான் வேண்டும்'' என்று விளக்கினேன்.

மௌனமாக என் பேச்சைக் கேட்டபடி அமர்ந்திருந்தார் திரு. அர்ஜுனன். ஐந்து நிமிடங்களுக்கு அவரிடம் எந்த அசைவும் இல்லை. தலை குனிந்தவாறே ஏதோ யோசித்தார். பிறகு மெல்லிய குரலில் பேசினார்.

''என் மகளின் திருமணத்துக்காக உங்கள் தந்தையிடம் கடன் வாங்கியிருந்தேன். அதை என் சம்பளத்தில் மாதா மாதம் பிடித்து வந்தார்கள். போன மாதத்துடன் அந்தக் கடன் தீர்ந்துபோய், இந்த மாதம் முழு சம்பளம் வாங்கியிருக்கிறேன். எண்ணிப் பார்த்தபோது ஆயிரத்துச் சொச்சம் இருந்தது. நான் செய்யும் வேலை, நேரம் இவற்றைக் கணக்கிட்டுப் பார்த்தால் இந்தச் சம்பளமே எனக்கு அதிகம். இதற்கு மேல் எனக்கு செலவும் இல்லை, தேவையும் இல்லை. அதனால், இப்போது நீங்கள் எனக்குக் கொடுத்து வருவதே போதும், இதற்கு மேல் கேட்க வேறு என்ன இருக்கிறது?''

நான் அப்படியே அசந்து போய் விட்டேன்!

அவருக்கு நான் ஏதாவது செய்ய நினைத்தது பெருந்தன்மையான செயல் என்று என் மனதுக்குள் விழுந்திருந்த நினைப்பு, அதைத் தெளிவாகவும் தீர்மானமாகவும் மறுத்த அவரது உண்மைப் பெருந்தன்மையினால் அப்படியே அழிந்து போயிற்று.

வாழ்க்கை வசதிகள் என்று பார்த்தால் அவர் மிக உயரத்தில் இருப்பவர் அல்ல. கோடீஸ்வரர்களுக்குக் கூட எப்போதும் ஏதாவது தேவை என்று இருக்கும்போது இந்த சாதாரண மனிதருக்குத் தேவையே இல்லை!

வீட்டுக்குப் புதிதாக ஒரு பொருள் வாங்கலாம், குடும்பத்தோடு எங்காவது வெளியூர் பிரயாணம் போகலாம், அல்லது இன்னும் வேறு ஏதாவது செய்ய நினைக்கலாம். ஆசைக்கு அளவு உண்டா என்ன!

ஆனால் அவர் எதைக் கேட்டார் தெரியுமா?

''எனக்காக எதையாவது கொடுத்தேயாக வேண்டும் என்று நீங்கள் வற்புறுத்தினால், இங்கே யாரும் உபயோகிக்காத ஒரு பழைய ரேடியோகிராம் இருக்கிறதே, அதைக் கொடுக்க முடியுமா? அதில் பாட்டுக் கேட்பது எனக்குப் பிடித்திருக்கிறது''.

இசையில் அவருக்கு இருக்கும் ஆர்வத்தை அறிந்திருந்தேன்; எப்போதாவது அந்த ரேடியோகிராமில் அவர் பாடல்களைக் கேட்பதைப் பார்த்தும் இருந்தேன். எனவே, அலுவலகத்திலிருந்து அந்த ரேடியோகிராம் அன்று மாலையே அவருடைய வீட்டுக்கு அனுப்பி வைக்கப்பட்டது!

பெரிய மனிதர்கள் பெருந்தன்மையோடு நடந்து கொள்வதைவிட இந்த இருவரைப் போன்ற சாதாரணர்களின் உயர்ந்த உள்ளம், அதிலும் தாங்கள் பெருந்தன்மையோடு நடந்து கொள்கிறோம் என்கிற எண்ணம்கூட இல்லாத எளிய பண்பு - என்னைக் கவர்ந்த ஒரு விஷயம்.

இவர்கள் மட்டுமா!

எங்கள் நிறுவன மேலாளர், 'ஜி.ஆர்.' என்று அன்போடு அழைக்கப்படும் திரு. ஜி.ரங்கநாதன்; ஸ்டுடியோவை நிர்வகித்துக் கொண்டிருக்கும் திரு.ஆர்.ரங்கசாமி; அலுவலகக் கணக்குகள், வருமான வரி போன்ற விஷயங்களைப் பொறுப்பாகக் கவனித்து எங்களை வழிநடத்திச் செல்லும் 'லேனா' என்ற திரு. லட்சுமணன் செட்டியார்; எங்கள் 'ஆர்வோ' மற்றும் பல நிறுவனங்களை கவனித்து

L.வெங்கடாசலம், K.M.லெட்சுமணன் செட்டியார்





G.ரங்கனாதன், R.ராமசாமி ஐயங்கார், R.ரங்கசாமி ஐயங்கார்

வரும் திரு. எல்.வெங்கடாசலம் என் செயலாளர் திரு. என்.கிருஷ்ணன்; என் நேர்முக உதவியாளரான திரு. மலையப்பன்; தயாரிப்பு நிர்வாகத்தில் உள்ள இரு வீரப்பன்களும், திரு. வள்ளியப்பனும் இளைய தலைமுறையைச் சேர்ந்த பாபு. வீடியோ பாஸ்கர் விசுவநாதன், தீபக் பிரசாத், ஆடிட்டர் ஸ்ரீதர், ரமேஷ், தியாகராஜன், கண்ணன் போன்ற துடிப்பான இளைஞர்கள் ....

எங்கள் நிறுவனங்களுடன் பல வருடங்களாகத் தொடர்புள்ள சிறந்த ஆடிட்டர்களான திரு. ஆர். வெங்கட்ராமன், திரு.எம்.பாலு, திரு. டி.எ. வெங்கடாச்சாரி, வழக்கறிஞர்கள் திரு. ஆர். நாராயணன், திரு. வி.சுப்ரமணியன் என்கிற பாலு....

இப்படி ஒவ்வொருவரையும் எங்கள் குடும்பத்தின் தூண்களாகத்தான் கருதுகிறேன். இந்த அன்பு மனிதர்களின் உயர்ந்த உள்ளம்தான் எங்களையெல்லாம் நல்ல முறையில் பணியாற்ற உறுதுணையாக இருந்து வருகிறது.

நேபாள குழந்தைகளுடன் எம்.ஜி..ஆர்.



# 28. வெற்றியின் ரகசியம்



'அன்னை' படத்தில் சந்திரபாபு (1962)

'புத்தியுள்ள மனிதரெல்லாம் வெற்றி காண்பதில்லை, வெற்றி பெற்ற மனிதரெல்லாம் புத்திசாலியில்லை' என்று எங்கள் 'அன்னை' படத்தில் நடிகர் சந்திரபாபு பாடியிருந்தார்.

புத்திக்கும் வெற்றிக்கும் தொடர்பு இருக்கிறதா என்று கேட்டால் இருக்கலாம் அல்லது இல்லாமல் போகலாம் என்கிற இரண்டுங்கெட்டான் பதிலைத்தான் சொல்ல வேண்டியிருக்கும். ஆனால் எந்த மனிதனின் வெற்றிக்கும் காரணம் ஏதோ ஒரு திறமை என்பதை மட்டும் அடித்துக் கூறி விடலாம்.

படிப்பு என்பது ஒரு தகுதி. படிக்கும் வாய்ப்பு எத்தனை பேருக்குக் கிடைத்தாலும் அத்தனை பேரும் அந்தத் தகுதியை உபயோகித்து திறமைசாலிகளாக மாறி விடுவதில்லை. புத்திசாலித்தனம் என்பது ஒரு திறமை; தொழில் அறிவு என்பது மற்றொரு திறமை; மனிதர்களிடம் நன்றாகப் பழகி அரவணைத்துப் போகிற குணம் என்பது இன்னொரு திறமை; வியாபார சூட்சுமம் வேறு ஒரு திறமை. இதுபோல் மற்றும் பல.

ஒருவருக்கு இவற்றுள் எந்தத் திறமை இருந்தாலும் அதை அடிப்படையாக வைத்து வாழ்வில் முன்னேறிவிடலாம். அப்படியிருக்க, இதுதான் வேண்டும், இது இருந்து பயனில்லை என்று எப்படிக் கூற முடியும்!

சிலர், ''அந்த முட்டாளிடம் பணம் இருக்கிறதே தவிர அறிவே கிடையாது! அவனுக்கு அதிர்ஷ்டம் இருக்கிறது. கடவுள் கொடுத்திருக்கிறார்! அவனிடம் போய் பணம் மாட்டிக்

கொண்டிருக்கிறதே!'' என்று அலுத்துக் கொள்வதை நான் கேட்டிருக்கிறேன்.

தன் திறமை என்ன என்பதை அவர்கள் முழுவதுமாக உணர்ந்திருந்தால், தங்களிடம் இருக்கும் அறிவும் ஒரு முக்கியமான திறமை என்று அறிந்திருந்தால், நிச்சயம் அதைப் பயன்படுத்தி முன்னேறியிருப்பார்கள். வெறும் பணத்தை மட்டும் வைத்து முன்னேறிவிடலாம் என்று விரும்பியிருக்க மாட்டார்கள். லாட்டரியில் லட்சக்கணக்கில் விழுந்தும்கூட, அதை சரியானபடி செலவழித்துப் பெருக்கும் திறமை இல்லாததால் கோட்டைவிட்டவர்கள் எத்தனை பேர் உண்டு தெரியுமா!

ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதத்தில் திறமை இருக்கலாம். படிப்பு உள்ளவன் பணமில்லாதவனாக இருக்கலாம். பணமுடையவன் எழுத்து வாசனைகூட அறியாதவனாக இருக்கலாம். பணமும் படிப்பும் உடையவனுக்கு, தொழில் பற்றிய ஞானமே இல்லாமல் அந்தப் படிப்பும் பணமும் துருப்பிடித்துப் போகலாம். பணம், படிப்பு, தொழில் அறிவு என்று எதுவுமே இல்லாதவன் உழைப்பு என்ற திறமையை மட்டும் வைத்துப் பிழைத்துக் கொள்ளலாம்!

எத்தனையெத்தனை வகையான திறமைகளை இப்படி அடுக்கலாம் என்று யோசித்தால் 'வெற்றி காண ஆயிரம் வழிகள்' என்று புத்தகமே எழுதலாம்!

நான் ஒரு பெரிய படிப்பாளி, அறிவாளி என்று தம்பட்டம் அடித்துக் கொண்ட ஒருவர் பட உலகுக்குள் நுழைந்தார். ஆங்கிலப் படங்கள், ஆங்கில இலக்கியம் என்று கரைத்துக் குடித்த அந்த நபர் நமது தமிழ்ப் படத்துறையில் சாதித்தது ஒன்றுமே இல்லை!

இதுதான் தியரி, இப்படித்தான் செய்ய வேண்டும் என்று கோட்பாடுகளை விவரித்து விமர்சித்த அவர், நடைமுறைக்குத் தேவையான அனுபவத்தைப் பெறக்கூட முயற்சிக்கவில்லை. ஏட்டுச் சுரைக்காய் கவைக்கு உதவாது என்கிற பழமொழிக்கு உதாரணமாக ஆகிவிட்டார்.

ஆனால், அதிகம் படிக்காத திரு. எம்.எம்.ஏ.சின்னப்பா தேவர் அவர்கள் திரைப்படத்துறையில் பெரிய வெற்றி கண்டு தன் முத்திரையை அழுத்தமாகப் பதித்து ஒரு முன்னோடியாகவே விளங்கினார். அவருடைய வெற்றியின் ரகசியம் என்ன?

உழைப்பு, நேர்மை, காலந்தவறாமை, வியாபார நுணுக்கம் என்று பலவற்றைச் சுட்டிக்காட்டலாம். காரணம் எதுவானாலும், தன்



சாண்டோ M.M.A.சின்னப்பா தேவருடன் ஏவி.எம்.

திறமையை அடையாளம் கண்டு கொண்டு அதை மூலதனமாக வைத்துத்தான் அவர் உயர்ந்தார் என்பதை மட்டும் உறுதியாகக் கூறுவேன்.

மருத்துவப் படிப்பிலேயே, ஒவ்வொரு துறையாகப் படித்துப் படித்து மெடல்களாக வாங்கிக் குவித்தவர்களைவிட, அடிப்படை மருத்துவக் கல்வி மட்டுமே பயின்று அனுபவத்தினால் 'கைராசிக்காரர்' என்ற பேரும் புகழும் பெற்றவர்கள் பலரை நாம் பரவலாகப் பார்க்கத்தான் செய்கிறோம். அதிகம் படிப்பதே கூடாது என்று நான் சொல்ல வரவில்லை. எத்தனை படித்தாலும் அதை அனுபவத்தில் வாழ்க்கைக்குப் பயன்படும்படியாக உபயோகிப்பதுதான் முக்கியம் என்று கூற விரும்புகிறேன்

நிதானம், சலிப்பின்மையோடு, இதமான சொற்களை இனிமையாகச் சொல்லி பொறுமையாக நம் வியாதியின் விவரங்களைக் கேட்டறிந்து, மருந்து எழுதித் தருவதோடு மட்டும் நின்று விடாமல் இதமான ஒரு பதிலைக்கூறி பாதி நோயை அங்கேயே குறைத்து அனுப்பும் திறமை ஒருசில டாக்டர்களுக்கே கை வந்த கலை. இப்படிப்பட்ட ஒரு திறமையை எனது ரோட்டரி சங்க நண்பர் டாக்டர் வெங்கடசுப்ரமணியன் அவர்களிடம் கண்டு வருகிறேன். அவரது இனிமையான சுபாவமும், சிரித்த முகமுமே பாதி வியாதியை விரட்டி விடும்! இவரைப் போன்ற டாக்டர்களுடன் பழகும்போது, நம் சொந்த சகோதரர்களுடனோ அல்லது நெருங்கிய மனிதர்களுடனோ பழகும்

உணர்வு ஏற்படுகிறது. இந்த உணர்வை நம்மிடம் ஏற்படுத்துவதுதான் அவர்கள் வெற்றியின் ரகசியம்!

உலக அளவில்கூட, சராசரி மனிதர்கள்தான் அதிகமான வெற்றிகளைப் பெறுகிறார்கள் என்ற ஆங்கிலப் பழமொழிகூட ஒன்று கேள்விப்பட்டிருக்கிறேன். அதிகம் படித்து, அளவுக்கு அதிகமாக சிந்தித்துக் கொண்டே இருப்பவர்கள் தங்கள் மனதில் எழும் ஏராளமான சிந்தனைகளினால் குழம்பிப் போய் விடுகிறார்கள். சுமாரான அறிவும் திறமையும் உள்ளவர்கள் தங்கள் தகுதி இவ்வளவுதான் என்று புரிந்து கொண்டு விடுவதினாலோ என்னவோ, அதை வைத்து முடிந்தவரை உயர்ந்துவிட வேண்டும் **என்று** பாடுபடுகிறார்கள். ரொம்ப அறிவாளிகளுக்கு எளிதில் எதிலும் ஒரு திருப்தியும் நிறைவும் ஏற்பட்டு, விடுவதில்லை. என்பதே அவர்கள் குழம்புவதற்குக் காரணம்!

அன்றாட வாழ்வில்கூட இது தற்போது சகஜமாகப் பார்க்கும் விஷயமாக ஆகிவிட்டது. எக்கச்சக்கமாகப் படித்துப் பட்டங்களை வரிசையாகப் பெற்றுவிடும் பிள்ளையும் பெண்ணும், தங்களுக்கேற்ற வாழ்க்கைத்துணையும் இதேபோன்ற தகுதிகளோடு இருக்க வேண்டும் என்ற எதிர்பார்ப்பில், வரும் வரன்களையெல்லாம் ஒதுக்கிவிட்டு ஏதோ ஒரு பெரிய 'அறிவாளி'க்காகக் காத்துக் காத்து இளமையைக் கழிப்பது இன்று நிறைய வீடுகளில் நடக்கிறது.

உலகியல் வேறு, நடைமுறை வாழ்வு வேறு, படிப்பு வேறு, தொழில் வேறு என்பதைத்தான் உணர வேண்டும்.

''கடவுள் எனக்குத் திறமையைக் கொடுத்திருக்கிறார். என்னிடம் திறமை இருக்கிறது, ஆனால் ஆண்டவன் சந்தர்ப்பத்தைக் கொடுக்கவில்லையே!'' என்கிற புலம்பல்களைக்கூட நான் பலமுறை கேட்டிருக்கிறேன்.

சந்தர்ப்பம் என்பது ஒருமுறைதான் நம் வாசலில் வந்து நிற்கும், அதைத் தவற விடாமல் உள்ளே இழுத்துப் போட்டுக் கொண்டு விட வேண்டும் என்று ஒரு ஆங்கிலப் பழமொழி உண்டு. இதற்கு ஒரு நல்ல உதாரணத்தை எங்கள் திரை உலகிலேயே கண்டிருக்கிறேன்.

நல்ல ஆர்வமுள்ள ஒரு நபர். இயக்குனராக முதல் முறையாக ஒரு வாய்ப்பு கிடைத்திருக்கிறது. படத்துக்கான ஏற்பாடுகள் முடிந்து அன்றுதான் முதல் நாள் படப்பிடிப்பு. நடிக, நடிகையர், காமிரா, செட், விளக்குகள், வசனம் எல்லாம் தயார். ஒத்திகை பார்த்து முடிந்து 'டேக்'குக்குச் செல்ல வேண்டிய தருணம்.

'ஸ்டார்ட் காமிரா, ஆக்ஷன்' என்ற சம்பிரதாய வார்த்தைகளைச் சொல்லி இயக்குனர் படப்பிடிப்பைத் துவங்க வேண்டும்.

இங்கேதான் தகராறு! பலமுறை முயன்றும்கூட அந்த இயக்குனரால் இந்த வார்த்தைகளைச் சொல்ல முடியவில்லை! பயமோ, நடுக்கமோ, தயக்கமோ, வெட்கமோ - ஏதோ ஒரு காரணம். ரொம்ப நேரம் காத்திருந்தும், அவரால் படப்பிடிப்பைத் துவக்கி வைக்க முடியவில்லை.

பிறகு, தன் அருகிலிருந்த உதவியாளர் ஒருவரைக் கூப்பிட்டு படத்தைத் துவக்கச் சொன்னார். அவரும் துணிவுடன் உடனே 'ஸ்டார்ட்' என்று சொல்லி இயக்கத்தைத் துவக்கினார். அன்று முழுவதும் எடுக்கப்பட்ட அத்தனை காட்சிகளையும் அந்த உதவியாளர்தான் துவக்கி வைத்தார்.

மாலை ஆனதும், இயக்குனர், அந்த உதவியாளரை அழைத்து, ''என்னிடம் திறமை இருந்தாலும்கூட படப்படிப்பு நடத்தி எல்லாவற்றையும் நிர்வாகிக்கும் அளவுக்குத் தன்னம்பிக்கை இல்லை. உன்னிடம் திறமையோடு தன்னம்பிக்கையும் நிறைய இருக்கிறது. அதனால் நீயே இந்தப் படத்தை இயக்கிவிடு!'' என்று சொல்லி தான் ஒதுங்கிக் கொண்டார்.

இப்படித் தன்னைத் தேடி வந்த சந்தர்ப்பத்தை விட்டு விடாமல் உபயோகித்து வெற்றி கண்ட அந்த உதவியாளர், டான்ஸ் மாஸ்டராக இருந்து பிற்காலத்தில் பிரபல இயக்குனராக விளங்கிய திரு. வேதாந்தம் ராகவையா அவர்கள்.

M.முருகன், ஜெமினிகணேசன், ஏ.வி.எம்முடன்



இயக்குனர் என்பவருக்கு முதல் மூலதனமான திறமை, தன்னம்பிக்கைதான். அடுத்ததாக, உரிய நேரத்தில் தகுந்த வார்த்தையைப் பொருத்தமாகச் சொல்லி தேவையான முடிவை உறுதியாக எடுக்கும் திறமை. இவை இரண்டும் இல்லாத காரணத்தினாலேயே ஒருவர் வாய்ப்பு கிடைத்தும்கூட நழுவ விட்டு விட்டார்; இவை தன்னிடம் இருப்பதைப் புரிந்து உபயோகித்ததனாலேயே திரு. வேதாந்தம் ராகவையா இயக்குனராக அறிமுகப்படுத்தப்பட்டு அங்கீகரிக்கப்படவும் செய்தார்.

முடிவெடுக்கும் திறமை எந்தவொரு நபருக்குமே மிக முக்கியமாக இருக்க வேண்டிய அம்சம் என்று என் தந்தையார் குறிப்பிடுவார். எங்களுக்கெல்லாம் இந்தத் திறமை இருக்கிறதா என்பதை சோதித்தும் பார்த்திருக்கிறார்.

என் தம்பி பாலுவின் திருமணத்துக்காக ஒரு கூடம் எங்கள் ஸ்டூடியோ வளாகத்தில் நிர்மாணிக்கப்பட்டபோது அதில் காற்றோட்ட வசதிக்காக ஜன்னல் சரியாக அமைக்கப் படவில்லை என்று எனக்குத் தோன்றியது. அதை தந்தையிடம் சென்று சொன்னேன். ''அதெல்லாம் பரவாயில்லை'' என்று அலட்சியமாக என் யோசனையைத் தள்ளி விட்டு விட்டார். எனக்கு இதில் ஏமாற்றம்தான் என்றாலும், நான் விடாமல் வற்புறுத்தினேன். நான்கைந்து முறை நான் சலிக்காமல் சொன்னதும், ''ஏன்? காற்று வராது என்கிறாயா?'' என்று புதிதாகக் கேட்கிற மாதிரி கேட்டார். 'ஆமாம்' என்று நான் விளக்கிக் கூறியதும், தானே வந்து பார்த்துப் பிறகு ஜன்னல் அமைப்புக்கு சம்மதித்தார்.

ஒரு விஷயத்தை சரியாகத் தீர்மானிக்கிறேனா, தீர்மானித்தபின் அதில் உறுதியாக இருக்கிறேனா என்பதைப் பரிசோதிக்கவே அப்படி முதலில் அதிக கவனமில்லாதவர் போல இருந்தார் என்பதை, ''நீ சொல்வது சரிதான், எனக்கும் அப்படித்தான் தோன்றியது'' என்று அவர் கூறியபோது புரிந்து கொண்டேன்.

என் தந்தையின் முடிவெடுக்கும் திறமை மிக அபாரமானது. ஒரே நொடியில் ஒரு நல்ல முடிவுக்கு வந்து விடுவார். ஆனால் அது அவசர கோலத்தில் அள்ளித் தெளித்த முடிவாகவும் இருக்காது. நன்றாக ஆராய்ந்து முடிவெடுப்பார். எடுத்த முடிவில் தீர்மானமாகவும் இருப்பார். நம்மை முடிவெடுக்கச் சொன்னால், பலவித சந்தேகங்களையும் சாத்தியக்கூறுகளையும் எழுப்பி விளக்கம் கேட்டு, பிறகு நல்ல முடிவுக்கு நாம் வரும்வரை காத்திருப்பார். அவர் மனதுக்குள் இருக்கும் அந்த முடிவை நாம் எட்டும் வரை காத்திருந்து, பின் அதை என்னவோ நாமே சொன்ன மாதிரி தோன்றச் செய்வார்!



A C திருலோக சந்தருடன் ஏவி.எம்.

ஒரு வேளை நாம் அபிப்பராயம் சொன்னது தவறாக இருந்தால், அந்தத் தவறினால் என்ன விளைவுகள் ஏற்படும் என்பதைச் சொல்வார். அதைப் புரிந்து நாம் தவறை ஒப்புக் கொண்டு மாற்றச் சொன்னால் நம் வாயாலேயே அந்த முடிவைத் தெரிவிக்கச் செய்து நமக்கு மதிப்பு வருகிற மாதிரி ஒரு தோற்றத்தை உண்டாக்கிவிடுவார். ''சரவணன் சொல்கிற யோசனை நன்றாக இருக்கிறது'' என்பார்!

இதேபோல், எதைச் செய்தாலும் ஒரு உறுதி தேவை என்பார். ஒருமுறை 'வீரத்திருமகன்' படத்தில் ஒரு காட்சியை மாற்றியமைக்கும்படி இயக்குனர் ஏ.ஸி.திருலோக்சந்தர் அவர்களிடம் தந்தை கூறினார். அவர் சொன்னபடி மாற்றம் செய்தால் காட்சி நன்றாக அமையாது என்று இயக்குனர் மறுத்துப் பார்த்தார். ஆனால் தந்தை உறுதியாக இருந்ததால் வேறு வழியின்றி மாற்றியமைத்தார். பிறகு படப்பிடிப்பு முடிந்து திரையிட்டுப் பார்க்கும்போது தான் மாற்றச் சொன்னதையே மறந்து விட்ட மாதிரி தந்தை, ''என்ன காட்சி இது! ஏன் இப்படி எடுத்திருக்கிறீர்கள்?'' என்று கோபித்தார். திருலோக்சந்தர் அவர்கள், ''நான் அப்போதே சொன்னேன், நீங்கள் கேட்கவில்லை. உங்களுக்குக்காகத்தான் இப்படி எடுத்தேன்'' என்று விளக்கம் கூற முயன்றபோது தந்தையாருக்கு ரொம்பக் கோபம் வந்துவிட்டது.

''எனக்கு அதெல்லாம் தெரியாது. நான் மாற்றச் சொல்லியிருந்தாலும் உங்களுக்கு அதில் சம்மதம் இருந்தால்தானே மாற்றியிருக்க வேண்டும்? இல்லை, இது சரியாக வராது என்று தீர்மானமாக நம்பியிருந்தால் எனக்கு அதைப் புரிய வைத்து என்னை உங்கள் வழிக்கு சம்மதிக்க வைத்திருக்க வேண்டாமா? ஒன்று நீங்கள்

'கன்வின்ஸ்' ஆகியிருக்க வேண்டும், அல்லது இன்று என்னை 'கன்வின்ஸ்' செய்திருக்க வேண்டும். இரண்டையும் செய்யாமல், யாருக்கும் பிடிக்காமல் நிர்பந்தத்துக்காக இப்படிக் காட்சி எடுத்து பிலிமை வீணாக்குவதால் யாருக்கு லாபம்? படத்தயாரிப்பு் என்று வந்து விட்டால் முதலாளி - தொழிலாளி என்பதெல்லாம் கிடையாது. நான் தயாரிப்பாளர், நீங்கள் டைரக்டர். ஆளுக்கு ஒரு பொறுப்பு இருக்கிறது. தயாரிப்பாளருக்கு விளங்க வைத்து ஒப்புக் கொள்ளச் செய்வது இயக்குனரின் கடமைதானே! உங்களுக்கே சம்மதமில்லாத விஷயத்தை கட்டாயத்துக்காக எப்போதும் ஒப்புக் கொள்ளாதீர்கள்'' என்று புரிய வைத்தார்.

நாம் செய்வதில் நமக்கே ஒரு உடன்பாடு இருக்க வேண்டும் என்பதைத்தான் அவர் வலியுறுத்தினார் என்று நாங்கள் அனைவருமே புரிந்து கொண்டோம்.

வாழ்வில் திறமையோ, சந்தர்ப்பமோ எல்லாருக்கும் ஒன்றாக அமைந்து விடுவதில்லை. மனிதருக்கு மனிதர் எல்லா விதங்களிலும் மாறுபட்டுப் போவதற்குக் காரணம் என்ன என்று யாருக்கும் தெரிவதில்லை. பூர்வ ஜென்ம பலனோ அல்லது கடவுளின் அருளோதான் காரணமாக இருக்கும் என்று நான் நம்புகிறேன்.

ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு திறமை, சக்தி, சந்தர்ப்பத்தைக் கொடுக்க கடவுள் தீர்மானித்திருக்கலாம். எல்லாமே நம்மால் வந்தது என்று எண்ணுவது தவறு. இவை இல்லாதவரைக் கேவலமாகப் பழித்துப் பேச யாருக்கும் அருகதை கிடையாது.

எப்போது யாருக்கு எது கிடைக்கும், கிடைத்தது எத்தனை காலம் நிலைக்கும், நிலைப்பதும் எப்போது மறையும் என்று கணக்குப் போட்டுப் பார்க்கும் சக்தி நம் எவருக்குமே கிடையாது. அதனாலேயே, இருப்பதைப் பற்றின அகந்தை, திமிர் கூடாது என்பார்கள் பெரியவர்கள்.

தந்தை எப்போதும் கூறுவார், ''வீ ஆர் ஒன்லி கேர் டேக்கர்ஸ், நாட் ஓனர்ஸ்'' (We are only caretakers, not owners) என்று. அதாவது, நாம் வெறும் பாதுகாவலர்கள் மட்டுமே, உரிமையாளர்கள் இல்லை என்பார். நம்முடைய பொருட்கள் எதுவும் கிடையாது. நாம் அந்தப் பொருட்களுக்கு சிறிது காலம் உரியவர்களாக இருக்கிறோம் என்பதைத் தவிர நம்முடையது என்று எதுவும் கிடையாது.

மனிதர்களோ, அசையாத சொத்துக்களோ - எதுவானாலும் நாம் உயிருடன் இருக்கும்வரையோ அல்லது அவை நம்முடன் இருக்கலாம்

என்று இறைவன் நிர்ணயித்த காலம் வரையோதான் நம்மிடம் இருத்திக் கொள்ள முடியும். அதை மீறி நாம் பாதுகாக்க நினைப்பது இயற்கைக்கு விரோதமான செயல்தானே!

இருக்கும் காலம் வரை திறமையை உபயோகித்து, சந்தர்ப்பத்தை நழுவ விடாமல் வாழ்ந்து விடுவதுதான் வெற்றியின் ரகசியமாக நான் கருதுகிறேன்.

யாருக்கும் கெடுதல் செய்யாமல் வளர முயற்சிப்பதுதான் நல்லது. நம் வாழ்வை பின்நோக்கிப் பார்த்து, நடந்தவைகளை அசைபோட்டுப் பார்க்கும்போது, யாரையோ கவிழ்த்துவிட்டு வந்த வெற்றியாகவோ அல்லது எவரையோ அழித்ததால் கிடைத்த வெற்றியாகவோ இருக்கக் கூடாது. யாரையும் அமுக்கி விடாத உண்மை வெற்றியாக இருக்க வேண்டும். நம் வெற்றி நமக்கே ஒருவிதப் பெருமிதம் தருவதாக இருக்க வேண்டுமே தவிர, குற்ற உணர்வை எழுப்புவதாக இருக்கக் கூடாது என்பதில் அழுத்தமான நம்பிக்கை உண்டு.

'வீரத்திருமகன்' வெளிப்புறப் படப்பிடிப்பில் (1962)



# 29. இன்றே, இப்பொழுதே!



ஏவி.எம்முடன் ஸ்டூடியோ பொதுமேலாளர் G ரங்கனாதன்.

ஒவ்வொரு நாளும் கண்விழிக்கும் போதே வேலைகளும் பிரச்னைகளும் நம்மை எதிர்பார்த்துக் காத்துக் கிடப்பது எந்த மனிதனுக்கும் உள்ள பொதுவான வாழ்க்கை முறைதான்.

வயது, உத்தியோகம், பொருளாதார நிலை, ஆண் - பெண் பிரிவு போன்றவற்றில் மாறுபாடுகள் இருந்தாலும், ஒரு விஷயத்தில் மட்டும் மனிதர்கள் வேற்றுமையின்றி இருக்கிறார்கள். வேலை, கடமை, பொறுப்பு இல்லாதவரே இருக்க முடியாது என்பதுதான் அது. இவற்றை எத்தனை தூரம் பொருட்படுத்தி வாழ்கிறார்கள் என்பது வேறு விஷயம், ஆனால் இவை அறவே இல்லை என்று சொல்லி விட முடியாது. சந்நியாசிகளுக்குக் கூட நியமங்களும் பொறுப்புகளும் கடமைகளும் உண்டு. சின்னஞ்சிறு குழந்தைகள், ஒருசில நோயாளிகள் போன்ற சிலரை வேண்டுமானால் நம் பட்டியலிலிருந்து விலக்கி விடலாம். மற்றபடி ஏதோ ஒரு விதத்தில் பணியாற்ற வேண்டிய நிலைதான் எந்த மனிதனுக்கும் உள்ளது.

பரம்பரையாக வந்ததோ, அல்லது பழக்கம் காரணமாக உண்டானதோ தெரியாது - நமக்கென்று சில நியதிகளைக் கடைப்பிடித்துதான் வருகிறோம். காலை எழுந்ததும் பல் விளக்குகிறோம், பிறகு குளியல் இத்தியாதிகள். அதன் பிறகே காலை உணவு. உடல்நலம் சரியில்லாமல் இருந்தாலே ஒழிய குளிக்காமல்,

உடலை சுத்தப்படுத்தாமல் உணவு உட்கொள்வதில்லை. மருத்துவ ரீதியில் உடல்நலம் கருதியும் நம் முன்னோர்கள் இப்படிப்பட்ட ஒரு அன்றாட நியதியை உண்டாக்கி வைத்திருக்கலாம்.

இதே மாதிரியான ஒரு நேரம் பிசகாத அட்டவணை நமது மற்ற அலுவல்களுக்குப் பொருந்தாது என்றாலும் ஓரளவுக்குத் திட்டமிட்டு வைத்துக் கொள்ளலாம். நமது பொதுவான பணிகள் என்னென்ன, இவற்றில் முக்கிமானவை எவையெவை என்பதைக் குறித்துக் கொண்டு விட்டால் எதையும் மறந்து விடாமல் நிறைவேற்றி விடலாம்.

எந்தெந்த வேலைகளுக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டும் என்பதை நாம்தான் நமது அலுவல்களின் அவசரத்துக்கு ஏற்ப தீர்மானித்துக் கொள்ள முடியும். ஆங்கிலத்தில் 'ஆர்டர் ஆஃப் ப்ரையாரிடி' (Order of Priority) என்று சொல்வார்களே, அப்படி ஒரு தெளிவான குறிப்பு இருப்பது நல்லது. இல்லையானால், நாம் அனாவசியமாக ஓடிக்கொண்டே இருப்பதுதான் மிஞ்சுமே தவிர செய்திருக்க வேண்டிய வேலைகளில் சில அப்படியே நின்று போயிருக்கும்.

உதாரணமாக, கடைத்தெருவில் துணிமணி வாங்கப் போக வேண்டும் என்றும் குழந்தைக்குப் பள்ளிக்கூட சம்பளம் கட்ட வேண்டும் என்றும் இரண்டு பணிகளைக் குறித்து வைத்திருப்போம். இவற்றுள் எதை முதலில் செய்வது? துணிமணி இன்று வாங்க முடிந்தால் நல்லதுதான். முடியவில்லை என்றால் நாளையும் போகலாம். ஆனால், பள்ளிக்கூட சம்பளம்? இன்றுதான் கடைசி தினம் என்கிறபோது 'அதைச் செய்யாமல் விட்டு விட்டால் பள்ளியிலிருந்து குழந்தையின் பெயரையே நீக்கிவிடும் ஆபத்து வந்து விடுமே!

இப்படி ஒவ்வொரு வேலையையும் ஏன் செய்ய வேண்டும், செய்தால் என்ன நன்மை, செய்யாவிட்டால் என்ன நஷ்டம் என்று சீர்தூக்கிப் பார்த்துப் புரிந்து கொள்ள முடியுமானால் பிரச்னையே இல்லை.

என்னிடம் சில சமயம் கல்லூரி அட்மிஷனுக்காக சிலர் சிபாரிசு கேட்டு வருவதுண்டு. எல்லா கல்லூரிகளிலும் சேர்வதற்கான காலக்கெடு முடிந்து மிகத் தாமதமாக ஒருசிலர் வருவார்கள். ''பரீட்சை முடிவுகள் வந்த உடனேயே என்னிடம் சொல்லியிருக்கலாமே!'' என்று சொன்னால், 'ஒரே ஒரு காலேஜில்தான் விண்ணப்பித்திருந்தேன். கிடைத்து விடும் என்று நம்பினேன். அங்கேயிருந்து 'இல்லை' என்ற கார்டு இப்போது வந்துவிட்டதனால்தான் உங்களிடம் வந்தேன்'' என்பார்கள்.



குரியகோஸ், IIETதலைவர் சுந்தரராஜன்

ஒரே ஒரு கல்லூரிக்கு மட்டும் விண்ணப்பிப்பதனால் சீட் கிடைத்துவிடாது என்பதை, இன்றைய கல்லூரிகளில் காணப்படும் அட்மிஷன் நேர நெரிசலைக் கண்டும் கேட்டும் அறிந்தவர்கள் நன்றாகப் புரிந்து கொண்டிருப்பார்கள். கல்லூரிகளைச் சொல்லியும் குற்றமில்லை. விண்ணப்பிப்பவர்களுக்கெல்லாம் சீட் தர வேண்டும் என்று வற்புறுத்தினால், கல்லூரி வளாகத்தில் ஒற்றைக் காலுடன் நிற்கக் கூட இடம் இருக்காது!.

நல்ல மதிப்பெண்கள் பெற்றிருந்தாலும், கல்லூரி சட்டதிட்டங்கள், குறிப்பிட்ட பிரிவில் சேர்க்கக்கூடிய எண்ணிக்கை - இவற்றைப் பொறுத்து இடம் கிடைக்காமல் போவதற்கு வாய்ப்பிருக்கிறது. படிக்கும் அந்த மாணவன் அல்லது மாணவிக்கு ஒரு வருட காலம் வீணாகிவிடக் கூடாது என்பதை நினைவில் கொண்டால், இந்த விஷயத்துக்குக் கொடுக்க வேண்டிய முக்கியத்துவம் புரியும். உதவ வேண்டும் என்ற நல்ல எண்ணம் இருந்தாலும் உதவ முடியாத ஒரு சந்தர்ப்பத்தை உருவாக்கிவிடக் கூடாது.

செய்ய வேண்டிய் காரியங்களைத் தடையின்றி செய்ய அவற்றின் முக்கியத்துவத்தை உணர்ந்து செயல்படுவது மிக முக்கியம்.

இதேபோன்று, அந்தச் செயல்களை ஒத்திப்போடுவதும் எதிர் மறையான விளைவுகளை உண்டாக்கி விடலாம்.

உடல்நிலை சரியில்லாத ஒருவரைப் பார்க்கப் போக வேண்டும் என்று நினைத்திருப்போம். வேறு வேலைகள் வந்து குறுக்கிட்டுக் கொண்டே இருப்பதாலும், போகவேண்டும் என்று அத்தனை

தீவிரமாக எண்ணாததாலும் அதை ஒத்திப்போட்டு விடுவோம். இன்று போகலாம், நாளை போகலாம் என்று தள்ளித் தள்ளிப்போய் கடைசியில் மறந்தே விடும் சாத்தியமும் உண்டு! நோயாளி குணமாகி வீட்டுக்கு வந்து விட்டால், ''ஆஸ்பத்திரியிலேயே வந்து பார்க்க நினைத்தேன். முடியவில்லை, ஸாரி'' என்று சமாளிக்கலாம். ஒருவேளை, நோயாளியின் நிலை வேறு மாதிரி ஆகிவிட்டால்? அவர் உயிரோடு இருக்கும்போது போய்ப் பார்த்து விசாரிக்காமல் போனோமே என்கிற குற்ற உணர்வு நம் ஆயுளுக்கும் நம்மை உறுத்தாதா?

இப்படித் தள்ளிப் போடுவதை என் தந்தை ஒருநாளும் செய்ததில்லை. 'டுமாரோ ஈஸ் நோ குட்' (Tomorrow is no good) என்பது அவர் தன் நண்பர் திரு. கே.எஸ்.நாராயண ஐயங்கார் அவர்களிடமிருந்து கற்றது என்பார் அடிக்கடி.

தன் மேஜை மீது காத்திருக்கும் கோப்புக்களைக்கூட காக்க வைத்தது கிடையாது என் தந்தை. யாரையாவது ஐந்து மணிக்குப் பார்ப்பதாகச் சொல்லி வரச் சொல்லியிருந்தால், 4.59க்கே மேஜையைத் துடைத்து வைத்த மாதிரி அத்தனை கோப்புக்களையும் பார்த்து, கையெழுத்திட்டு அனுப்பி விடுவார்.

திடீரென்று யாராவது வந்துவிட்டாலும்கூட, அவர்களை வரவேற்பு அறையில் உட்காரச் செய்து, ''கொஞ்சம் பொறுத்துக் கொள்ளுங்கள்'' என்று அவர்களிடம் சொல்லிவிட்டு தன் டேபிளில் இருக்கும் காகிதங்களை சரிபார்த்து கையெழுத்திட்டு அனுப்பியபின்தான் வந்தவர்களுடன் பேசத் துவங்குவார்.

ஏவி.எம், நாராயண ஐயங்கார், மாடர்ன் தியேட்டர்ஸ் T.R.சுந்தரம்.





ஏவி.மெய்யப்பன்.

எந்தக் காகிதமோ, ஃபைலோ - அவரது மேஜையில் தங்கிப்போனதே இல்லை. முடிவு எடுக்க வேண்டியிருந்தால் உடனடியாகச் செயல்பட்டு விடுவார்; பதில் போட வேண்டிய கடிதமானால் அதனுடனேயே ஒரு குறிப்பு வைத்து ''டிராஃப்ட் எழுதிக்கொண்டு வா'' என்று கூறுவார்; கொடுப்பதை ஒரு நேரம் குறித்து ''இத்தனை மணிக்குள் கொடுத்துவிடு'' என்று குறிப்பிட்டுத்தான் கொடுப்பார்.

காலை நேரங்களில் முகச்சவரம் செய்யும்போது ஏதாவது செக் புத்தகம் அல்லது கடிதங்களில் கையெழுத்திட வேண்டி ஆட்கள் வந்து நின்றால், கையை உடனே கழுவிக்கொண்டு வந்து கையெழுத்திட்டு அவர்களை அனுப்பிய பிறகுதான் மறுபடி வேலையைத் தொடர்வார்!

''என்ன அவசரம், அந்த ஆள் சிறிது காத்திருக்கட்டுமே!'' என்றால், ''அது நல்லதில்லை. முதலில், எதையும் தள்ளிப்போடக் கூடாது என்றுதான் பாதியில் வந்தேன். இரண்டாவது, அவன் இங்கே நின்றுகொண்டு நாம் பேசுவதை எல்லாம் அனாவசியமாகக் கேட்டுக் கொண்டிருப்பான். தேவையில்லாத விஷயங்களை அவன் கேட்க வேண்டிய அவசியமில்லை'' என்று விளக்கம் அளிப்பார்.

சாப்பிடும்போது யாராவது வந்தால்கூட அவர்களது வேலையை முடித்து அனுப்பி விடுவார். காரில் போகும்போதும் உடன் டிரைவர் இருப்பதை உணர்ந்து பேச வேண்டும் என்பார்.

காரணமில்லாமல் மனிதர்களைக் காகக வைதது அவர்கள் நேரத்தையும் வீணாக்கக்கூடாது என்று அவர் கவனமாக செயல்பட்ட மாதிரி நான் வேறு யாரையும் பார்க்கவில்லை.

எந்த வேலையும் மிக நேர்த்தியாகத் திட்டமிட்டு முடிக்கும் பழக்கம் அவருக்கு இருந்ததால், சற்றும் பதட்டப்படாமல் நிதானமாக செயல்படுவார். குறித்த நேரத்துக்குள் பணிகளை முடித்துவிடும் பழக்கம் காரணமாக, நாளைக்குப் பார்த்துக் கொள்ளலாம் என்று எதையும் தள்ளிப்போடவே மாட்டார்.

வேலைகள் என்றில்லாமல், செய்ய வேண்டிய தரும காரியங்களைக்கூட கால நேரம் தவறாமல் உடனே செய்துவிட வேண்டும் என்பதில் அவர் தீர்மானமாக இருப்பார். ஒரு நபருக்கோ, நிறுவனத்துக்கோ நன்கொடை ஏதாவது தர வேண்டும் என்று அவர் முடிவெடுத்துவிட்டால், அதை மாற்ற எவராலும் முடியாது; அதைத் தள்ளிப்போடவும் இயலாது.

முன்பொரு சமயம் ஒரு பள்ளிக்கூடத்துக்குப் பெரிய தொகை ஒன்றை அளிக்க விரும்பினார் தந்தை. அந்தப் பள்ளியின் செயல்பாடுகள், ஒழுக்கம் போன்றவற்றைப் பற்றி விசாரித்து வரும்படி என்னை அனுப்பினார். நானும் தீர விசாரித்து, ''கொடுக்கலாம், நல்ல விதமாகத்தான் பள்ளி செயல்படுகிறது'' என்று சொன்ன பிறகுதான் தெரியவந்தது, அவர் அந்தத் தொகையை ஏற்கெனவே பள்ளிக்குக் கொடுத்து விட்டார் என்பது!

N.மகாலிங்கத்துடன் ஏவி.எம். (பின்னால்) அட்வகேட் நாராயணன், தேவி பிலிம்ஸ் ராஜகோபால் செட்டியார், முகமது யாசீன், சுப்பையா செட்டியார்.





ஸ்டார் கம்பைன்ஸ் ராமையா, ஏவி.எம், S.S.வாசன், நாராயண ஐயங்கார், நாகிரெட்டியார், ஹரிபாபு, (பின்னால்) R.ராமசாமி ஐயங்கார், இயக்குனர் பஞ்சு.

''கொடுக்க வேண்டும் என்று ஒரு நினைப்பு வந்த உடனேயே கொடுத்துவிட வேண்டும். மெதுவாகக் கொடுக்கலாம் என்று நினைத்தால், அந்தத் தர்ம சிந்தனை மறைந்து போய் 'கொடுக்காவிட்டால் பரவாயில்லை' என்ற எண்ணம் ஏற்பட்டு விடலாம். அதனால்தான் நான் கொடுத்து விட்டேன். உன்னை அனுப்பி விசாரிக்கச் சொன்னது அந்தப் பள்ளியைப் பற்றிய நல்ல அபிப்ராயத்தை உறுதிப்படுத்திக் கொள்ளத்தான். நினைத்த உடன் தர்மம் செய்வதினால் பத்தில் இரண்டு முறை தவறு ஏற்பட வாய்ப்புண்டு என்பதை ஒப்புக் கொள்கிறேன். நம் நல்ல எண்ணத்தை உபயோகித்துத் தவறான நபர் பலனடைந்து விடக்கூடும். ஆனால், பத்தில் எட்டு முறை நம் உதவி சரியானவர்களைத்தான் சென்றடைகிறது என்பதால் இந்தத் தவற்றையும் பொருட்படுத்த வேண்டியதில்லை.'' என்று அவர் சொன்னவை எனக்கு ஒரு நல்ல பாடமாக அமைந்தன.

நமக்குப் பிற்காலம் நம் சொத்து தருமத்துக்குப் போகட்டும் என்று எழுதி வைப்பதை விட, நாம் நல்ல நிலைமையில் இருக்கும்போதே தர்ம காரியங்களைத் தயங்காமல் செய்துவிட வேண்டும் என்பதிலும் தந்தையார் உறுதியாக இருந்தார்.

நிறைய சொத்து சேர்த்து வைத்துக் கொண்டு பிறகு தர்மம் பண்ணத் துவங்குகிறேன் என்று சொல்வது போகாத ஊருக்கு வழி கேட்பதைப் போலத்தான்! இருக்கும் பொருளைக் கொண்டு கைக்கு அடக்கமாக தர்மம் செய்து வருவதுதான் பலகாலம் நீடித்து நிலைக்கக்கூடியது. தந்தை சொன்னதைப்போல், நான்கு பேரிடம் அபிப்ராயம் கேட்பதும் தேவையில்லைதான். பெரும்பாலும் நம்

எஃணத்தை முறியடிக்கும் எதிர்மறை அபிப்ராயமாகக் கிடைத்து விட்டதென்றால், தர்மம் செய்ய வேண்டும் என்ற நோக்கமே தடைபட்டுவிடும். அதனால்தான் இதுபோன்ற பணிகளை ஒத்திப்போடாமல், முதல் முக்கியத்துவம் கொடுத்து முடித்து விடுவதில் நானும் இயன்றவரை முயற்சித்து வருகிறேன்.

ஆபீஸ் வேலை, பொதுப்பணிகள் மட்டும்தான் என்றில்லை, வீட்டிலேயே இருக்கும் பெண்களுக்கும்கூட ஒரு 'முன்னுரிமைப் பட்டியல்' இருப்பது நல்லது.

வீட்டை சுத்தம் செய்வதோ, அழகாகப் பராமரிப்பதோ தள்ளிப் போடக்கூடிய வேலைகளே அல்ல. புத்தகமோ, துணி வகைகளோ அல்லது வேறு பொருட்களோ - எடுத்து உபயோகித்ததும்' மறுபடி அதனதன் இடத்திலேயே வைத்து விட்டால், தனியாக சுத்தம் செய்து அடுக்கி வைக்க வேண்டிய அவசியம் ஏதும் இருக்காது.

என் வீட்டில் என் மனைவி லட்சுமி பீரோவை ஒழித்து அடுக்க ஒரு நாள், ரூமை சுத்தம் செய்ய ஒரு நாள் என்று தனித்தனியாக ஒதுக்கிக் கொண்டதே கிடையாது. தினமும் சிறிது நேரம் கூடுதலாக ஒதுக்கி இவற்றை அப்போதைக்கு அப்போது செய்து முடித்து விடுவாள். பிறகு ஒரு நாள் தனியாகப் பார்த்துப் கொள்ளலாம் என்று ஒத்திப் போடுவது இல்லாததால் எப்போதுமே வேலைகள் தங்கிப் போவதே இல்லை.

அத்தனை வேலைகளுமாகச் சேர்ந்து மலைபோல் குவிந்து கிடந்தால், முதலில் எதைத் தொடுவது, எதில் துவங்குவது, எப்படித் தொடர்வது என்ற குழப்பம் ஏற்பட்டு, கடைசியில் ஒன்றுமே முடியாமல் ஒரு தேக்கம் வருவதைத் தவிர்க்கவே முடியாமல் போய்விடும்!

பேரன் சித்தார்த்துடன் முத்துலட்சுமி சரவணன்



# 30. வேண்டாமே வீண் கௌரவம்!




கலைஞருடன் L.R.நாராயணன்

நம்மைச் சுற்றி நாமே சில விலங்குகளைப் பூட்டிக் கொண்டு நம் செயல்திறனைத் தேவையின்றி கட்டுப்படுத்தி வைக்கிறோம் என்று நான் அடிக்கடி சிந்தித்துப் பார்ப்பதுண்டு.

அனாவசிய கௌரவம் பார்ப்பது, வீண் செலவு செய்வது, பந்தாவுடன் ஒரு தேவையில்லாத மரியாதை எதிர்பார்ப்பது என்று பல விலங்குகள் தகர்க்கப்பட வேண்டியவை என்பது என் கருத்து.

முக்கியமாக 'பிரஸ்டீஜ்' என்ற வீண் கௌரவம் கொஞ்சம்கூட தேவையில்லாத ஒரு விஷயம்.

இங்கு என் நண்பர் திரு.எல்.ஆர்.நாராயணன் அவர்களின் நினைவு வருகிறது. 'உங்கள் நண்பன்' நாராயணனைப் பற்றித் தெரியாத தமிழ்த் திரைத்துறையினரோ, விளம்பரத்துறையினரோ, வானொலி ரசிகரோ இருக்க முடியாது. இவரிடம் எனக்குப் பிடித்த குணங்களில் ஒன்று, இவர் ஒரு அன்னப்பட்சி போல் எதிலும் எங்கும் நல்லதை மட்டுமே கண்டு சந்தோஷப்படுவதுதான்.

மோசமான படம், சரியான போர், ஒரு வாரம்கூட ஓடாது என்ற திரைப்படங்களில்கூட நல்ல அம்சமாக எது கண்ணில் படுகிறதோ அதை சிலாகித்துப் பேசுவார். நல்ல விஷயங்களைப் பற்றியே எப்போதும் பேசுவதுதான் இவரது வெற்றிக்குக் காரணம் என்று நான் அடித்துக் கூறுவேன்.

போலி கௌரவம் எதையும் பார்க்காமல் எல்லாரிடமும் விட்டுக் கொடுத்து இனிமையாகப் பழகுவார். எந்த ஒரு புதிய ஹோட்டல்

திறக்கப்பட்டாலும் முதல் பில் இவருடையதாகத்தான் இருக்க வேண்டும் என்பதில் குறிப்பாக இருப்பார்! இதைப் போலத்தான் சினிமா தியேட்டர் விஷயத்திலும்.

உட்லண்ட்ஸ் டிரைவ் - இன் ஹோட்டலில் முதல் தொகையைச் செலுத்தி விற்பனையை ஆரம்பித்தவர் திரு.நாராயணன்தான். எங்கள் ஏ.வி.எம். ராஜேஸ்வரி தியேட்டரில் முதல் அட்வான்ஸ் புக்கிங் டிக்கெட்டை வாங்கியவரும் இவர்தான்!

பொதுவாக உடம்பு இளைப்பதற்காகத் தேகப் பயிற்சிகளைச் செய்வது எல்லாருக்கும் வழக்கம். இவர் அதற்குக் கொஞ்சம் மாறுபட்டவர்! மசால் தோசை சாப்பிடுவதற்காக மைல் கணக்கில் நடந்து விட்டு வருவார்!

நாராயணன் அவர்களிடம் உள்ள இன்னொரு நல்ல வழக்கம் பலரும் பின்பற்ற வேண்டிய ஒன்று. ஹோட்டல்களில் சாப்பிடப் போகும்போது, அளவு தெரியாமல் ஆர்டர் செய்து சாப்பாடு மீந்து விட்டதென்றால், அதற்காக சிறிதும் தயங்காமல் ''இவற்றைப் பொட்டலம் கட்டிக் கொடுத்து விடுங்கள்'' என்று சர்வரிடம் கேட்டு வாங்கிக் கொள்வார்.

''நாம் காசு கொடுத்து வாங்கியிருக்கிறோம், இதிலென்ன பிரஸ்டீஜ் பார்ப்பது! இதை பாக் செய்து எடுத்துப் போனால் யாருக்காவது தேவை உள்ளவருக்குக் கொடுக்கலாமே! இப்படியே வைத்துவிட்டுப் போனால் இது வீணாகத்தான் போகும்'' என்று சொல்வார்.

நண்பர்களுடன் போகும்போதுகூட, நான்தான் பில்லுக்குப் பணத்தைக் கொடுப்பேன் என்று யாராவது போட்டி போட்டால் பேசாமல் விட்டுக் கொடுத்து விடுவார். குறுக்கே விழுந்து தடுத்து நண்பரோடு முட்டி மோதி ஒரு சலசலப்பை உண்டு பண்ணுவதெல்லாம் அவரிடம் கிடையாது!

அதேபோல், பில் வந்ததும் அதை கவனமாகப் படித்துப் பார்த்து செக் செய்வார். கட்டணத்திலோ அல்லது கூட்டலிலோ தவறு இருப்பது தெரிய வந்தால் உடனே சர்வரிடம் எடுத்துக் கூறி கணக்கை சரி செய்யச் சொல்வார். இதுமாதிரி விஷயங்களில் ஒரு அனாவசிய கௌரவம் பார்க்காமல் தன் மனதில் பட்டதைத் தயங்காமல் செய்யும் இந்த மனிதரை நான் பாராட்டிப் பின்பற்ற விரும்புகிறேன்.

பொதுவாகவே ஹோட்டலுக்குள் யார் பில்லுக்குப் பணம் கொடுப்பது என்று போட்டா போட்டி இருக்குமே தவிர, வெளியே வந்ததும் கண்ணில் படும் பிச்சைக்காரர்களுக்கோ வேறு ஏழைகளுக்கோ பணம் கொடுப்பதில் பலரும் ஏனோ ஒரு தயக்கம்



M.சரவணன், முத்துலட்சுமி சரவணன், லலிதா பால சுப்பிரமணியன்,
திருமதி. L.R.நாராயணன், L.R.நாராயணன், M.பாலசுப்பிரமணியன்.

காட்டுகிறார்கள். நூற்றுக்கணக்கில் நமது சாப்பாட்டுக்குச் செலவழிக்கும் நேரத்தில் ஒருசில ரூபாய்களை ஒரு ஏழையின் வயிற்றுப் பசியைப் போக்கக் கொடுப்பதில் யோசனை எதற்கு?

ஹோட்டலில் சர்வர்களுக்கு 'டிப்ஸ்' கொடுப்பதில்கூட சிலருக்கு மனம் வராது. அவர்களது பணியின் சிறப்பை அங்கீகரிக்கும் விதமாகவே இப்படிப்பட்ட ஒரு 'டிப்ஸ்' என்ற ஊக்குவிப்பு தேவைப்படுகிறது. இதை வெளியில் மட்டுமல்ல, வீட்டிலும்கூட பின்பற்ற வேண்டும் என்றே கருதுகிறேன். விருந்து அல்லது விசேஷங்கள் நடந்தால் வீட்டுப் பணியாளர்களுக்கு நம் மகிழ்ச்சியைத் தெரிவிக்க சின்ன அளவிலாவது 'டிப்ஸ்' கொடுப்பது நம் வீட்டு மனிதர்களையும் மகிழ்விக்கும்!

என்னை யோசிக்க வைத்த இன்னொரு விஷயம், பரிசுப்பொருள் கொடுப்பது! இதிலும் பதிலுக்கு பதில் என்று போட்டியில் ஈடுபடுவது எனக்குப் பிடிக்காதது. கல்யாணம், மற்ற விசேஷங்களில் அன்பளிப்பு என்ற பெயரில் எதையாவது கொடுத்தேயாக வேண்டும் என்று கட்டாயம் எதுவும் தேவையில்லை என்பது என் கருத்து. பிரியமானவர்களுக்கோ அல்லது தேவை இருப்பவர்களுக்கோ மட்டும் கொடுத்தால் போதும் என்று நினைக்கிறேன். இதில் நிர்ப்பந்தமோ வீண் ஜம்பமோ இருக்கக் கூடாது.

பெரிய அன்பளிப்பு அல்லது பரிசுப்பொருள் பாக்கெட்டை சுமந்து கொண்டு போனால்தான் மதிப்பார்கள், நம்மை மரியாதையோடு வரவேற்பார்கள் என்ற போலி கௌரவம் தேவையே இல்லை.

இதைப் பற்றியும், நண்பர் நாராயணனின் உணவுப் பழக்கம் பற்றியும் பேசும்போது தந்தையின் குணம் மறுபடி நினைவுக்கு வருகிறது.

என் தந்தை இலையில் சாப்பிட்டு முடித்ததும் பார்த்தால், கருவேப்பிலைகூட ஒதுக்கி வைக்கப்படாமல் அத்தனை சுத்தமாகச் சாப்பிட்டிருப்பார். சாப்பிட்ட இலையா, சாப்பிடாத இலையா என்றுகூட நமக்கு சந்தேகம் வந்துவிடும்! அந்த அளவுக்குக கிளீனாகச் சாப்பிட்டிருப்பார்!

எந்த பொருளையும் வீணாக்கக்கூடாது என்பதில் அவர் மிகுந்த கவனத்தோடு இருப்பார். இலையில் மிச்சம் வைத்தால் அவருக்குக் கோபமே வந்துவிடும்! அதனால் கேட்காமல் வற்புறுத்திப் போடுவதையும் விரும்ப மாட்டார். ''கொஞ்சமாக வை, வேண்டுமானால் கேட்கிறேன்'' என்பார்.

சொன்னதைப்போலவே, எந்தப் பலகாரமோ, பொறியலோ ருசியாக இருந்தால் மூன்று தரம்கூட கேட்டு வாங்கிச் சாப்பிடுவார். அதை கௌரவக் குறைச்சலாக நினைக்க மாட்டார். ருசியாக இருப்பதைப் பற்றி சமையல்காரரைக் கூப்பிட்டுப் பாராட்டவும் தயங்க மாட்டார்.

வீடுகளில் மட்டுமல்லாமல், கல்யாணங்களில் சாப்பிடும்போதுகூட இதே மாதிரி மிச்சம் வைக்காமல் சாப்பிட்டு, இவர் சாப்பிட்டதைப் பார்த்து அவர்கள் வற்புறுத்தி மேலும் இலையில் போட்டால், அதையும் சிரமப்பட்டு சாப்பிடுவார். அதனால் வயிற்றுத் தொந்தரவு ஏற்பட்டதும் உண்டு!

எங்கள் குடும்ப டாக்டர் கணேசன் அவர்கள், ''இலையில் உணவுப் பொருள் வீணானால் பரவாயில்லை. அதற்காக நீங்கள் வயிற்றைக் கெடுத்துக் கொள்ளாதீர்கள். முடிந்தவரை இலையில் குறைவாக வைக்கச் சொல்லுங்கள். வற்புறுத்தி வைத்துவிட்டார்கள் என்றால் அது வயிறை வீணாக்குவதைவிட இலையில் வீணாவது மேல். அதனால், வீணாவதைப் பற்றிக் கவலைப்படாதீர்கள்'' என்றதும்தான் தந்தை தன் பழக்கத்தைச் சற்று மாற்றிக் கொண்டார்.

அப்பச்சிக்கு எதிரில் சாப்பிட்டுப் பழகியதால் நாங்களும் எதையும் வீணாக்குவதில்லை. கூடியவரை எங்களுக்கு என்னென்ன தேவையோ அதை நாங்களே அளவாக எடுத்துப் போட்டுக் கொண்டு சாப்பிடப் பழகி விட்டோம்.

பொருளை வீண் செய்வதுதான் தவறு என்பாரே தவிர தந்தையாருக்கு வசதிகளை அனுபவிப்பதில் எந்தத் தடையும் இல்லை. வெளியூர் செல்லும்போதும், நல்ல வசதியான பெரிய ஹோட்டல்களில் தங்க விரும்புவார். நல்ல சாப்பாடு, சௌகர்யம் இவற்றுக்கு எத்தனை வேண்டுமானாலும் செலவு செய்வதில் தவறே இல்லை, ஆனால் எந்தப் பொருளும் பயன்படாமல் வீணாகிவிடக்கூடாது என்பதில்தான் அவருக்கு அதிக அக்கறை.



ம.பொ.சி.யுடன் ஏவி.எம்.

எது அவசியமான செலவு, எது வீண் செலவு என்பதைப் பிரித்துப் பார்ப்பது அவரவர் பொறுப்புதான். கவர்ச்சிக்கும் ஆபாசத்துக்கும் உள்ள மெல்லிய வித்தியாசத்தைப் போலத்தான் இவ்விரண்டு விஷயங்களையும் மிக மெல்லிய ஒரு கோடுதான் பிரிக்கிறது!

வீண் ஜம்பத்துக்காக செலவு செய்வதைத்தான் தந்தை எப்போதும் அனாவசியம் என்று குறிப்பிடுவார். இது ஒரு உடைத்தெறிய வேண்டிய விலங்கு என்பதில் அவரோடு எனக்கு முழு உடன்பாடு உண்டு.

கல்யாணம் போன்ற வைபவங்களுக்கு அழைப்புக்கள் வரும்போது அவற்றை கௌரவப் படுத்தாமல் அலட்சியமாக விட்டு விடுவதும்கூட ஒரு தேவையில்லாத விலங்குதான்.

இந்த முறையில்தான் வந்து அழைக்க வேண்டும், இப்படிக் கூப்பிட்டால்தான் எனக்கு கௌரவமாக இருக்கும், அப்போதுதான் வருவேன் என்று நாமே ஒரு எதிர்பார்ப்பையும் முறையையும் ஏற்படுத்தி வளர்த்து விடுகிறோம். நம்மை அழைக்க வருபவர்களும் இதே எண்ணங்களைக் கொண்டவர்களாக இருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லையே!

எதிர்பார்த்தபடி அழைக்காமல் போனால், ''எதற்காக அங்கு போக வேண்டும்?'' என்று மனது முரண்டு பண்ணத் துவங்கி விடுகிறது. போகாமலேயே இருந்து உறவைக் கெடுத்துக் கொள்கிறோம்.

எது நம் கௌரவத்தைக் காப்பாற்றும்? போவதா, போகாமல் இருப்பதா? எது உண்மை கௌரவத்துக்கு அழகு?

**நிச்சயம், நாம் அங்கு சென்று விசேஷத்தில் கலந்து கொள்ளும்போதுதான் நம் கௌரவம் உயர்ந்து நிற்கிறது என்று நான் நினைக்கிறேன். நாம் செல்லாமல் இருந்துவிட்டால் நண்பர்களுக்குள் அல்லது உறவினர்களுக்குள் பகைமைதான் உருவாகும். இயன்றவரை எந்த ஒரு அழைப்பையும் புறக்கணிக்காமல், கடமையாக எண்ணியாவது நேரில் சென்று வந்து விட்டால் மனத்தாங்கல்களைத் தவிர்க்க முடிவதோடு நம் கௌரவம் உயரவும் வழியுண்டு.**

என்னைப் பொருத்தவரை எவர் வந்து அழைத்தாலும், அது நண்பரோ, உறவினரோ, என்னுடன் பணியாற்றுபவரோ - எவரானாலும் அவர்கள் அழைப்புக்கு இணங்க அங்கே சென்று விடுவேன். புதுப்பட பூஜை, திருமணம், பிறந்த நாள் விழா என்று எந்த நல்ல விஷயத்திலும் கலந்து கொள்வதில் எனக்கு மகிழ்ச்சிதான்.

சில சமயங்களில், கல்யாண சீஸன்களின்போது நேரில் சென்று வாழ்த்த முடியாத அளவுக்கு அழைப்புக்களின் எண்ணிக்கை அதிகமாக இருந்துவிடும்! இது போன்ற சந்தர்ப்பங்களில், எவர் வீட்டில் நம் வரவால் அதிக மகிழ்ச்சி அடைவார்களோ அங்கு போவதைத்தான் விரும்புவேன்.

சமீபத்தில்கூட ஒரு பெரிய மனிதர் வீட்டுத் திருமணம் நடந்த நாளில், அதே நேரத்தில், எங்கள் ஸ்டூடியோ தொழிலாளி ஒருவரின் இல்லத் திருமணமும் நடைபெற்றது. மற்ற நிகழ்ச்சிகளை முடித்துக் கொண்டு இவற்றுள் ஏதாவது ஒரு இல்லத்துக்குதான் செல்ல முடியும் என்கிற நிலை.

பெரிய மனிதர் வீட்டில் நம்மைப்போல் பலர் வந்திருப்பார்கள். நாம் போவதனாலோ, போகாமல் இருப்பதனாலோ பெரிய லாபமோ நஷ்டமோ இல்லை. ஆனால், அந்தத் தொழிலாளி வீட்டில் என்னை எதிர்பார்த்துக் காத்திருப்பார்கள். அவர்களை நம் வரவால் சந்தோஷப்படுத்தினால் நமக்கும் ஒரு மன நிறைவு ஏற்படும் என்பதனால் அந்த வீட்டுக்குத்தான் சென்றேன்!

கௌரவக் குறைச்சலாகக் கருதப்படும் பல விஷயங்களை கவனமாகப் பரிசீலித்துப் பார்த்தால் அவை களையப்பட வேண்டியவையே என்பது புரியும். களைந்தால் கௌரவம் உயரும் என்பதும் புரியும்!



# 31. வளர்ச்சியும் முதிர்ச்சியும்



கங்கை அமரன், ராதா, ரஜினிகாந்த், எம்.ஜி.ஆர்., S.P.முத்துராமன், பாரதிராஜா, பஞ்சு அருணாசலம், பழநியப்பன் ராமசாமியுடன்

வருடங்கள் கடந்து வயதாகும்போது நம் உடலில் ஏற்படும் மாற்றங்கள் பல. தோற்றத்தில் பெரியவர்களாக ஆகி, உருவத்தில் ஒரு முதிர்ச்சி தென்படத் துவங்குகிறது.

இது வெறும் வெளிப்புறத் தோற்றம்தானே தவிர, நம் உள்ளத்து முதிர்ச்சியை இது பெரும்பாலும் பிரதிபலிப்பதில்லை.

பெரியவர்களாகி விட்டாலே பக்குவமடைந்து விட்டோம் என்று பொருள் கொள்ள முடியாது. பக்குவமும் முதிர்ச்சியும் வயதின் காரணமாக மட்டும் வருவதில்லை.

நல்ல மனிதனாகத் திகழத் தேவையான அத்தனை குணங்களும்தான் ஒருவனை தகுந்த விதத்தில் பக்குவப்படுத்துகின்றன. முதிர்ச்சியடைய வைக்கின்றன. கல்வி, அறிவு, புத்திசாலித்தனம் போன்றவை வாழ்க்கைப் பாதையை அமைத்துக் கொண்டு முன்னேற உதவும் அதே நேரத்தில், அன்பு, பண்பு, அக்கறை, மனிதாபிமானம் என்கிற குணங்களே முதிர்ச்சிக்கு வழி வகுக்கின்றன.

உடல் வளர்ச்சி ஒரு பக்கம் இருக்கட்டும். வாழ்வில் போராடி வெற்றி பெறுகிறோமே,அந்த வெற்றியும் வளர்ச்சிக்கு அடையாளம்தான்.

நடிகனாக வேண்டும் என்று கனவு கண்டு, அதற்கான முயற்சிகளைச் செய்து, ஓயாமல் உழைத்து, உழைப்புக்கேற்ற பலனாக நட்சத்திர அந்தஸ்து கிடைக்கும்போது அவரை, 'வளர்ந்த நடிகர்' 'சாதனையாளர்' என்கிறோம். இதேபோல்தான் இயக்குனர்,

கவியரசு கண்ணதாசன்

இசையமைப்பாளர், எழுத்தாளர், ஓவியர், தொழிலதிபர், அரசியல்வாதி என்று எந்தத் துறையிலும் வளர்ச்சி பெற்று பிரகாசிப்பவர்கள் எராளம்.

திறமை அங்கீகரிக்கப்பட்டு நல்லதொரு ஸ்தானத்தைப் பெற்றதும் முதலில் மனதில் ஏற்பட வேண்டியது ஒரு நிறைவு. மனம் நிறைவடையும் போதுதான் சிந்தனையும் செயலும் ஆக்கபூர்வமாக அமைகின்றன. இந்த நிறைவு இல்லாவிட்டால், உயர்ந்த நிலையை எட்டியும்கூட மனதில் தேவையில்லாத உணர்வுகள் தோன்றி அலைக்கழிக்கின்றன.

பொறாமை, பழிவாங்குதல் என்று கீழ்த்தரமான குணங்களின் ஆதிக்கத்தில் மனதை விட்டு விட்டால், பிறகு கட்டுப்படுத்துவது மிகக் கடினமாக எனக்குத் தோன்றுகிறது. முக்கியமாக, பழி வாங்குதல் என்கிற எண்ணத்தை வளர விட்டால் அது இறுதியில் நம்மைப் பெரும் பாதிப்புக்கு உள்ளாக்கி, இதுவரை சாதித்த வளர்ச்சியை ஒன்றுமேயில்லாமல் செய்து விடும்.

சில காலம் முன்பு ஒரு வினோத வழக்கு நீதிமன்றத்தில் நடைபெற்றது. வழக்கறிஞராக இருந்த ஒருவர் படிப்படியாக வளர்ந்து 'மாஜிஸ்ட்ரேட்'' ஆக உயர்ந்தார். அப்போது அவர் முன் வைக்கப்பட்ட வழக்கு ஒன்றில் ஆஜரான ஒரு வழக்கறிஞரை இந்த மாஜிஸ்ட்ரேட்டுக்குப் பிடிக்கவில்லை! இருவருமே வக்கீல்களாக இருந்தபோது தங்களுக்குள் ஏற்பட்ட ஏதோ ஒரு மனக்கசப்பை இன்னமும் நினைவில் கொண்டு, அவரைப் பழி வாங்கும் எண்ணத்துடன் நடந்து கொண்டார்., தேவையில்லாத பிரச்னைகளை

ஏற்படுத்தி, அந்த வழக்கறிஞரை தர்மசங்கடத்தில் ஆழ்த்தினார். நியாயமாக நடைபெற்றிருக்க வேண்டிய வழக்கு, மாஜிஸ்ட்ரேட்டின் தனிப்பட்ட விருப்பு வெறுப்புகளினால் திசைமாறிப் போயிற்று. அவர் அளித்த தீர்ப்பை ஏற்க முடியாத வழக்கறிஞர், அந்தத் தீர்ப்பே செல்லாது என்று நிரூபிக்கப் பல வழிகளைத் தேட வேண்டியதாகி விட்டது.

இந்த சமயத்தில், மாஜிஸ்ட்ரேட்டின் இளைய சகோதரரின் அறுபதாவது வயதுக் கொண்டாட்டங்களைப் பற்றி அறிந்தபோது ஒரு விஷயம் புரிந்தது. மாஜிஸ்ட்ரேட் தன் வயதைக் குறைத்துக் குறிப்பிட்டிருக்கிறார் என்பதுதான் அது! இந்த ஒரு விஷயத்தை பலமாகப் பிடித்துக் கொண்டு, அவர் முன்பே ஓய்வு பெற்றிருக்க வேண்டியவர், வயதைத் தவறாகக் குறித்துக் கொடுத்து அவர் பணியாற்றிய அந்த சில வருஷங்களில் கையாளப்பட்ட வழக்குளின் தீர்ப்புக்கள் செல்லாது என்று ஒரு வழக்கு தொடுத்து வெற்றி பெற்றார் அந்த வழக்கறிஞர்!

தன் பதவிக்கேற்ற மூதிர்ச்சி இருந்தும், தனிப்பட்ட விரோதம் காரணமாக சரியான நீதி வழங்காததால்தான் அந்த நீதிபதிக்கு இப்படி ஒரு அவமானம் நேர்ந்தது.

வாழ்க்கையில் எந்தெந்த சந்தர்ப்பங்களிலோ எவர் எவரோ நம்மை வசைபாடியிருக்கலாம், வெறுத்திருக்கலாம், வளர விடாமல் அமுக்கியிருக்கலாம், இன்னும் என்னென்னவோ கெடுதல்களைச் செய்திருக்கலாம்.

இவை அத்தனைக்கும் ஆத்திரம் கொண்டு அத்தனை பேர்களையும் பழிவாங்க வேண்டும் என்று புறப்படுவது

ரஜினிகாந்த், L.V.பிரசாத், ஸ்ரீ தேவி, மனோரமா.



விவேகமில்லை. இந்தப் பழி வாங்கல் நடைமுறையில் தேவையில்லாத ஒன்று. அதிலும், வளர்ந்து உச்சநிலையை எட்டியபின், ஏதோ ஒரு நபரைப் பழி வாங்குவதால் என்ன லாபம் ஏற்பட்டு விடப் போகிறது!

'ஆகா, நல்ல பதிலடி கொடுத்து விட்டேன், திண்டாடட்டும்!' என்று ஒரு கணம் மட்டுமே திருப்தியோ பெருமையோ தோன்றலாம். அது நிரந்தரம் அல்ல, முன்பு நான் குறிப்பிட்டபடி வாழ்க்கைப் பயணத்தை அசைபோட்டுப் பார்த்தால், இப்படிப்பட்ட பழிவாங்கல் களால் மனதுக்குள் உறுத்தல்களும் குற்ற உணர்வுமே மிஞ்சும்!

சினிமாத்தொழிலிலும், ஒரு கலைஞன் தன் ஆரம்ப காலத்தில் சந்திக்கும் அவமானங்களும், அலட்சியங்களும், போராட்டங்களும் ஏராளம். ஆனால் அதே கலைஞன் வளர்ந்து பிரபலமாகி விட்டால், அவனைத் துவக்கத்தில் ஒதுக்கிய மனிதர்களே தேடி வந்து பலாப்பழத்தில் ஈ மொய்ப்பது போல் பின் தொடர்வதும் பொதுவான நியதி. எந்தத் தொழிலிலும் இவை சகஜம்தான்.

அதற்காக, பழிவாங்குதலில் ஈடுபட ஆரம்பித்தால், முடிவே இருக்காது. ஒரு நிலையை எட்டியதும் கவனம் சிதறிப்போனால், அதற்கு மேல் தொடர்ந்து வளர்ச்சி காண்பது கடினம்.

நேர் மாறாக, எவராக இருப்பினும் மன்னித்து நம் கடமையைச் செய்வதுதான் பெருந்தன்மையான செயல்.

'இவரிடம் இருந்த திறமையை அன்றே அறியாமல் அலட்சியப் படுத்தி விட்டேனே! ஆனால் இவருக்குத்தான் எத்தனை பெருந்தன்மை! என் தவறைப் பெரிது படுத்தாமல் இப்போது உதவ முன் வந்திருக்கிறாரே!' என்று மற்றவர்களை நினைக்க வைப்பது நம் கையில்தான் இருக்கிறது.

தொண்டனாக இருந்த காலத்தில் நிகழ்ந்த போட்டித் தகராறை இப்போதும் மறக்காமல் நினைவில் வைத்து, கட்சித் தலைவனாக ஆனபிறகு வன்மத்தைக் காட்டுவது எந்த விதத்திலும் நியாயமில்லை.

வேண்டாத இந்த குணத்தை வளர விடுகிறார்களே என்று நான் பலரைப் பார்த்து ஆதங்கப்படுவது உண்டு. பணம், பெயர், புகழ், பக்தி, அந்தஸ்து, கௌரவம் என்று எந்த சாதனையுமே இவர்களுக்கு முதிர்ச்சியைத் தரவில்லையே என்று வேதனைப்படுவதும் உண்டு.

முதிர்ச்சியடையாத மனிதர்கள் பிறரை மனம் புண்படும்படி பேசுவதையும், சொல்லத்தகாத வார்த்தைகளைச் சொல்லித் திட்டுவதையும், மனக்கட்டுப்பாடு இல்லாமல் செயல்படுவதையும் நாம் பல சந்தர்ப்பங்களில் பார்த்துக் கொண்டுதான் வருகிறோம்.

கோபமும் ஆத்திரமும் அதிகமாகி தங்களைத் தாங்களே கட்டுப்படுத்திக் கொள்ள முடியாதவர்களாகவே இவர்கள் இருக்கிறார்கள். 'நாக்கில் நரம்பின்றிப் பேசுகிறார்கள்' என்று சொல்வது இப்படிப்பட்டவர்களுக்கு மிகப் பொருத்தம்.

தாங்கள் இப்படிப் பேசுவதைப் பற்றிய உணர்வு, பிறர் சுட்டிக் காட்டுவதாலோ அல்லது திருந்த வேண்டும் என்ற உந்துதலாலோ ஒருசிலருக்கு ஏற்படுவதுண்டு. இனிமேல் இப்படிப் பேசக்கூடாது என்று தீர்மானித்துக் கொண்ட பிறகும்கூட, யாரையாவது திட்ட வேண்டும் என்ற நினைப்பு மனதுக்குள் உருவான உடனேயே வாயிலிருந்து வார்த்தைகள் அவரசமாக வெளிவந்துவிடும். ஆனால், தங்கள் தவறை ஒரே கணத்தில் புரிந்துகொண்டு, ''நாசமாப் .....'' என்று துவங்கியதை, ''நாசமாப் போனேன் நான்!'' என்று முடித்து சமாளித்து விடுவார்கள்! இப்படி சமாளிப்பதை நான் நியாயப்படுத்தவில்லை என்றாலும், கட்டுப்பாடின்றி அடுத்தவரைத் திட்டித் தீர்ப்பவரைவிட இந்த மாதிரி பாதியிலாவது தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்பவர் நிச்சயம் மேலானவர் என்றே கூறுவேன். இந்த வார்த்தைகள் அளவோடு வெளிவருவதை நானே எனது அனுபவத்தில் கண்டிருக்கிறேன்.

மனிதப்பிறவியே கடவுள் கொடுத்த வரம்தான். அதில் வாழப் போவது எத்தனை காலம் என்பதை எந்த மனிதனாலும் முன்கூட்டி அறிய முடியவதில்லை. இரவில் படுத்தால், காலையில் எழுந்து கொள்வோமா என்பதே நிச்சயமில்லாத நிலை. இந்தக் குறுகிய சந்தர்ப்பத்தில், பொறாமை, பழிவாங்குதல், கோபம் என்று எண்ணத்தை சிதறடித்தால், பிறகு எதை சாதிப்பது? ஒருவேளை சாதித்தாலும், அதை நிலைக்க வைப்பது எப்படி!

என்னைப் பொருத்தவரை எவரிடமும் வன்மமோ, பழைய பகையோ பாராட்டுவதில்லை. சந்தேகங்களையும் வேறுபாடுகளையும் சம்பந்தப்பட்ட மனிதரிடமே பேசித் தீர்க்க முயற்சிக்கிறேன். தீர்க்க முடியாதபோது அவற்றை அப்படியே ஏற்கப் பழகுகிறேன். இதுவும் இயலாதபோது, அவர்களை விட்டு ஒதுங்கியிருப்பதுதான் நிம்மதியைத் தருகிறது! எந்தக் காலத்திலும் எவரையும் அழிக்கவோ, நசுக்கவோ கூடாது என்கிற தீவிர எண்ணத்தை என் மனதுக்குள் வளர்த்துக் கொண்டு, அதன்படி முயன்று கொண்டிருக்கிறேன்.

# 32. முயற்சி திருவினையாக்கும்




நான் ஸ்டூடியோ பொறுப்பேற்ற ஆண்டில்

'Efforts Never Fail' என்ற வாசகம் கொண்ட மர டேபிள் வெயிட் ஒன்றை 1965-ம் வருடம் பெங்களூரில் வாங்கினேன்.

ஏனோ எனக்கு அந்த வாசகம் ரொம்பப் பிடித்துப் போய்விட்டது. அப்போதிலிருந்து நான் உபயோகிக்கும் லெட்டர் பேட்கள், வாழ்த்து அட்டைகள் முதலிய எல்லாவற்றிலுமே இந்த வாசகத்தை அச்சடித்து வைத்துக் கொண்டேன்.

தமிழில் இதுவே 'முயற்சி திருவினையாக்கும்' என்று ஆகியது.

எப்போது, எத்தனை முறை இந்த வரியைப் பார்த்தாலும் அது எனக்கு மிகுந்த தெம்பைக் கொடுத்திருக்கிறது. இப்போதும் கொடுத்து வருகிறது. பலமுறை மனச்சோர்விலிருந்து என்னை மீண்டு வரச் செய்திருக்கிறது.

முன்பு சற்று சோர்வாக நான் இருந்த நேரம். 'நாங்கள்' என்று எங்கள் நிறுவனத்தையும் சேர்த்துத்தான் சொல்ல வேண்டும். நிறுவனத்தை வேறு ஒருவரிடம் குத்தகைக்கு விட தந்தையாரும் மற்றவர்களும் தீர்மானித்து விட்டார்கள். எனக்கு அதில் விருப்பமேயில்லை. என் விருப்பத்தை நான் பலமுறை வெளியிட்டும் எடுபடவில்லை. திட்டமிட்டபடி குத்தகைக்கு விட ஏற்பாடாகி, ஒப்பந்தம் கையெழுத்தாகும் சமயம் சனிப்பெயர்ச்சிக்கு திருநள்ளாருக்குப் போய்விட்டு வந்து நல்ல நேரத்தில் கையெழுத்துப் போடுவதாகக் குத்தகை எடுக்கவிருந்தவர் சொல்லி விட்டுப் போனார்.

நான் கடைசி முறையாக மறுபடியும் என் எண்ணத்தைத் தந்தையிடம் சொல்லத் தீர்மானித்தேன். ஒரு ஆறு மாதம் என் பொறுப்பில் ஸ்டூடியோவை விடுங்கள், நான் முயற்சி செய்து பார்க்கிறேன். தயவு செய்து ஒரே ஒரு சந்தர்ப்பம் கொடுங்கள்'' என்று வலியுறுத்தினேன்.

என் வேண்டுகோளுக்குப் பலன் இருந்தது. சரி என்று தந்தையும் சம்மதம் தெரிவித்தார். அன்று அந்த சந்தர்ப்பத்தை இறுகப் பற்றி முயற்சி செய்தபோது தகுந்த பலனும் கிடைத்தது. ஸ்டூடியோ என் மேற்பார்வையில் வந்தது. சனிப்பெயர்ச்சி எனக்கு நல்லதைச் செய்தது போலும்!

முழு மூச்சுடன் முயற்சியில் இறங்கினேன். பலரையும் சென்று பார்த்தேன். என்னிடம் ஓரளவுக்குப் பிரியமும் அபிமானமும் கொண்டிருந்தவர்களை அணுகி, ''தயவு செய்து எனக்கு ஒத்துழைப்பு தாருங்கள், நான் இதை ஒரு சவாலாக நினைத்து எடுத்திருக்கிறேன்'' என்றேன்.

அமரர் எம்.எம்.ஏ.சின்னப்பா தேவர் அவர்கள், ''சரி, இனி என் படங்களின் படப்பிடிப்பு உங்கள் ஸ்டூடியோவில்தான் நடக்கும். நீங்களாக எங்களை வெளியேற்றும் வரை நாங்கள் வேறு ஸ்டூடியோவைத் தேடிப் போக மாட்டோம்'' என்று உறுதியளிக்க, மற்ற தயாரிப்பாளர்களும் உதவினார்கள்.

நான் சொன்ன கெடுவான ஆறு மாத காலத்துக்குள் அதுவரை கண்டிராத அளவில் வியாபாரம் பெருகி சாதனை படைத்ததை என் முயற்சிக்குக் கிடைத்த வெற்றியாகவே இன்றும் நினைக்கிறேன். ஒரு குறிப்பிட்ட மாதத்தில் மட்டும் 168-½ கால்ஷீட்கள் நடந்திருக்கின்றன! அதற்கு முன்போ பின்போ அதுபோல் நிகழவேயில்லை.

மகன் தண்டாயுதபாணியுடன் சாண்டோ M.M.A.சின்னப்பா தேவர்.





அல்லி அர்ஜுனா (1935) ரத்னாவளி (1936), நந்தகுமார் (1937) படங்களில் வரும் காட்சிகள்.

எந்த நிலையிலும் முயற்சியைக் கைவிட்டு விடாமல் இருக்க நான் கற்றதும் என் தந்தையிடமிருந்துதான். அவர் தங்கத் தாம்பாளத்தில் பிறந்தவரோ ரோஜாப் படுக்கையில் வளர்ந்தவரோ அல்ல என்று முன்பே சொல்லியிருக்கிறேன். அவர் செய்த சாதனைகளுக்கெல்லாம் அடிப்படை ஓயாத உழைப்பும், தளராத முயற்சியும்தான்.

இல்லையானால், அடுத்தடுத்த தோல்விகளால்கூட மனம் துவண்டு விடாமல் முயற்சி செய்து வெற்றி கண்டிருக்க முடியுமா?

அவர் எடுத்த முதல் படமான 'அல்லி அர்ஜுனா' வைத் தயாரிப்பு வேலை முடிந்ததும் போட்டுப் பார்த்தபோது, ஹீரோ வெளிச்சத்தின் கூச்சத்தால் கண்களை முக்கால் பாகம் மூடிக்கொண்டே நடித்திருப்பது தெரிய வந்தது! தூரத்தில் இருந்து பார்த்ததால் இதைக் கவனிக்காமல் விட்டு விட்டார்கள் என்றும், எடுத்த படத்தை உடனுக்குடன் போட்டுப் பார்த்து சரி செய்து கொள்ளும் வசதியில்லாததால் இந்தக் குறையைப் படம் எடுத்த பிறகுதான் உணர்ந்தார்கள் என்றும் தந்தை சொல்லியிருக்கிறார். ரூபாய் எண்பதினாயிரம் முதல் படத்திலேயே நஷ்டம். 1934-ம் வருடத்தில் எண்பதினாயிரம் ரூபாய் என்றால், அதன் மதிப்பைப் பற்றி ஊகித்து கொள்ளலாம்!

இரண்டவதாக அவர் எடுத்தது 'ரத்னாவளி' படம். ஒன்றரை லட்ச ரூபாய் செலவில் படம் தயாரானது. படத்தின் காமிராமேன் தந்தைக்கு நண்பர். புது காமிரா வாங்கியிருப்பதாக அவர் சொன்னது தந்தைக்கு உற்சாகத்தை அளித்திருக்கிறது. படப்பிடிப்பு முடிந்து படத்தைப் போட்டுப் பார்த்தபோது, ஒலியும் ஒளியும் ஒன்றுக்கொன்று தொடர்பில்லாமல் இருப்பது புரிந்தது! புது காமிரா சரியாக அட்ஜஸ்ட் செய்யப்படாததால் வந்த வினை! என்னென்னவோ ரிப்பேர் வேலைகள் செய்தும் படம் ஓடவில்லை.

எடுத்த எடுப்பில் இவ்வளவு நஷ்டம் வந்தும்கூட அப்பச்சி சோர்வடைந்தார் என்கிறீர்களா? அதுதான் இல்லை.

அடுத்த முயற்சி ஆரம்பமாயிற்று. 'நந்தகுமார்' என்ற படம். டி.ஆர்.மகாலிங்கம் அவர்கள் கிருஷ்ணனாக நடித்தது. இந்தியிலும் மராத்தியிலும் இப்படத்தைத் தயாரித்தவர்களுடன் கூட்டுறவில் தமிழில் துவங்கினார் தந்தையார். அந்த மொழிகளில் இப்படம் படுதோல்வி அடைந்ததை அறிந்து, கூட்டுறவிலிருந்து விலகி, தமிழ் உரிமையைப் பெற்று வேறு மாதிரி மாற்றி எடுத்தும் படம் ஓடவில்லை. கதாநாயகிக்கு பாடுவதற்கு முதல் முதலாக சொந்தக்குரல் இல்லாமல் இரவல் குரல் பயன்படுத்தியதை மக்கள் வரவேற்றது என்னவோ உண்மை. படம் நன்றாக இருப்பதாகப் பேசிக் கொள்ளவும் செய்தார்கள். ஆனால் 'வெற்றி' என்று சொல்லிவிட முடியாது.

இப்படி தொடர்ந்து குறுகிய காலத்தில் மூன்று படங்கள் எடுத்து நஷ்டம் அடைந்ததும் தந்தை இந்தத் துறையைவிட்டே விலகிவிடுவார் என்றுதான் பலரும் நினைத்தார்கள். ஆனால், அவரோ விலகுவதைப் பற்றி யோசிக்காமல் தோல்விக்குக் காரணம் என்ன என்று ஆராய்ந்தார்.

நமக்கென்று ஒரு ஸ்டூடியோ இல்லாததால்தான் நடிகர்களையும் மற்றவர்களையும் அழைத்துக் கொண்டு கல்கத்தா, பம்பாய் என்று அலைய வேண்டியிருக்கிறது. சொந்தமாக ஸ்டூடியோ இருந்தால் பல குறைகளைத் தவிர்க்கலாம் எவ்று தோன்றியதும், உடனே ஒரு வேகத்துடன் செயல்பட்டார்.

மேலும் பல தடங்கல்களுக்குப் பிறகு எங்கள் ஸ்டூடியோ உருவாயிற்று. 'டுமாரோ ஈஸ் நோ குட்' அதாவது நாளை என்று ஒத்திப்போடுவது நல்லதல்ல என்கிற எண்ணத்தில் அவர் உடனே காரியத்தில் இறங்கி முயற்சியைத் தொடர்ந்ததுதான் 'ஏவி.எம்.' என்கிற நிறுவனத்தின் தொடக்கத்துக்கும், பெருகிய வளர்ச்சிக்கும் மிக முக்கிய அஸ்திவாரம்.

ஏவி.எம். முன்னிலையில் S.S வாசன் பரிசு வழங்க, மாருதி ராவ் பெறுகிறார்.





நாகி ரெட்டியாருடன்

என் தந்தைக்கு மட்டுமல்ல, இன்னும் பலரது வாழ்க்கையிலும் முயற்சிக்குத் தகுந்த பலன் கிடைத்திருப்பதை நாம் அனைவருமே அறிவோம்.

திரையுலக மேதை திரு.எஸ்.எஸ்.வாசன் அவர்களின் சாதனைகளைப் பற்றி வியக்காதவர் யார்! வாழ்வின் ஒவ்வொரு கட்டத்திலும் எதிர்நீச்சல் போட்டு, புதுப்புது முயற்சிகளைக் கையாண்டு பெரும் வெற்றி கண்டவர். 'ஜெமினி' என்ற ஸ்தாபனம் இந்தியா முழுவதும் பெரும் பெயர் பெற்றது இவரது முயற்சிக்குக் கிடைத்த பலனில்லாமல் வேறு என்ன!

நான் அடிக்கடி குறிப்பிடும் இன்னொரு திரைப்பட மேதையான திரு. நாகிரெட்டியார் அவர்கள், வெங்காய வியாபாரியாக வாழ்க்கையைத் துவங்கியவர். இன்று - ஆசியாவிலேயே பெரிய ஸ்டூடியோவாகக் கருதப்படும் விஜயா - வாகினி, விஜயா மருத்துவமனை, திருமணக்கூடங்கள், பத்திரிகைகள் - இவையனைத்தும் அவரது உழைப்புக்கும் முயற்சிக்கும் அத்தாட்சியாக நிற்பவை!

திரு.எல்.வி.பிரசாத் அவர்கள், ஸ்டுடியோ ஒன்றில் சாதாரண உதவியாளராகச் சேர்ந்து, பின் டைரக்டர் - தயாரிப்பாளர் - கலர் லேப் உரிமையாளர் என்று எத்தனையெத்தனை வளர்ச்சிகள் அவர் முயற்சிக்கு சாட்சிகள்!

கரித்தூள் வியாபாரியாக ஆரம்பித்து, அதிசய விஞ்ஞானி என்று பின்னாளில் பெயர் பெற்றவர் திரு.ஜி.டி.நாயுடு அவர்கள்.

தமிழ் சினிமா உலகில் முதல் சினிமாஸ்கோப் படத்தைத் தயாரித்தவரும், சென்னையில் சாந்தி, ஆனந்த் ஆகிய A/c திரையரங்குகளை கட்டி அதுபோல் பல திரையரங்குகள் உருவாக முன்னோடியாக இருந்தவரும் பத்திரிக்கை ஆசிரியருமான திரு. ஜி.உமாபதி, ஆரம்ப காலத்தில் ஒரு அச்சகத்தில் பைண்டராக தனது வாழ்க்கையை ஆரம்பித்தவர். தனது சொந்த முயற்சியால் **விஸ்வரூபம்** எடுத்த மனிதர்.

FRCS படிப்பது மிகவும் பெரிய விஷயம், FRCS -க்கே Examiner ஆக இருக்கும் டாக்டர் ரங்கபாஷ்யம் உலக அளவிலே தன்னை வளர்த்துக் கொண்ட மாபெரும் மனிதர்.

வெளிநாட்டில் டாக்டருக்குப் படித்துவிட்டு வந்து, ஆரம்ப காலத்தில் இவரது மாமனார் திரு. V.G.சரவணனின் மாப்பிள்ளை ரங்கபாஷ்யம் என்று சொல்லி வாழ்க்கையை ஆரம்பித்து, இன்று ரங்கபாஷ்யத்தின் மாமனார் V.G.சரவணன் என்று சொல்லும் அளவுக்கு வளர்ந்து பிரபலமானவர்.

டாக்டர் பத்ரிநாத் அமெரிக்காவில் தொடர்ந்து பணி செய்து வந்திருந்தால் பல கோடி ரூபாய் சம்பாதித்து இருக்க முடியும். இந்தியாவில் தனித்து வைத்தியத் தொழில் செய்தால் பல லட்சங்கள் சம்பாதிக்க முடியும். பரமாச்சாரியாரின் (காஞ்சிப் பெரியவர்) ஆணைப்படி இந்தியாவிலேயே தங்கி, ஆசியக் கண்டத்திலிலேயே ஒரு சிறந்த கண் மருத்துவமனையை நிறுவி சில ஆயிர ரூபாய் சம்பளத்துக்கு வேலை செய்து வருகிறார். தனது சொந்த முயற்சியினாலும், நிர்வாகத் திறமையினாலும் பல கோடி ரூபாய் நன்கொடைகள் வருவதை தனக்கு உபயோகப் படுத்திக் கொள்ளாமல் மருத்துவமனை வளர்ச்சிக்கே செலவிட்டு வருபவர்.

உலகில் விரல்விட்டு எண்ணக் கூடிய கண் வைத்தியர்களில் ஒருவர் டாக்டர் பத்ரிநாத்.

நான் இதுவரை பழகியவர்களில் பழகுவதிலும் சரி, பண்பிலும் சரி, பொறுமையிலும் சரி, தன்னலமற்ற தன்மையிலும் இவரைப் போல் வேறு ஒரு மனிதரை இவருக்கு இணையாக கூற முடியாது.


உமாபதி


டாக்டர் ரங்கபாஷ்யம்


டாக்டர் பத்ரிநாத்

சைக்கிள் ரிப்பேர் கடையில் துவங்கிய வாழ்வை 'ஈஸன் என்ஜினியரிங் கம்பெனி' முதலாளியாக உயர்த்திக் கொண்டவர் திரு ஈஸ்வர ஐயர் அவர்கள்.

இன்று 'கோத்ரெஜ்' என்று சொன்னாலே தரம் என்று பொருள் வரும் அளவுக்கு ஒரு நிறுவனத்தை நிறுவிய திரு. கோத்ரெஜ் எப்படி வாழ்வைத் தொடங்கினாராம் தெரியுமா? சாதாரண இரும்புப் பெட்டி செய்து தெருவில் விற்று வந்த நாளில் எப்படியாவது ஒரு நூறு ரூபாய் கிடைத்தால் இந்த வியாபாரத்தை விரிவு படுத்தலாமே என்று தோன்றிற்றாம். அதே தினம், தெருவில் சென்று கொண்டிருந்த ஒரு வெளிநாட்டுக்காரரிடமிருந்து நூறு ரூபாய் நோட்டு ஒன்று பறந்து வந்து அருகே விழுந்ததாம். அதை அவரிடமே ஒப்படைக்கலாம் என்று தேடிப்போய் பார்த்தும் அவரைக் காணாததால், அந்த ரூபாயைக் கடவுள் கொடுத்ததாக நினைத்து தொழிலை பெருக்கினாராம் திரு. கோத்ரெஜ். ஸ்டீல் அலமாரிகள், அலுவலக ஃபர்னிச்சர்கள், சோப் வகைகள் என்று இன்று அவர் பெயர் சொல்லும் விஷயங்கள் ஏராளம்!

தென்னாட்டின் கோடியில் ஏதோ ஒரு சிறு கிராமத்தில் பிறந்த ராஜா என்கிற சாதாரண குடும்பத்து வாலிபர், 'இசைஞானி' இளையராஜாவாக உலகெங்கும் பிரபலமாக உருவெடுத்ததும் முயற்சியின் காரணமாகத்தான்! இன்று சிகரத்தை எட்டியபின்பும் தன் உழைப்பைக் கைவிட்டு விடாமல் காலை ஏழு மணிக்கே வேலைக்குத் தயாராக வந்துவிடும் இவரது உழைப்பை எப்படி வர்ணிப்பது! மற்றவர்களுக்கு நான்கு நாட்கள் பிடிக்கும் ஒரு இசைப்பதிவுக்கு இவர் எடுக்கும் நேரம் இரண்டு நாட்கள்தான். வருடம் முழுவதிலும்

ரஜினிகாந்தும், இளையராஜாவும்





நெ.து.சுந்திரவடிவேலு, டாக்டர் N மகாலிங்கம், VG பன்னீர்தாஸ் சகோதரர்கள், தமிழ்வாணன்.

ஓய்வின்றி உழைக்கும் இந்த சாதனையாளர் இன்னமும் தன் முயற்சியைச் சற்றும் குறைக்கவில்லை என்பது நாம் கற்க வேண்டிய பாடம்.

ஒரு பஸ் கண்டக்டராக இருந்த 'சிவாஜிராவ்' சூப்பர் ஸ்டார் ரஜினிகாந்தாக பிரகாசிப்பதும் முயற்சி என்ற அழுத்தமான அஸ்திவாரத்தினால்தான்!

ஹோட்டலில் சர்வராகத் தொடங்கிய திரு. கிருஷ்ணாராவ் 'உட்லண்ட்ஸ்' என்ற பெயரை உலகம் முழுவதும் நிலைநாட்டியவர்.

பேப்பர் போடும் பையன்களாகப் பிழைப்பைத் துவங்கி மெல்ல மெல்லத் தவணை முறை வியாபாரத்தைப் பிரபலமாக்கி உழைத்தவர்கள் வி.ஜி.பன்னீர்தாஸ் மற்றும் அவரது சகோதரர்கள்.

இவ்வாறு பட்டியலிட்டால் அதற்கு முடிவே இருக்காது. ஆனால் இந்தப் பட்டியலிலிருந்து ஒன்று மட்டும் எனக்குத் தெளிவாகியது. மனிதனால் செய்யக்கூடிய, அவனது எல்லைகளுக்கு உட்பட்ட முயற்சிகளுக்கு மட்டுமே கட்டாயம் பலன் கிடைக்கிறது என்பதுதான் அது! வீண் முயற்சிக்குப் பலனே கிடைக்காது என்பது அனுபவம் எனக்கு உணர்த்திய பாடம்.

சினிமாவில்கூட, நடித்துப் பெயர் பெற்று பெரும் நட்சத்திரமாக ஆக வேண்டும் என்ற ஆசையில் ஆயிரக்கணக்கானோர் கோடம்பாக்கத்தை முற்றுகையிடுகிறார்கள். எத்தனைதான் முயன்றாலும், ஒரு சிலர்தான் வெற்றி அடைகிறார்கள். மற்றவர்களின் முயற்சிக்கு ஏன் பலன் இருப்பதில்லை?



திறமை, உழைப்பு, அதிருஷ்டம், நேரம், இடம் என்று கூறப்படும் பல காரணங்களில் ஒருசிலவற்றிலேனும் முழுமை இருக்க வேண்டும். அப்போதுதான் வெற்றி கிட்டும் எங்கள் நிறுவனத்துக்கு ஒருவர் தினம் ஒரு கடிதம் என்று இதுவரை ஆயிரத்துக்கு மேற்பட்ட கடிதங்களை அனுப்பியிருக்கிறார். இன்னமும் அனுப்பி வருகிறார். எதற்காக? கதை, வசனம் எழுதும் வாய்ப்பு கேட்டுத்தான்! தன் தகுதியை வளர்த்துக் கொள்ளாத இதுபோன்ற வீண் முயற்சிகள் எப்போதுமே வேஸ்ட்தான்!

இவற்றையெல்லாம் புரிந்து கொண்டுதான் ஆக்கபூர்வமான 'முயற்சி திருவினையாக்கும்' என்ற சொற்றொடரை என் வாழ்வில் மறப்பதேயில்லை.

ஏவி.எம்.என்ற பெரிய மனிதரின் மகனாகப் பிறந்திருந்தாலும், எனக்குத் துவக்கத்தில் பல தடைகள் இருந்திருக்கின்றன. அதில் முக்கியமானது, என் படிப்பு.

மிகச் சிரத்தையாய், உழைத்துப் படிக்கும் பழக்கம் எனக்கு உண்டு. படிப்பதைப் புரிந்து உணர்ந்து கேள்விகளுக்கு விடையைச் சரியாகச் சொல்லிவிடும் திறமையும் உண்டு. ஆனால், படித்ததை எழுத்தில் 'எழுதுவது' என்பது என்ன காரணத்தினாலோ என்னை சற்றும் வளரவிடாமல் துவளச் செய்து வந்தது. எழுத்துப் பிழைகள் இல்லாமல் ஒரு வரி கூட எழுத முடியாத ஒரு குறைபாடு எனக்கு இருந்தது. சொல்லிய விஷயம் சரியாக இருந்தாலும். சொற்களில் பிழை இருந்தால் மதிப்பெண்களே அதிகம் கிடைக்காமல் போய்விடும். பள்ளியிறுதித் தேர்வில் இதனால் நான் தோல்வியையே சந்தித்தேன்.

என் குறை, என் எல்லை எனக்கே புரிந்து விட்டதால் தகப்பனாரிடம் இதைப் பற்றிப் பேசினேன். 'மறுபடி மறுபடி தேர்வு

எழுதி நேரத்தை வீணடிப்பதில் விருப்பம் இல்லை, எப்படியிருந்தாலும் நமது ஸ்டுடியோவில்தான் வேலை செய்யப் போகிறேன். அதை இப்போதே செய்ய நீங்கள் அனுமதிக்க வேண்டும்' என்று என் நிலையை விளக்கி வேண்டுகோள் விடுத்தேன்.

நான் பரீட்சையில் பெற்ற தோல்வியைப் பார்த்து என் குடும்பத்தினருக்கு என்மீது வருத்தம் இருந்தது. சொல்லப்போனால், நான் உதவாக்கரை என்கிற எண்ணம்கூட சிலருக்கு இருந்தது என்றே சொல்ல வேண்டும். எனது நெருங்கின உறவினர்கள்கூட, 'உன்னால் உபயோகமில்லை, நீ உன் சகோதரர்களுக்கே சுமையாகிவிடுவாயோ என்று பயமாக இருக்கிறது' என்று அஞ்சினார்கள்.

இத்தனை அபவாதத்தையும் எப்படியாவது துடைத்து எறிந்துவிட வேண்டும் என்று ஒரு உத்வேகம், வெறி என்க்குள் ஏற்பட்டது. அதனாலேயே, வெட்கத்தை விட்டு தந்தையிடம் சென்று, 'இனிமேல் படிக்க மாட்டேன், ஸ்டுடியோவில் வேலை செய்கிறேன்' என்று பிடிவாதமாகக் கேட்டேன்.

மிகத் தெளிவாக என் நிலைமையை எடுத்துக்கூறி, அதிலிருந்து விடுபட்டு வர வேண்டும் என்கிற விடாமுயற்சியை நான் உறுதியாக வெளிப்படுத்தியதும், என் தந்தைக்கு என் உணர்வுகள் புரிந்து போயின. ஸ்டுடியோவுக்குள் வந்து பயிற்சி பெற அனுமதி அளித்தார்.

இந்த அனுமதியை, என் வாழ்வில் எனக்குக் கிடைத்திருக்கும் கடைசி வாய்ப்பாகக் கருதினேன். இதிலும் நான் தோற்றுப் போய்விட்டால், இனி முன்னேற சந்தர்ப்பமே இல்லை என்பதை அழுத்தம் திருத்தமாக மனதில் குறித்துக் கொண்டேன். நான் யாருக்கும் பாரமாக இருக்கக்கூடாது, என்னால் எவருக்கும் அவமானமோ மனக்கஷ்டமோ வந்துவிடக்கூடாது என்று உறுதியெடுத்துக் கொண்டேன்.

உழைப்பு, சிரததை, முழு ஈடுபாடு, சிதறாத கவனம், மாசு இல்லாத ஒழுக்கம் என்று நான் மதித்த குணங்களையே எனக்குள் வளர்த்து, அவற்றையே என் பலங்களாகக் கொண்டு தளராமல் முயற்சி செய்தேன். எந்தக் குறுக்கீடுக்கும் இடம் கொடுக்காமல் நல்ல முறையில் வளர்வது ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு செயல்பட்டேன்.

அழகு, கவர்ச்சி, போதை மிகுந்த இந்தத் திரைப்பட உலகில் என் மனதை திசைதிருப்பும் காந்தங்களும் இல்லாமல் இல்லை! ஆனால், எதுவும் என்னை பலவீனனாக ஆக்கிவிடக் கூடாது என்கிற கவனத்துடன், என்னிடம் இருந்த நல்ல குணங்களை மூலதனமாகக் கொண்டு உழைத்தேன்; வெற்றி ஒன்றையே இலக்காக் கொண்டு



கையில் சிறிய டேப் ரெக்கார்டருடன் ஏவி.எம்.

பாடுபட்டேன். அவ்வப்போது தலைகாட்டிய சலனங்களை மிகுந்த முயற்சியின்பேரில் ஒதுக்கிவிட்டு, அவை என் மனதை அலைக்கழிக்காமல் இருக்க தீவிரமாக செயல்பட்டு, என்னை எதுவும் அமுக்கி விடாமல் இருக்க விழிப்போடு இருந்தேன். சலனத்துக்கும் ஒழுக்கத்துக்கும் என் மனதுக்குள் நடந்த பந்தயத்தில் கடைசியில் வென்றது, என் ஒழுக்கம்தான்!

முன்பு குறிப்பிட்டபடி, எழுத முடியாத எனது குறைபாடு என்னை எந்த விதத்திலும் தடை செய்து விடக்கூடாது என்பதால் எழுதுவதைத் தவிர்த்து 'டிக்டேட்' செய்கிறேன். அல்லது 'டிக்டபோன்' கருவியை உபயோகிக்கிறேன். சொல்ல வேண்டிய விஷயங்களை இப்படி டேப் செய்து உதவியாளர்களிடம் கொடுப்பதையும் என் தந்தையிடமிருந்துதான் கற்றேன். இந்தியாவில் டேப் ரிகார்டர் வந்ததுமே அதை உபயோகிக்கத் துவங்கி விட்டார் அவர். அவர் சொல்லியும்கூட எனக்கு என்னவோ அந்தப் பழக்கம் முதலில் இல்லாமல் இருந்தது. ஆனால், அவரது மறைவுக்குப் பிறகு, மெல்ல மெல்ல துவங்கியது. இப்போதெல்லாம் வீடு, ஆபீஸ், கார், ஷேவிங் செட், பிரயாணப் பெட்டி என்று எங்கெங்கு முடியுமோ அங்கங்கு

ரிகார்டர்களை வைத்து, உடனுக்குடன் நினைப்பதை டேப் செய்து ஆபீஸுக்குப் போனதும் உதவியாளரிடம் கொடுத்து விடுகிறேன்!

இதனால், வேலைகளை மறந்து விடாமல் விரைவில் செயலாற்ற முடிகிறது. சரியாகச் சொல்லியிருக்கிறோமா, சொன்னதை மற்றவர்கள் சரிவர செய்து முடித்திருக்கிறார்களா என்றெல்லாம் செக் செய்ய முடிகிறது. டேப் ரிகார்டரை நான் இப்படி தீவிரமாக உபயோகிப்பதைப் பார்த்துவிட்டு, நண்பர்களும் உறவினர்களும் வெளிநாட்டில் எங்காவது புது விதமான டேப் ரிகார்டரைப் பார்க்க நேர்ந்தால் உடனே என் நினைவு வந்து வாங்கிக் கொண்டு வந்து விடுகிறார்கள்!

இப்படி, என் தந்தையின் மூலம் கிடைத்துள்ள நல்ல விஷயங்களை எனக்கு சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டேன். தந்தையும் என் உறுதியையும் வேகத்தையும் புரிந்து என்னை உற்சாகப்படுத்தி ஊக்குவித்தார்.

மீண்டும் சொல்கிறேன், முயற்சி திருவினையாக்கும். என் அனுபவத்திலேயே இதை நன்றாக உணர்ந்திருக்கிறேன் என்பதால் நன்றாக அழுத்திக் கூறுகிறேன்.

எனது தாயும் தந்தையும்





# அணிந்துரை

ARUNACHALAM, M.V.
Tiam House, Madras - 1

நண்பர் சரவணன் எழுதியுள்ள பல கட்டுரைகளைத் தொகுத்து 'முயற்சி திருவினையாக்கும்' என்று ஒரு புத்தகத்தை வெளியிடுகிறார்கள். பர்மிய பழமொழி ஒன்றை நான் குறிப்பிட விரும்புகிறேன். அதாவது "அனுபவம் என்பது நாம் தலையில் உள்ள முடியை எல்லாம் இழந்த பிறகு கிடைக்கும் சீப்புக்கு ஒப்பானது". பொதுவாக மக்கள் தங்கள் சொந்த அனுபவத்திலிருந்து பயன்படுமாறு தங்கள் வாழ்க்கையைத் திருத்தி அமைத்துக் கொள்வதில்லை. நண்பர் சரவணன் அவர்கள், பழக நேர்ந்த பலரிடம் உள்ள நற்குணங்களை அறிந்து, புரிந்து அவற்றை தன்னுடைய வாழ்க்கையில் பழக்கத்தில் கொண்டு வந்திருப்பதினால்தான் தொழிலில் வெற்றியும் வாழ்க்கையில் திருப்தியும் நிறைவும் பெற்ற ஒரு உதாரண புருஷராக இன்று விளங்குகிறார்கள். கட்டுரைகளைப் படிக்கும் அனைவரும் அதன் எளிய் நடையையும் அரிய கருத்துக்களையும் பாராட்டுவதோடு மட்டும் நின்றுவிடாமல், அவற்றில் உள்ள நற்பண்புகளைப் பின்பற்றுவதற்கு முயற்சி செய்தார்களேயானால் அதுவே மிகவும் ஒரு நல்ல புத்தகத்தை இயற்றிய ஆசிரியர் சரவணத்திற்கு முறையாக நன்றி செலுத்துவதாகும்.

M.V. அருணாசலம்

BALACHANDER. K.
Abhirama puram, Madras - 28



"EFFORTS NEVER FAIL"

என்கிற வாசகம் கொண்ட டேபிள் வெயிட்டை 1965-ம் ஆண்டில் பங்களூரில் வாங்கி வந்து அதன்பிறகு இதே வாசகத்தை தனது லெட்டர் பேட்கள், வாழ்த்து அட்டைகள் ஆகியவற்றில் அச்சடித்து வைத்துக் கொண்டிருப்பதாக திரு. சரவணன் அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். ஒருமுறை இவர் அப்படி எனக்கனுப்பியிருந்த ஒரு வாழ்த்து அட்டையில் கொட்டை எழுத்துகளில் இருந்த இந்த ஆங்கில வாசகத்தைக் கத்தரித்து நான் எழுதும் மேஜையில் கண்ணாடிக்கடியில் பத்திரப்படுத்தி வைத்தேன். இந்த நிமிடம் இதை நான் எழுதிக் கொண்டிருக்கும் போதும் இந்த வாசகம் என் கண்களில் பட்டுக்கொண்டிருக்கிறது.

ஆத்திச்சூடியை விட எளிதான நூல் இருக்க முடியுமா? திரு. சரவணன் அவர்கள் எழுதியிருக்கும் கட்டுரைகளின் ஒவ்வொரு கருத்தும் ஆத்திச்சூடி வாக்கியங்கள்போல் அமைந்திருப்பது என்னை வியப்பில் ஆழ்த்தியது. ஆம்! வாழ்க்கையில் வெற்றி பெறத் துடிப்பவர்களுக்கு இந்த நூல் ஒரு ஆத்திச்சூடிதான்.

தெரியாத விஷயங்கள், வாழ்க்கையில் நாம் கடைப்பிடிக்கத் தவறும் சின்னச் சின்ன நெறி முறைகள், படிப்பவர்களின் மனதில் சட்டென்று தைக்கின்ற மாதிரி எழுதியிருப்பது மூதறிஞர் ராஜாஜி அவர்கள் எளிய பாணியில் எழுதுவார்களே அந்த பாணியைத்தான் எனக்கு நினைவுபடுத்தியது.

இன்று என்ன கற்றுக்கொண்டேன் என்று ஒவ்வொரு நாளும் இரவு .நினைத்துப்பார்த்து நான் அசை போடுவதுண்டு.

இந்த நூலைப் படிப்பதற்குமுன் இருந்ததைவிட, படித்து முடித்தபிறகு "I HAVE BECOME WISER" என்கிற எண்ணம், இருபது இருபத்தைந்து இடங்களில் எனக்குத் தோன்றியது. உண்மையைச் சொல்ல நான் வெட்கப்படுவதில்லை.

கே.பாலசந்தர்.



BALASUBRAMANIAM. S.
Proprietor Balu Jewellers,
Madras - 17.

திரு. சரவணன் அவர்கள் எழுதிய முயற்சி திருவினையாக்கும் நூலை வரிக்குவரி வாசித்தேன்.

முன்னேறும் மனிதர்களுக்கும், முன்னேறிய மனிதர்களுக்கும் இந்த நூலில் ஏராளமான நல்ல செய்திகள் இருக்கின்றன.

திரு. சரவணன் அவர்களை மிகச் சிறந்த கலையுலகவாதி என்றுதான் நாடறியும்.

இந்த நூல் அவரை மிகச் சிறந்த ''சமூகச் சிந்தனையாளர்'' என்றும் சொல்லவைக்கிறது.

இந்த நூலைப் படித்ததிலிருந்து இதில் வரும் பல நல்ல குணங்களை என் கடையிலேயே நான் கடைப்பிடிக்க ஆரம்பித்துவிட்டேன்.

எஸ்.பாலசுப்பிரமணியம்



BHAGYARAJ. K.
1, Kuppuswamy Street,
Madras - 17.

"அனுபவம் என்பது தலை வழுக்கையான பிறகு கிடைக்கும் சீப்பைப் போன்றது" ஒரு மகானின் அனுபவ மொழி.

நாம எல்லாரும் நம்ம அனுபவத்தாலே மட்டுமே பயன் பெறுவது சாத்தியமில்லாத ஒன்று.

அதனால பிறத்தியாருடைய அனுபவங்களையும் நாம சீப்பாகப் பயன்படுத்துவதுதான் பயனுள்ளதா இருக்கும்.

'முயற்சி திருவினையாக்கும்' இந்த நூல்ல திரு. ஏவி. எம். சரவணன் அவர்கள் தான் கற்ற சிறந்த அனுபவங்களைத் தொகுத்து தந்திருக்கிறார். அந்த அரிய அனுபவங்கள் நிச்சயம் வளரும் தலைமுறைக்கு பெரும் பயனாக அமையும்.

-K. பாக்யராஜ்



CHO
Editor Thuklak,
Madras - 4

ஏவி. எம். சரவணன் வித்தியாசமான மனிதர். பல சந்திப்புகள், பல நட்புகள், பல நிகழ்ச்சிகள் எல்லாவற்றிலிருந்தும் வாழ்க்கைக்கு மிகவும் உதவக்கூடிய பல பாடங்களை தானும் உணர்ந்து, இந்தப் புத்தகத்தின் மூலம் நமக்கும் உணர்த்துகிறார் அவர். பெரிய மனிதர்களிடமிருந்து சாதாரணமான மனிதர்கள் வரை பலருடன் பழகும் வாய்ப்பு, அவர்களை கூர்ந்து கவனிக்கும் தன்மை, அவர்களுடைய குணாதிசயங்களை புரிந்து கொள்ளும் பக்குவம், ஒவ்வொரு நிகழ்ச்சியிலிருந்தும் அல்லது மனிதரிடமிருந்தும் .ஒரு விஷயத்தை கிரஹிக்கும் ஆற்றல், நிகழ்ச்சிகளை நினைவில் பதிய வைத்துக் கொள்ளும் ஞாபகசக்தி. எல்லாவற்றுக்கும் மேலாக இதையெல்லாம் சுவைபட எழுத்தில் வடிக்கும் திறமை, இத்தனையுமே திரு. சரவணனிடம் இருக்கிறது.

தனது தந்தையிலிருந்து, தமிழ் ஆசிரியர் உட்பட, பெயர் குறிப்பிடப்படாத சில அறிமுகங்கள் வரை, பலரிடமிருந்து திரு. சரவணன் அறிந்து கொண்ட பாடங்களின் தொகுப்பே இந்தப் புத்தகம். சிலரிடமிருந்து எது தேவை என்பதையும், சிலரிடமிருந்து எது தவிர்க்க வேண்டியது என்பதையும் புரிந்து கொண்டுள்ள திரு. சரவணன், தனது அந்த அனுபவங்களை எல்லாம் ஒரு சிறுகதைத் தொகுப்பு மாதிரியாக, மிகவும் சுவாரஸ்யமாக விவரிக்கிறார்.

ஒரே ஒரு விஷயம். இது நான் கற்றுக்கொண்ட பாடம். இனி திரு சரவணனை சந்திக்கும் போதெல்லாம் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். என்னிடமுள்ள குறைகளையெல்லாம் ஏற்கனவே எவ்வளவு எடைபோட்டு வைத்துள்ளாரோ நினைத்தாலே பகீர் என்கிறது.

காடு முரடான வாழ்க்கைப் பாதையைக் கடப்பதற்கு ஒரு சரியான வாகனமாக இந்தப் புத்தகம் பயன்படும்.

இந்தப் புத்தகம் ஒரு சமூக சேவை!

-சோ

Prof.GNANASAMBANDAN A.S.
19, Dr. Natesan Road,
Madras - 83.



அன்பர் A.V.M. சரவணன் அவர்கள் எழுதியுள்ள "முயற்சி திருவினை ஆக்கும்" என்ற நூலைக் காணும் வாய்ப்புப் பெற்றேன். தந்தையார் காலம் முதல் மிகப்பெரிய நிறுவனத்தை நடத்துவதாலும், பல்லாயிரவரைச் சந்தித்ததாலும் பெற்ற அனுபவங்களை மிகச் சிறப்பாக விளக்கியுள்ளார்.

"எளிமைக்கு மரியாதை" என்ற கட்டுரையில் திரையுலகில் கொடிகட்டிப் பறந்து சாதனை படைத்த திரு. S.S. வாசன், திரு. மெய்யப்பன், திரு. நாகிரெட்டியார் ஆகிய மூவரையும், அவர்கள் எளிமையையும் அற்புதமாக எடுத்துக்காட்டும் சரவணன் அவர்கள், கட்டுரை இறுதியில் கூறியுள்ள "ஜரிகைக்கரை .... மரியாதை செய்யவே தோன்றுகிறது" என்றும் வரிகள் இன்றைய உலகில் வாழும் நாம் அனைவரும் பலமுறை சிந்திக்க வேண்டிய வரிகளாகும். மாபெரும் சாதனைகள் படைப்பதற்குப் படாடோபம் தேவை இல்லை என்பதனைக்கூறும் இக்கட்டுரை காலத்திற்கேற்றது; தேவையானது; பின்பற்றத்தக்கது என்று கூறுவதில் மகிழ்ச்சி அடைகிறேன்.

**அ.ச.ஞானசம்பந்தன்.**



GOPAL. G.D.
315, Avinashi Road,
Coimbatore - 18.

Dear Mr. Saravanan,

I thank you very much for sending me the photocopy of the article on "Efforts Never Fail'. I have been reading these articles regularly and I was looking forward to getting the magazine every week.

The articles not only enlightens us to the life of a great man, but there is so much that could be learnt from the practical instances quoted not only for the present younger generation but for each and everyone to learn and follow.

The articles will definitely be a great inspiration for the students and youth of this generation.

I congratulate you on writing the articles in a very simple language as even the rural folk could understand it.

Wishing you all the best.
With regards
G.D.GOPAL



GOPALAKRISHNAN. M.
Chairman & Mg.Director, Indian Bank,
Madras.

இனிய நண்பர் உயர் திரு. சரவணன் அவர்களுடைய "முயற்சி திருவினையாக்கும்" என்ற அனுபவக் கோவையைப் படிக்கின்ற நல்லதொரு வாய்ப்பினைப் பெற்றேன். பாரம்பரியம் மிக்க குடும்பத்தில் பிறந்து சராசரியாக நம் எல்லோருக்கும் இருக்கக்கூடிய முன்கோபம் போன்ற சில குறைகளை தம் விடா முயற்சியினால் களைந்து, போற்றத்தக்க பல வெற்றிகளைத் தழுவி, அங்கிங்கெனாதபடி எங்கும் நண்பர்கள் என்ற செல்வத்தினையும் பெற்று சாதனையாளராக விளங்கும் திரு. சரவணன் அவர்கள் இந்த நூல் மூலம் ஏதோ அறிவுரைகள் சொல்கிறார் என்ற எண்ணமே தோன்றாமல் நாம் நம் அன்றாட வாழ்வில் அறியாமல் செய்யக்கூடிய தவறுகளை உணர்ந்து திருத்திக் கொள்ளும் வாய்ப்பினைத் தந்திருக்கிறார். இது இவருடைய எழுத்தின் வெற்றி.

அரிய அனுபவ முத்துக்கள் 32 அத்தியாயங்களாக மலர்ந்திருக்கின்றன. நிம்மதியைத் தேடும் வழிகளை விட இருக்கின்ற நிம்மதியைத் தொலைக்காமல் பார்த்துக் கொள்வது நல்லது; அடுத்தவர் கருத்துக்கு மதிப்பு என்ற பல உயரிய கருத்துக்களை இவர் நம் மனத்தில் ஆழப் பதிக்கின்றார்.

நம் இளைஞர்கள் மனத்திலும், ஏன்? வாழ்வில் பல்லாண்டு அனுபவம் பெற்றவர்கள் மனத்திலும் கூட நல்ல பல விரும்பத்தக்க மாற்றங்களை இந்த நூல் நிச்சயம் ஏற்படுத்தும் என நான் நம்புகிறேன்.

அன்புடன்
ம. கோபாலகிருஷ்ணன்



GOPALAN. S.,(Gopulu)
9, South Boag Road, T.Nagar
Madras 600 017.

*'சின்னச் சின்ன விஷயங்கள்' என்ற இந்தக் கட்டுரைத் தொகுப்பில் 'எந்தக் கட்டுரை உங்களை மிகவும் கவர்ந்தது' என்று கூறும்படி நண்பர் திரு.சரவணன் கேட்டார். ரொம்பச் சுலபமாக பதில் கூறலாம் என்று நினைத்துக் கட்டுரைகளைப் படித்தேன். அது அத்தனை சுலபமான காரியம் அல்ல என்று படித்த பிறகுதான் தெரிந்தது. ஒவ்வொரு கட்டுரையும் ஒரு அருமையான கருத்துப் புதையல்.*

*திரு.சரவணன் எழுதியுள்ள 'சின்னச்சின்ன விஷயங்கள்' என்ற கருத்துக் கோவை சின்னச்சின்ன விஷயங்களே அல்ல. குறள்போல் கூறியுள்ள 'சின்னச்சின்ன விஷயங்கள்' பெரிய பெரிய, அரிய அனுபவங்கள் கொண்ட தொகுப்பு. நல்ல வாழ்க்கை முறைக்கு வழிகாட்டும் நூல். வளரும் இளைய தலைமுறைக்கு வழிகாட்டும் நூல். திரு.சரவணன் தான் வாழும் வழிமுறைகளுக்கு பயன் அளித்த, பலன் அளித்த, பண்படுத்திய பல நிகழ்ச்சிகளை உபதேசம்போல் அப்படிச் செய், இப்படிச் செய் என்று கூறாமல், படிப்பவர்கள் மனதில் நல்ல விஷயங்களைப் பதித்து அவர்களே சிந்தித்து ஆராய்ந்து நடைமுறையில் கைகொள்ள ஆசை உண்டாகும்படி எழுதியிருக்கிறார். மிக அருமையாக, சுவையாகச் சொல்லியிருக்கிறார்.*

*தன் தந்தை அமரர் ஏவி.எம் அவர்கள் வாழ்ந்து வழிகாட்டிய வகையில் தான் பெற்ற அனுபவங்களைக் கொண்டு தன்னைப் பட்டை தீட்டி 'டால்' அடிக்கும் வகையில் வாழ்ந்து கொண்டு அதில் தான் பெற்ற இன்பத்தை இந்த நூல் மூலமாய் உங்களுடன் பகிர்ந்து கொள்கிறார். பெரிய பெரிய வைரங்கள் பொதித்த பதக்கம் இவை!*

கோபுலு



ISMAIL, Justice, M.M.
Sundararamier Street,
Madras - 4.

இந்த நூலை அனுபவத் திரட்டு என்று சொல்வதா? அறிவுத் தொகுப்பு என்று சொல்வதா? யாருடனும் பகைக்காமல் அனைவருடனும் நட்புடனும். நன்றியுடனும், தாராளத்துடனும் அவரவர்களிடம் உள்ள நல்லதைப் பெரிதுபடுத்தியும், பாராட்டியும், அல்லதை ஒதுக்கியும் முக்கியத்துவம் கொடுக்காமல் மறந்துவிடுவதும் ஆகியவற்றையெல்லாம் இவ்வளவு சிறிய வயதில் எப்படிக் கற்றுக் கொண்டார்; அப்படிக் கற்றுக் கொண்டவற்றை பிறருக்குப் பயன்படுமாறு மிக எளிய நடையில் எழுத எப்படி பழகிக் கொண்டார் என்பது என்னை ஆச்சரியத்தில் மூழ்கடித்து விட்டது என்று சொன்னால் மிகையாகாது. இயற்கையாகவே, பிறருடைய குறைகளும், தவறுகளுமே முதலில் கண்ணிலும், உள்ளத்திலும் படும் சுபாவமுடைய நானே உண்மையை உரைப்பதற்காக இப்படி எழுதுகிறேன் என்பது எனக்கே ஆச்சரியமாக இருக்கிறது. காரணம் அந்த அளவுக்கு அனைவரும் வாழும் வழியைப் பற்றிய நெறிமுறைகள் அவருடைய அனுபவத்தின் அடிப்படையில், இலகுவாக எல்லோரும் புரிந்துகொள்ளும் வகையிலும், புரிந்து கொண்டவற்றை செயற்படுத்தும் வகையிலும் எழுதப் பெற்றிருப்பதுதான்.

இதனைப் படிக்கும் அனைவரும், சுமுகமாகவும், மகிழ்ச்சியாகவும் வெறுப்பு, பகைமை உணர்வு இன்றி நண்பர்களாக, உறவினர்களாக எல்லோரும் வாழ்வது இவ்வளவு எளிமையாக. இருக்கும்பொழுது, நாம் ஏன், அதற்கு மாறாக பகைமை உணர்ச்சியுடனும், ஒருவரையொருவர் வெறுக்கும் சூழலிலும் வாழ்கிறோம் என்று அவர்களே ஆச்சரியப்படுவார்கள் என்பதில் எனக்குச் சிறிதும் சந்தேகமில்லை.

- நீதிபதி மு.மு.இஸ்மாயீல்



KRISHNASWAMY, K.A.
Minister For Law,
Madras - 1.

*தமிழ்நாட்டு மக்களுக்கு - அதிலும் குறிப்பாக இன்றைய தலைமுறையைச் சேர்ந்த வாலிபர்களுக்கு - வாழ்க்கையில் முன்னேறிட வழிகாட்டும் நூல் ஒன்று இதோ வந்துவிட்டது!*

*செயலில் காட்ட முடியாத போதனைகள் ஆயிரம் இருக்கலாம். ஆனால் அன்றாடம் செயல்படுத்தக்கூடிய எளிய வழிமுறைகள் இந்த நூலில் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.*

*நேரம் தவறாமை - வாக்குறுதியைக் காப்பாற்றுதல் - திட்டமிட்டு உழைத்தல் - நன்றியுடன் இருத்தல் - மூத்தோரை மதித்தல் - கலங்காதிருதல் - குடும்பம் பேணுதல் - இனியவனாக இருத்தல் - இயன்ற உதவியைச் செய்தல் - என்று வாழ்க்கையில் சகல பரிமாணங்களையும் அலசி, வெற்றிக்காண வழிகளை ஏவி. எம். சரவணன் அனுபவித்துக் கூறியிருக்கிறார்.*

*மற்றவர்கள் அலட்சியப்படுத்தக்கூடிய மிகச் சாதாரண விஷயங்களைக்கூட நுட்பமாகக் கவனித்து - அவைபற்றி எழுதியிருப்பது பாராட்ட வேண்டிய சாதனை.*

*முன்னேறுவதற்கு - உயர்வதற்கு வழிகாட்டும் நூல்கள் ஏராளமாக வெளிவந்து கொண்டிருக்கின்றன.*

*மேல்நாட்டு ஆசிரியர்கள்தான் அத்தகைய நூல்களை எழுத முடியும் என்பதல்ல - தமிழகத்திலும் அவ்வாறான சிறந்த நூல்கள் வெளிவர முடியும் என்பதற்கு ஒரு சான்றாக ஏவி. எம். சரவணன் எழுதிய 'முயற்சி திருவினையாக்கும்' என்ற நூல் திகழ்கிறது.*

*இதழ்களில் வெளிவந்த போதே படித்து, மகிழ்ந்து, பாராட்டிய எனக்கு - சரவணனின் கட்டுரைகள் புத்தக வடிவில் வந்திருப்பது மட்டற்ற மகிழ்ச்சியினையும் பெருமிதத்தையும் அளிக்கிறது.*

*ஏவி. எம். சரவணன் எனும் பண்பாளருடைய ஆளுமையை இந்நூல் அற்புதமாக படம் பிடித்துக் காட்டுகிறது.*

*இதைப் படிக்கின்ற எல்லோருக்கும் இந்த உணர்வே ஏற்படும் என்பது திண்ணம்.*

*கே.ஏ.கிருஷ்ணசாமி*



MANIAN
Editor Idayam Pesugirathu,
Madras - 18.

*'முயற்சி திருவினையாக்கும்' என்ற தங்கள் அனுபவங்கள் அடங்கிய புத்தகத்தைப் படித்தேன். இளைய தலைமுறையினரும், வாழ்க்கையில் முன்னேற விரும்புகிறவர்களும், குடும்ப வாழ்க்கையில் அமைதியையும் நிறைவையும் காண விரும்புகிறவர்களும், படித்துத் தெரிந்து கொள்ள வேண்டிய பல விஷயங்கள் எளிய முறையில் அழகாகச் சொல்லப் பட்டிருக்கின்றன. எழுதுவதைக் காட்டிலும் 'டேப்'பில் சொல்லிவிடுவது எளிது என்று கண்டு, அதற்கேற்ப தங்களுடைய நடைமுறையை மாற்றி அமைத்துக் கொண்டுவிட்ட பகுதியை நான் மிகவும் ரசித்தேன். என்போன்ற நேரம் இன்றித் தவிக்கும் சிலருக்கு அது ஒரு கைகண்ட மருந்து!*

*நன்றி.*

*அன்புடன்*
*மணியன்.*



NALLI KUPPUSWAMI CHETTIAR
Madras - 17.

ஏவி. எம். என்றாலே ஒரு மாபெரும் மனிதர் என்பதும் மாபெரும் நிறுவனம் என்பதும் நமக்கெல்லாம் தெரிந்ததே. ஏவி. எம்மின் புதல்வர் திரு. சரவணன் எழுதியுள்ள 'முயற்சி திருவினையாக்கும்' என்ற இந்நூல் வாழ்க்கையில் பலருக்கும் ஒரு வழிகாட்டி என்றே சொல்லலாம். இதில் நிர்வாகம், கட்டிடக் கலைஞர், கணவன் - மனைவி வாழ்க்கை, கருவைத் தாங்கும் தாய், மற்றும் குழந்தைகளை வளர்ப்பது பற்றியெல்லாம் மிக அருமையாக தெளிவாக விளக்கி இருக்கிறார். டெலிபோனில் எப்படி பேசவேண்டும், வியாபாரம் எப்படி செய்ய வேண்டும் என்பதைப் பற்றியும் கார் ஓட்டுவதிலிருந்து கலந்துரையாடல் வரையும் மிகச் சாதாரண மனிதர்களில் இருந்து பிரதமர், ஜனாதிபதி வரையும் பல்வேறுபட்ட அரசியல் தலைவர்கள், பக்திமான்கள், உறவினர்கள், நிர்வாகிகள், தொழிலாளர்கள், நண்பர்கள், கலைஞர்கள் என்று எத்தனை எத்தனையோ பேர்களைப் பற்றியெல்லாம் அவர் வாழ்வில் நிகழ்ந்த பல்வேறு சம்பவங்கள், நிகழ்ச்சிகள் என்பவற்றை அழகாக எடுத்துச் சொல்லி அனுபவங்களை படிப்பினையாக்கியிருக்கிறார்.

இந்நூல் முழுவதும் கனத்த தங்க இழையாக ஏவி. எம்.மின் அறிவுரைகள் மின்னித் திகழ்கிறது. தொழில் மேன்மையிலும் கலை வளர்த்தலிலும் சிறந்தோங்கும் திரு. சரவணன் அவர்களை வாழ்த்திப் பாராட்டுவதில் மகிழ்ச்சி அடைகிறேன். அவர் இதுபோன்ற நூல்களை நாட்டுக்கு வழங்க வேண்டும் என்பதே என் விருப்பம்.

-டாக்டர் நல்லி சின்னச்சாமி செட்டியார்.



NATARAJAN. A.,
Director,
Door Darsan Madras - 5.

"முயற்சி திருவினையாக்கும்" என்ற இந்நூல் அருமையான கட்டுரைத் தொகுப்பு. இதில் எந்த இடத்திலும் மிகைப்படுத்தப்பட்ட செய்திகளே இல்லை. எல்லாமே வாழ்க்கையில் இயல்பாக ஏற்பட்டவைகள். மாபெரும் மனிதராக புகழுடன் விளங்கிய பெரியவர் ஏவி. எம்மின் வாழ்க்கை அனுபவங்கள் அவர் வழங்கிய அறிவுரைகள் எல்லாம் நூல் முழுவதும் சின்ன சின்ன நிகழ்ச்சிகளின் மூலம் குறிப்பிட்டிருப்பது படிக்க சுவையாக இருக்கிறது. "வழி சொன்னால் வசவு" கட்டுரையில்தான் எத்தனை உண்மை. வழி தவறிப்போன மூதாட்டி - வாழ்விழந்துபோன சீமான் நல்ல கதையம்சம் மிகுந்த கட்டுரை. "எண்ணமும் பேச்சும்" ஒரு மனதத்துவக் கட்டுரை. மனிதாபிமானத்தை முன்னிறுத்தியே கட்டுரைகள் பலவும் அமைந்திருக்கின்றன.

நாம் உதவி கேட்கும் நிலைவராமல் நம்மால் மற்றவருக்கு உதவ முடிகிறதே ஆண்டவன் நமக்கு கொடுத்த அரிய சந்தர்ப்பம் என்ற நோக்கில் நமது உதவி அமைய வேண்டும் என்கிற இவரின் சொற்களில் இருந்தே நாம் இவரை முழுமையாக அறியலாம்.

எல்லாவற்றிலும் சிறந்து விளங்குவதோடு வாழ்க்கையில் நிறைவு பெற்றவராய்த் திகழும் திரு. சரவணன் இன்னமும் பல நல்ல குணப் பண்பாடுகளை பின்பற்ற முனைந்து கொண்டிருக்கிறேன் என்று தெரியப்படுத்துவதை அறியும்போது இவர் இன்னமும் இதுபோன்ற நூல்களை வழங்க வேண்டும் என்று நம்மை எதிர்நோக்கத் தூண்டுகிறது.

சிரிப்பையும் சந்தோஷத்தையும் கொடுக்கக் கொடுக்க குறையாத கல்வி போன்ற செல்வம் என்று சொல்லும் திரு. சரவணன் அவர்களை மிகுந்த மகிழ்ச்சியுடன் வாழ்த்துகின்றேன். அவர் இன்னும் பலநூல்களை கொடுப்பாராக.

-நடராஜன்



RAJENDRAN. K.,
Editor, Kalki,
Madras - 86.

*திரு. ஏவி. எம். சரவணன் எந்நிகழ்ச்சியில் கலந்து கொண்டாலும், அல்லது அப்போது எடுக்கப்பட்ட புகைப்படத்தை நோக்கினாலும் கையைக் கட்டிக் கொண்டுதான் காட்சியளிப்பார்! "எதற்கு இந்த மனுஷன் எப்பவும் கையைக் கட்டிக்கொண்டு நிற்கிறார்?" என்று நான் வியந்ததுண்டு. இந்த நூலைப் படித்ததும் புரிந்து போயிற்று. வாழ்க்கையில் தாம் சந்திக்கும் ஒவ்வொரு சம்பவத்திலிருந்தும் பாடம் கற்க முடியும், அல்லது பண்பாடு பெற முடியும் என்பதால்தான் ஒவ்வொரு சந்தர்பத்திலும் அவர் கையைக் கட்டிக்கொண்டு, மரியாதையாக நிற்கிறார் என்பது புரிந்து போயிற்று!*

*வாழ்க்கையில் நாம் சர்வ சாதாரணமாக பெறும் அனுபவங்களைப் பற்றி ஆழ்ந்து சிந்திப்பதில்லை. ஆனால் சரவணன் சிந்தித்துப் பயனடைந்திருக்கிறார் என்பதோடு, அப்பயனை நம்முடன் இந்தப் புத்தகத்தின் வாயிலாகப் பகிர்ந்து கொள்ளவும் செய்கிறார்.*

*பள்ளி மாணவனாக விளங்கிய காலத்தில் சரவணனுக்கு விஷயங்களை கிரகித்துக் கொள்கிற ஆற்றல் முறையின்றி இருந்தது. ஆனால் தாம் புரிந்து கொண்டதை எழுத முடியாமல் சிரமப்பட்டார். பிழைகள் மலிந்திருந்ததால் மதிப்பெண்கள் குறையும். பள்ளி இறுதித் தேர்வில் இதனால் தோல்வியையே சந்தித்தார். இந்த உண்மையை ஒப்புதல் வாக்கு மூலமாக இந்த நூலிலேயே காணலாம். "அப்படிப்பட்ட சரவணனா இந்த அற்புதமான நூலை உருவாக்கியிருக்கிறார்!" என்று மலைக்கிறோம். "முயற்சி திருவினையாக்கும்" என்பதற்கு வேறு சான்று என்ன வேண்டும்?*

*வாழ்க்கையில் மேலும் முன்னேறத் துடிப்பவர்கள்; போதும் என்ற மனத்திருப்தியுடன் இருப்பவர்கள் ஆகிய இரு சாராருமே படித்து, ரசித்து, முன்னுதாரணமாகக் கொள்ளக் கூடிய நூலாக விளங்குகிறது "முயற்சி திருவினையாக்கும்"*

*கி.ராஜேந்திரன்*



RAJNI KANT
Poes Garden
Madras - 86

தங்களுடைய படைப்பான 'முயற்சி திருவினையாக்கும்' என்ற புத்தகத்தை படித்தேன். மிக்க மகிழ்ச்சியடைந்தேன். ஆச்சர்யமடைந்தேன். தங்களை நினைத்து பெருமையடைந்தேன். உங்களுடைய வாழ்க்கையில் நடந்த அனுபவங்களை ஆழமாகவும், தெள்ளத் தெளிவாகவும் வர்ணித்துள்ள விதம் என்னை மிகவும்கவர்ந்தது.

பணம், புகழ் சம்பாதிக்கலாம். ஆனால் நல்ல மனிதன் என்ற பெயர் எடுப்பது மிகவும் கடினம்.

சினிமாத் துறையில் ஏன் நீங்கள் இந்த அளவிற்கு கவுரவிக்கப்படுகிறீர்கள் என்று நான் இந்த நூலை படித்தவுடன் புரிந்துகொண்டேன்.

இந்த புத்தகத்தை எல்லோரும் படிக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறேன்.

என்றும் அன்புடன்,
ரஜினி



SATHIK. S.
Vice.Chancellor,
Madras University,
Madras.

## ஒரு கண்ணோட்டம்

சரவணன் முயற்சி திருவினையே. ''அனுபவம் என்பது, ஒரு மனிதன் வாழ்வில் என்ன நடந்தது என்பதல்ல; ஆனால் நடந்ததைக் கொண்டு அவன் என்ன செய்திருக்கிறான் என்பதே'' இந்நூல் இதற்கு ஓர் இலக்கியம். முயற்சியின் பயன் வெற்றி, நல்லதைத் திரும்பத் திரும்பச் சொல்வதின் நல் விளைவு, நம் கருத்தைப் பிறரும் கொண்டுள்ளதால் விளையும் திடமும் வலிவும், ''பரிசு பெறப் பங்கு பெறுதல் அவசியம்; தயார் செய்தல், பயிற்சி செய்தல், செயலாற்றுதல், துணை செய்வன'' என்று நான் இளைஞர்களுக்குச் சொல்லிவரும் கருத்தை இந்நூலில் ''ஹோம் ஒர்க்'' என்று சரவணன் அருமையாகத் தெளிவு செய்துள்ளார். தாய் அன்பு, அக்கறை, குழந்தை, குடும்பம், முதுமை, தெரியாத மொழியில் பேசும் சங்கடம், சுய விமர்சனம், இன்னும் நல்லவர், வல்லவர், மனம் உள்ளவர், பணம் உள்ளவர் என்றும் தொழில் துறையிலுள்ளோர் பலரைத் தொட்டுச் சொல்லும் அனுபவம். ''ஆக்கவேலைக்கு அமைதி, அவசரமின்மை, சீரான ஓட்டம் தேவை. ஆனால் அழிவு, இரைச்சல், அவசரம், சீரற்ற நிலைகளைக் கொண்டது'' என்று வாழ்க்கைத் தத்துவத்தை ''கண்ணாடியை உடைத்து'' விளக்குகிறார்.

உண்மை, எளிமை, இனிமை, கொண்ட இந்நூல் ஒரு வாழ்க்கைத் துணை என்றால் மிகையாகாது. ஆம்! முயற்சி திருவினையாக்கும். வளர்க சரவணத் தொண்டு.

சே.சாதிக்



SAVI
Editor, Savi,
Madras - 40

*'செய்வன திருந்தச்செய்' என்பதுதான் திரு. ஏவி. மெய்யப்பன் அவர்களுடைய வாழ்க்கை லட்சியம். அவர் ஒரு* Perfectionist.

*திரு. சரவணனுக்கு இரண்டு மந்திரங்கள் தெரியும். ஒன்று 'தந்தை சொல்மிக்க மந்திரமில்லை' இன்னொன்று 'முயற்சி திருவினையாக்கும்'. பண்பின், அடக்கத்தின் உருவமாக வாழ்பவர் சரவணன்.*

*பள்ளியில் தோல்வியுற்ற சரவணனை உதவாக்கரை என்று அவருடைய குடும்பத்தில் சிலர் எண்ணிய காலம் உண்டு.*

*''உதவாக்கரை' சரவணன் இன்று வாழ்க்கையில் முன்னேறி பலருக்கு உதவும் கரமாக உயர்ந்திருக்கிறார்.*

*''முயற்சி திருவினையாக்கும்'' என்ற இந்தப் புத்தகத்தில் அனுபவங்கள் தோய்ந்த உண்மைகள் பல இடம் பெற்றுள்ளன.*

*சிறு சிறு அத்தியாயங்களாக அமைந்துள்ள கட்டுரைகள் லட்டு லட்டாக இனிக்கின்றன.*

*இந்த நூலைப் படிப்பதன் மூலம் தமிழ்நாட்டில் நாலு சரவணன்கள் தோன்றினாலும் போதும் தமிழகம் பெருமைப்படும்.*

*-சாவி*



SHANTHI RANGANATHAN
Hony.Secretary
T.T.K. Hospital,
Madras - 20.

*மதிப்பிற்குரிய திரு.சரவணன்,*

*"முயற்சி திருவினையாக்கும்" என்ற புத்தகத்தைத் தாங்கள் எளிய முறையில், யதார்த்த நடையில் எழுதியிருப்பது குறிப்பிடத்தக்கது.*

*"குழந்தையும் தெய்வமும்" என்ற அத்யாயத்தில் பெரியவர்கள் நடத்தை குழந்தைகளை எப்படியெல்லாம் பாதிக்கிறது என்பதை எடுத்துக் காட்டியிருக்கிறீர்கள். இதனால், பெரியவர்கள் நடைமுறையில் நல்ல கோட்பாடுகளைக் கடைப்பிடிக்க வேண்டியது எவ்வளவு அவசியம் என்பதை மனதில் படியும்படி அழுத்தமாகச் சொல்லியிருக்கிறீர்கள்.*

*சாந்தி ரங்கநாதன்*



SIVASANKARI
Karpagam Garden,
Madras - 20.

திரு. சரவணனிடம் எனக்கு மிகவும் பிடித்த குணம் அவரது Positive approach; 'முயற்சி செய்தால் முடியாதது இல்லை' என்ற ஆக்கபூர்வமான சிந்தனை, நம்பிக்கை, தலைக்கு மேல் பிரச்னைகளும், வேலைகளும் உட்கார்ந்திருக்கும் தருணங்களில்கூட 'எப்படி இருக்கிறீர்கள்?' என்று கேட்டால் 'ஏக்தம் ஃபர்ஸ்ட் கிளாஸ்' என்கிற பதில்தான் அவரிடமிருந்து எப்போதும் உற்சாகமாய் வெளிப்படும். நான் மனம் தளர்ந்துபோன எத்தனையோ சந்தர்ப்பங்களில், ''பிரமாதமாய் இருக்கிறேன்'' என்று வாய்விட்டு பத்து தரம் சொல்லிக் கொள்ளுங்கள். நிஜமாகவே புத்துணர்ச்சி தானாக மனசுக்குள் கும்மாளமிடத் துவங்கிவிடும்'' என்று சொல்லி அவர் என்னை உசுப்பிவிட்ட நாட்கள் அனேகம்!

அந்த தன்னம்பிக்கையும், உரமும், அடுத்தவரை சமுதாயத்தை மனப்பூர்வமாக நேசிக்கும் குணமும் அடிநாதமாய் ஒலிப்பதால்தான் 'முயற்சி திருவினையாக்கும்' புத்தகம் ஒரு இனிமையான, அர்த்தமுள்ள சங்கீதமாக படிப்பவரைப் பரவசப்படுத்துகிறது என்று நான் நினைக்கிறேன்.

இந்தப் புத்தகத்தில் காணப்படும் எண்ணங்களை திரு. சரவணன் 'சூல்' கொண்ட நாளிலிருந்து, வெள்ளைத்தாளில் கருப்பு வரிகளில் பூரண வளர்ச்சி பெற்று, ஆரோக்கியமாக ஜனிக்கும் தினம் வரை கூடவே இருக்க முடிந்தது - என்னைப் பொறுத்தவரை மிகுந்த நிறைவைத் தந்த காரியம். என்னுள் புதுசாய் சில சிந்தனைப் பொறிகளை ஊதிவிட்டு மனித நேயங்களை இன்னும் இன்னும் வளர்த்துக் கொள்ள இந்த அனுபவம் உதவியிருக்கிறது - நிச்சயமாய்.

இந்த விழிப்புணர்வு சக வாசகர்களுள்ளும் தோன்ற வேண்டும் என்பதே என் ஆசை.

சிவசங்கரி.



SOUNDARA KAILASAM
24, Kasturi ranga Road,
Madras - 4.

அனுபவங்கள் வாழ்க்கையிலே
அறிவுறுத்தும் பாடங்கள்
இனிய தமிழ்நடையில்
எழிற்கட் டுரைகளெனப்
புலர்ந்து புவியிருளைப்
போக்கும் கதிரேபோல்
மலர்ந்து மனிதர்களின்
மனத்தில் நிறைகின்ற
மாட்சியினை எண்ணி
மகிழ்ச்சிமிக எய்துகிறேன்!
காட்சி வரிந்து
கடவுள் அருளாலே
மங்கலங்கள் ஓங்கி
மலைபோல் நிலையாக
எங்கள் சரவணனிங்
கென்றென்றும் வாழியவே!
நாதன் தாள்
வாழ்க

என்றென்றும் வாழியவே!

சௌந்தரா கைலாசம்



SRIPAL . S., IPS
Director General of police, Tamil Nadu
Madras-4

'முயற்சி திருவினையாக்கும்' என்ற தலைப்பில் நண்பர் சரவணன் அவர்கள் எழுதியிருக்கும் நூலைப் படித்து முடித்தவுடன் வாழ்க்கையின் பல கோணங்களை யதார்த்தமாகப் படம் பிடித்துக்காட்டும் ஒரு நல்ல நூலைப் படித்த மன நிறைவு ஏற்பட்டது. அவர் எடுத்துச் சொல்ல விழையும் கருத்துக்களை எளிய தமிழில், சரளமான நடையில், படிப்பவர் மனதில் பதியும் வகையில் கூறியிருப்பது பாராட்டத்தக்கது.

"Good Behaviour is made of Petty Sacrifices"
என்ற கருத்து இந்நூல் முழுவதும் இழையோடுவதாக எனக்குத் தோன்றுகிறது.

நட்பைப் பற்றிக் குறிப்பிடும்போது "மனைவியிடம் பேச முடியாததைக் கூட தோழனிடம் பேச முடியும். இன்பமோ, துன்பமோ எந்த ஒரு அனுபவத்தையும் பேசிப் பகிர்ந்து கொள்ள முடியும். ஆனால் நண்பனின் தகுதியை அறியாமல் நட்பை வளர்த்துக் கொள்வது மிக ஆபத்தில் முடியும்" என்ற பெரியவர் ஏவி. எம். அவர்களின் கருத்து என்னை மிகவும் கவர்ந்தது.

பெரியவர்கள், ஆசிரியர்கள், தாய் தந்தை இவர்களின் வாழ்த்தும், ஆசீர்வாதமும், யாருக்குக் கிடைக்கிறதோ அவர் வாழ்க்கை கண்டிப்பாக நல்ல முறையில் செல்வதை நான் கண்கூடாகக் கண்டிருக்கிறேன் என்று சரவணன் அவர்கள் கூறுவது தற்காலத்திற்குத் தேவையான அறிவுரையாக அமைந்துள்ளது. இவ்வாறு அரிய கருத்துக்கள் பலவற்றை நூல் முழுவதும் ஆசிரியர் எடுத்துக் கூறியிருக்கிறார்.

சமுதாயத்திற்குப் பயனுள்ள நூலாக அமையும் என்று நான் உறுதியாக நம்புகிறேன்.

-ஸ்ரீபால்



Dr.UDHAYA MURTHY M.S.,
Madras.

ஏவி. எம். சரவணன் ஒரு இனிய மனிதர் பண்பாளர். நெற்றியில் பொட்டும் அவரது வெள்ளாடையும் தூய்மையையும் அவரது வாழ்க்கை நெறிகளையும் பறை சாற்றுகின்றன.

''முயற்சி திருவினையாக்கும்'' என்ற தலைப்பில் வள்ளுவரின் வாசகத்தை வைத்து ஒரு அருமையான நூலை எழுதி இருக்கிறார் சரவணன்.

வாழ்க்கை எனும் பள்ளியில் நுழையும் இளைஞர்களுக்கும் சரி, வாழ்க்கையை தெரிந்தோ தெரியாமலோ வாழ்ந்து கொண்டிருப்பவர்களுக்கும் சரி இந்த நூல் ஒரு கையேடு; வழிகாட்டி.

ஆர்வமுடன் படித்தேன். சிலிர்த்துப் போனேன் பல இடங்களில்!

உழைப்பு, சிரத்தை, முழு ஈடுபாடு, சிதறாத கவனம் என்று வரிசைப்படுத்துபவர் - முடிவில் 'மாசற்ற ஒழுக்கம்' என்ற வார்த்தைகளைப் போட்டபோது நான் அங்கேயே நின்று போனேன், ஒருகணம்; இல்லை, பல நிமிடங்கள்!

பிறர் வயிறு எரிய - எதையும் செய்யாதே அது நம் வாழ்வைப் பறிக்கும்'' என்று எழுதும்போது நாமும் அங்கே அவருடன் நின்று விடுகிறோம். இந்தத் தாக்கம் நம்மை நிறுத்திவிடுகிறது.

''பிறருக்கு கொடுக்க நினைத்தால் உடனே கொடுத்துவிடு. ஏனெனில் தர்ம சிந்தனைகளை ஒத்திப்போட்டால் கொடுக்காமல் போய்விடுவோம்'' என்பாராம் ஏவி.எம். அப்படிப்பட்ட எண்ணங் களிலே தோய்ந்த நான், என் எண்ணங்களை வாசகர்களிலே தெரிவித்து விட்டதிலே ஒரு மகிழ்ச்சி! யான் பெற்ற இன்பம் ... பெறுக இவ்வையகம். வாழ்வெனும் பாதையிலே படிகளை எல்லாம் எப்படி இனிமையாக கடப்பது என்பதையும் அதிலே மன நிறைவையும் புனித உணர்வுகளையும் எழுப்புகிறார் சரவணன்.

இது புத்தகமல்ல; வாழ்க்கையின் ஏடுகள்.

முயற்சிகள் தோற்பதில்லை!
டாக்டர் எம்.எஸ்.உதயமூர்த்தி

Kaviarasu VAIRAMUTHU. R.
Trust puram, Madras - 24.



இது ஒரு வாழ்வியல் நூல்.

ஒரு தந்தையின் நீதிபோதனையை
நண்பனின் வார்த்தையில் சொல்லத் தெரிந்த
நாகரிக நூல்.

தனது வளமான வாழ்க்கைப் பயணத்தில்
தன்னை மேம்படுத்திய அனுபவங்களையெல்லாம்
திரு. சரவணன் அவர்கள் சமூக மேம்பாட்டுக்காக
வழங்கியிருக்கிறார்.

இந்த நூலின் தனிச்சிறப்பு என்னவென்றால்
தான் சோதித்துப் பாராத எதையும்
திரு. சரவணன் அவர்கள் சமூகத்தின் மீது
திணிக்கவில்லை.

ஏவி. எம். குடும்பம் கலைத்துறைக்கு வழங்கிய
தெல்லாம் 'கோபுரம்' என்று சொன்னால்
இப்போது திரு. சரவணன் அவர்கள் கருத்துலகத்
துக்கு வ'ழங்கியிருக்கும் இந்த நூல் அதன்
'கலசம்' என்று சொல்லவேண்டும்.

-வைரமுத்து

# நன்றியுரை



இந்தப் புத்தகத்திலுள்ள விஷயங்கள் பல வருஷங்களாகவே என் மனதில் இருப்பவை. இவைகளை 1986-லிருந்து எனக்குத் தோன்றும் போதெல்லாம் பெரும்பாலும் விடியற்காலையில் என் அருகில் மனைவியின் தூக்கத்திற்கு இடையூறு இருக்காமல் மெதுவான குரலில் அவ்வப்போது டேப்ரிக்கார்டரில் பதிவு செய்வது வழக்கம். இப்படி பல நாட்கள் இடைவெளிவிட்டு சிறிது சிறிதாக பல கேஸட்டுகளில் பதிவு செய்து வந்தேன். அவைகளை டேப்ரிக்கார்டரில் கேட்டு காகிதத்தில் எழுதி, டைப் செய்து வாங்கியவர் எங்கள் ஏவி.எம். நிறுவனத்தில் 45 வருடங்களாக பணியாற்றி வரும் விளம்பர இலாகாவில் பணியாற்றும் என் உதவியாளர் எஸ்.பி.அர்ஜுனன்.



திரு.ஏ.ஸி.திருலோகசந்தர், எனது நீண்டநாள் நண்பர். Friend, philosopher and guide என்பது போல எனக்கு பல விஷயங்களை அவ்வப்போது கூறி ஊக்குவித்தவர். நான் பல பொறுப்புக்களை ஏற்கக் காரணமானவர்களில் ஒருவர். அவரிடம் தெரிந்துகொண்ட பல விஷயங்கள் எனது எழுத்துக்களிலும், பேச்சுகளிலும் பிரதிபலிக்கும். இப்புத்தகத்திலும் பல இடங்களில் அவரது சாயல் இருக்கும்.



50 ஆண்டுகளுக்குமேல் என் நண்பராக இருக்கும், நாங்கள் ''ராஜா'', ''ஆர்.வி.'' என்று அன்பாக அழைக்கும் திரு.ஆர்.வெங்கட்ராமன், எப்போதும் வெள்ளை பேண்ட், வெள்ளை ஷர்ட் அணிவார். இப்புத்தகம் பற்றிய கலந்துரையாடல்களில் பங்கேற்று ''இது மாதிரி சொல்வாயே'' ''இதைப்பற்றிச் சொல்ல விட்டுவிட்டாயே'' என்று நினைபடுத்தி பல விஷயங்களை இந்தப் புத்தகத்தில் இடம்பெற உறுதுணையாக இருந்தவர்.



நாங்கள் டைப் செய்து வைத்திருந்த விஷயங்களைப் படித்துவிட்டு Positive approach ல் ''பல புத்தகங்கள் வெளிவந்தாலும் இது அவற்றிலிருந்து மாறுபட்டது. உங்கள் வாழ்க்கையில் ஏற்பட்ட நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டது. ஆகையால் கட்டாயம் புத்தகமாக அச்சிடவேண்டும்'' என்று ஊக்கமளித்தவர் திருமதி. சிவசங்கரி. இவரது தூண்டுதல் இல்லாவிட்டால் இந்தப் புத்தகம் அச்சிடப்பட்டிருக்காது.



இவரது வழிகாட்டுதலோடு டைப் செய்து வைத்திருந்த எல்லா விஷயங்களையும் பிரித்து எழுதி, பல புதிய சம்பவங்களைச் சேர்த்து, திரும்பத் திரும்ப சொல்லியிருந்தவற்றை சரிசெய்து, பல இடங்களில் சரியான வார்த்தைகளை உபயோகித்து, முன்னுரையையும் 32 அத்தியாயங்களையும் பிரித்து ஒழுங்குப்படுத்தி டைப் செய்து கொடுத்தவர், திருமதி. லலிதா வெங்கடேஷ்.



இப்புதகத்தின் ஒவ்வொரு அத்தியாயத்தையும் படித்து என்னைப் பாராட்டி. அவைகளுக்குத் தகுந்த வரைபடங்களை கொடுத்தவர் ஓவியர் கோபுலு.



பத்திரிக்கைகளில் இவற்றை பிரசுரிக்கலாமா என்று நினைத்தபோது, எங்கள் குடும்ப நண்பர் திரு. ஆர்.நாராயணன் அவர்கள் மூலமாக திரு. எஸ்.ஏ.பி.அண்ணாமலை அவர்களை அணுகிய போது, அவரும் படித்து பாராட்டி நான்கு வாரங்கள் சில அத்தியாங்களின் பகுதிகளைப் பிரசுரிக்கச் செய்தார். தவிர 21-2-91 தேதியிட்ட குமுதத்தின் தயாரிப்பு பொறுப்பை எனக்குத் தந்து அதில் என் கருத்துக்களையும் கட்டுரைகளையும் வெளியிட்டு என்னை கௌரவித்தார்.



தொடர்ந்து ராணி வார இதழில் பிரசுரிக்க திரு. மாரிசாமி அவர்களைத் தொடர்பு கொண்டேன். அவரும் 24 வாரங்கள் தொடர்ந்து ஒவ்வொரு வாரமும் ஒரு பக்கமாக நல்லமுறையில் தொகுத்து இக் கட்டுரைகளின் முக்கிய பகுதிகளை வெளியிட்டார். திரு. சிவந்தி ஆதித்தன் அவர்களும், திரு. சண்முகநாதன் (தினத்தந்தி ஆசிரியர்) அவர்களும் இதற்கு ஒத்துழைப்புத் தந்தார்கள்.



ராணி வாசகர்கள் பலர் கடிதம் மூலமாகவும், போனிலும், சிலர் நேரிலும் பாராட்டினாலும் அவற்றிற்கு மணி மகுடமாக விளங்கியவர் திரு. கே.ஏ.கே. அவர்கள். அரசு வேலைகளுக்கு மத்தியிலும், எந்த ஊரில் இருந்தாலும் 24 வாரங்களுக்கும் வாரம் தவறாமல் ஒவ்வொரு கட்டுரையையும் பாராட்டி கடிதம் எழுதி புத்தகம் வெளியான மறுநாளே எனக்குக் கிடைக்கும்படி அனுப்பி வைத்து, பல புதிய கருத்துகளும், மேற்கோள்களும் எடுத்துக் காட்டி ஊக்கமளித்தவர்.



புத்தகமாக உருவாக்க முடிவு எடுத்தபோது அதற்கு வடிவமைப்பு நிர்ணயித்து அச்சுப்பிழைகளைச் சரிபார்த்து, வார்த்தைகள் முழுமையாக அச்சாக ஒவ்வொரு பக்கத்தையும் பார்த்து ஆலோசனைகள் கூறியவர் நண்பர் திரு.கவியரசு வைரமுத்து.



புத்தகத்தின் ஒவ்வொரு பக்கத்திற்கும் பொருத்தமான வரைபடங்களையும், புகைப்படங்களையும் சேர்த்து கலையம்சத்துடன் உருவாக்கியவர் திரு.உகி அவர்கள் (எங்கள் ஆர்டிஸ்ட் திரு.உ.கிருஷ்ணன்).



ஆரம்பம் முதல் எல்லாவற்றிற்கும் எனக்கு உதவியாக இருக்கும் என் நேர்முக உதவியாளர் எங்கள் நிறுவனத்தில் 30 வருடங்களாக பணியாற்றி வரும் திரு.என்.கிருஷ்ணன்.



புத்தகமாக வெளியிட நினைத்தது முதல் ஒவ்வொரு கட்டத்திலும் என்னென்ன செய்யவேண்டும் என்பதை முன்னதாக தீர்மானித்து சம்பந்தப்பட்ட எல்லோருடனும் கலந்து பொறுப்பெடுத்துக் கொண்டு செயலாற்றியவர் எங்கள் ஸ்டுடியோவில் பணியாற்றும் திரு.ஏ.ஆர்.தியாகராஜன்.



இப்புத்தகத்தின் விற்பனைக்கு பொறுப்பேற்றுக் கொண்டுள்ள திரு.வானதி திருநாவுக்கரசு, மற்றும் இப்புத்தகம் வெளிவர ஆலோசனைகள் கூறி பாராட்டுத் தெரிவித்த நண்பர்களுக்கும் எங்கள் நிறுவனங்களைச் சேர்ந்தவர்களுக்கும் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்வதில் பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

